சுய முயற்சியால் முன்னுக்குவந்து

கோடீச்வரனான ஏழை விவசாயிச்

சிறுவனின் வாழ்க்கைக்கதை.

# சிறுதுளி பெருவெள்ளம்

தமிழில்

சி. சீநிவாசன்



# சிறுதுளி பெருவெள்ளம்

நைஞுபிரவுன் பேக்கர்

தமிழாக்கம்

சி. சீநிவாசன்



ஜோதி நிலையம்

சென்னை-5

# பதிப்புரை

'சிறுதுளி பெரு வெள்ளம்' என்ற இந்நூல், வாழ்க்கையில் தன் சுய முயற்சியால் முன்னுக்குவந்து கோடீச்வரனான ஒரு ஏழைக் குடியானவச் சிறுவனின் வாழ்க்கையே ஆகும்.

சென்னை சைனா பஜாரில் "எந்த ஜாமான் எடுத்தாலும் ரண்ட்ரைய்ணா" என்று கூறி தள்ளுவண்டிகளில் பலர் வியாபாரம் செய்வதை நீங்கள் கண்டிருக்கலாம். இவ்வாறு பல தரப்பட்ட பொருள்களை ஒன்று குவித்து அதை ஒரு குறிப்பிட்ட விலையில் விற்பனை செய்ய வேண்டும் என்ற புதிய கருத்தை முதல் முதல் உண்டாக்கியவர் ஃபிராங்க் வுல்வொர்த் என்ற வணிக மேதைதான். சாமான்களை பத்து சத விலைக்கு விற்று அதனால் அமெரிக்க நாடெங்கும் நூற்றுக்கு மேற்பட்ட கிளை ஸ்தாபனங்களை நிறுவி இறுதியில் நியூயார்க் நகரில் வானளாவும் 'வியாபாரக் கோபுரம்' ஒன்றையும் கோடிக்கணக்கான பணச் செலவில் கட்டிமுடித்து அழியாத புகழ்பெற்ற ஃபிராங்க் வுல்வொர்த் ஓர் ஏழை விவசாயியின் மகன்தான். வாழ்க்கையில் எவ்வளவு இன்னல்களுக்கிடையே அவன் மனம் தளராமல் தனது லட்சியத்தை அடைய தீவிரமாக பாடுபட்டான் என்பதையே இந்நூல் விவரிக்கிறது. 'அவனவன் தலையெழுத்துப் போல் ஆகும்' என்ற வேதாந்த மனோபாவத்தை தமது குழந்தைகளிடையே வளர்க்கும் பெற்றோரும், பள்ளி படிப்பின் நோக்கம் சர்க்கார் உத்தியோகம் தான் என்று நினைக்கும் நமது இளைஞர்களும் இந்நூலை படித்து பயன்பெற வேண்டும் என்பதே இந்த வெளியீட்டின் நோக்கம். இதை மொழிபெயர்த்து உதவிய சுதேசமித்திரன் உதவியாசிரியர் சி. சீனிவாசனுக்கு எங்கள் நன்றி உரித்தாகும்.

பதிப்பாசிரியர்

# 1

இன்னும் இருள் பிரியவில்லை. இருந்தபோதிலும், படுக்கையை விட்டு எழுந்திருக்க நேரமாகிவிட்டது என்பதை ஊகிக்க முடிந்தது; ஃபிராங்கினுல். பின்புறக் கதவு அறைந்து மூடப்பட்டதுதான் அவனை விழிக்கவைத்தது. மாடு கன்றுகளுக்குத் தீனி வைக்கத் தந்தை சென்றுள்ளார் என்பதை அதிலிருந்து அவன் தெரிந்துகொண்டான். கீழே சமையலறையில் அடுப்பு மூடிகளைத் தாயார் தட்டி ஆட்டும் ஒலியும் அவன் காதில் விழுந்தது. விசுக்கெனப் படுக்கையிலிருந்து குதித்தெழுந்தான்; ஜில்லென்று இருந்த வெறுந்தரையைக் கால்கள் தொட்டவுடன் அவன் உடல் சற்றே சிலிர்த்தது.

பறவை இறகுகளாலான கனமான, கதகதப்பான மெத்தையில் சௌகரியமாகச் சுருட்டிப் படுத்துக்கொண்டு தொடர்ந்து தூங்கினுன், ஆறு வயதேயான சார்லி. அவனுடைய அண்ணனை ஃபிராங்க் சிறிதும் ஈவு இரக்கமின்றிப் போர்வையை இழுத்தெறிந்த போது சார்லி அசைந்து கொடுத்து முனகினுன்.

"எழுந்திருக்க நேரமாகிவிட்டது, சார்லி! இன்னும் என்ன சோம்பல்? உம், எழுந்திரு!"

முன்னிலும் அதிகமாகச் சுருட்டிச் சுருக்கிக் கொண்டு தலையணையில் முகம் ஆழப் புதைய, நழுவி

விட்ட போர்வைக்காகத் துழாவலானுன் சார்லி. "போ, போய்விடு! நான் தூங்க போகிறேன்" என்முன் அவன்.

"அப்படியானுல் சரி நன்ருகத் தூங்கு" என்று வெறுத்துச் சலித்துக் கூறினுன், ஃபிராங்க். 'எப்படியும் நீ தேவையில்லை எனக்கு. உன்னை வீட்டிலேயே விட்டுவிட்டு அப்பாவுடன் நான் நகரத்திற்குச் செல்ல முடியும், தெரிந்துகொள். அம்மாவின் பிறந்த தினத்துக்கான பரிசை நானே தேர்ந்தெடுத்துவிடமுடியும். வேண்டுமானுல் நாள் முழுவதும் தூங்கேன், யாருக்கு என்ன?"

"ஐயையோ, ஃபிராங்க்! நான் மறந்தேபோய்விட்டேனே!" படுக்கையிலிருந்து துள்ளியெழுந்த சார்லி, முதல்நாளிரவு நாற்காலிமீது போட்டிருந்த தன் ஆடைகளைத் தேடித்தடவத் தொடங்கினுன்.

அதற்குள் ஃபிராங்க் அரைவாசி உடுத்திக்கொண்டு விட்டான். காலும் கையும் நீளமாயுள்ள குளிர்கால உள்ளங்கிகளுடனேயே உறங்கியிருந்தனர், சிறுவர் இருவரும். ஆகவே, அப்போது அவர்கள் செய்ய வேண்டியிருந்ததெல்லாம் நீளமான கறுப்புக் காலுறைகளை மாட்டிக் கொள்வதும், செம்பழுப்புநிற 'ஜீன்' களை அணிவதும்தான். கீழே, சமையலறையில் அடுப்பினருகே சூடேறிக்கொண்டிருந்தன, அவர்களுடைய ஜோடுகள். அவர்கள் நகருக்குச் செல்ல இருந்ததால் சுத்தமான சட்டைகளைத் தாயார் இஸ்திரி போட்டுத் தயாராக வைத்திருப்பாள் என்பது அவர்களுக்குத் தெரியும்.

அடுப்பில் பன்றி, இறைச்சி, முட்டைகள், உருளைக் கிழங்கு முதலியன பொறிப்பதினுல் எழுந்த மணம் சமையலறையை நிறைத்து நின்றது. சூடான அடுப் படியில் நின்றதால் ஸ்ரீமதி வுல்வொர்த்தின் அழகிய முகம் சிவந்திருந்தது; அப்போதுதான் அடுப்பி

லிருந்து ஒரு பெரிய தட்டு நிறைய மோர்ப் பிஸ்கோத்துகளை இறக்கிக்கொண்டிருந்தாள் அவள்.

சகோதரர் இருவரின் தலைகளும் தெரிந்ததும், "போங்கள், பையன்களா! சீக்கிரம் முகம் கழுவிக் கொண்டு வாருங்கள்! போகும்போது அப்படியே உங்கள் அப்பாவையும் கூப்பிடுங்கள். காலையுண்டி தயாராக இருக்கிறது" என்றாள், ஸ்ரீமதி வுல்வொர்த்.

கனமானவையும், பசுத்தோலினால் ஆனவையுமான தங்கள் ஜோடுகளைப் போட்டுக்கொண்டபின் சிறுவர் இருவரும் குழாய்க் கொட்டகைக்குச் சென்றனர். ஒரு வாளி நிறையக் குளிர்ந்த தண்ணீரைச் சேந்தினர். ஒரு கள்ளிப்பெட்டியின் மீது வைக்கப்பட்டிருந்த தகரத் தட்டில் கழுவிக் கொண்டனர். தோல் வெடித்திருந்த அவர்களுடைய கரங்கள் காரமான மஞ்சள்நிற சோப்பினால் எரிச்சலடைந்தன. ஆயினும் அதைச் சிறிதும் பொருட்படுத்தாமல் மும்முரமாக அழுத்தித் தேய்த்தனர். கைகள் சுத்தமாயிருக்க வேண்டும் என்பதில் மிகுந்த கண்டிப்பு உடையவளாயிற்றே, அவர்களுடைய தாயார்! நுண்ணிய பற்கள் கொண்ட சீப்பைத் தண்ணீரில் தேய்த்தெடுத்துத் தலைமயிரைப் படியவைத்தனர். பரட்டைத் தலையைக் கண்டாலும் பிடிக்காது, அவர்களுடைய அன்னைக்கு.

அவர்கள் கழுவி முடிக்குமுன் அங்கு வந்து சேர்ந்தார், அவர்களுடைய தந்தை. உரம் பெற்று முறுக்கேறியிருந்த தம் கைகளில் சோப்பு நுரையைத் தேய்த்தவாறு, 'முளைத்து மூன்று இலைகூட விடாத நீங்கள் எதற்காக என்னோடு தொத்திக் கொண்டு நகரத்துக்கு வர விரும்புகிறீர்களோ, எனக்கு விளங்கவில்லையே!" என்று அவர் முணுமுணுத்தார். "அங்கே, சதுக்கத்தில் குளிர் உலுக்கியெடுத்துவிடும். பேசாமல், உங்கள் அம்மாவுடன் வீட்டிலேயே தங்குவதுதான் நல்லது."

"அப்படியா? நாங்கள் நன்றாகப் போர்த்துக்

கொண்டு வருகிறேம் அப்பா!'' ஆர்வம் மேலிட டவனய் உறுதி கூறினன் ஃபிராங்க். "நீங்கள்தான் நாங்கள் வரலாம் என்றீர்களே, அப்பா?''

கணத்தவாறு கதகதப்பாயிருந்த சமையலறைக்கு அவர்களை வுல்வொர்த் இட்டுச் சென்றர் அவர்கள் அனைவரும் விரைவில் வயிருர உண்டு முடித்தனர். அப்போது அவர்களில் யாரும் பேசவேயில்லை; ஏனெனில், சாப்பிடும்போது பேசுவது நியூயார்க் ராஜ்ய விவசாயிகளுக்கு வழக்கமல்ல. மற்றெந்தப் பண்ணை வேலையையும் போலவே சாப்பாட்டையும் அவர்கள் ஒரு வேலையாகவே கருதினர்கள்; ஆகவே, அவ்வேளை யில் பேச்சு குறுக்கிட்டால் வேலை மெதுப்படுமென நினைத்தார்கள். பையன்களும், அவர்களுடைய தந் தையும் உள்ளங்கிகளுடனேயே உட்கார்ந்து உணவு உண்டார்கள் தாயார் தயார்ப்படுத்திவைத்திருந்த தூய சட்டைகளில் முட்டைக் கறைகள் ஏற்பட்டு விடச் சந்தர்ப்பம் அளிக்கலாமா?

சாப்பிட்டு முடித்தபின் அந்தச் சுத்தமான சட்டைகளை அவர்கள் உடுத்திக்கொள்ளலாயினர். நீல நிற முரட்டுத் துணியாலானது தந்தையின் சட்டை; வர்ணம் மங்கியிருந்தபோதிலும் சுத்தமாகவும், சுருக்கம் இல்லாமலும் இருந்தது. பையன்கள் போட்டுக் கொண்டவை உண்மையில் சட்டைகளே அல்ல. அப் படி அழைக்கப்படுபவை அல்ல அவை; 'வெயிஸ்டு'கள் என்பதே அவற்றின் பெயர். பின்புறம் அவை தொங்கு வதில்லை; இழு கயிறு கொண்டு இறுக்கப்பட்டு இடை யுடன் இணைக்கப்பட்டிருந்தன. இருவரின் சட்டை களும் வெள்ளைக் 'காலிகோ' துணியினலானவை. ஃபிராங்கின் சட்டையில் சிவப்பு நட்சத்திரங்கள் சில போடப்பட்டிருந்தன; சிறுவன் சார்லியினுடையதிலோ நீல நிறத்தில் குதிரைலாட வடிவங்கள் பொறிக்கப்பட் டிருந்தன.

தந்தையின் பழைய கம்பளி உடுப்புக்களினின்று வெட்டியெடுக்கப்பட்டு வீட்டிலேயே தைக்கப்பட்டவையான 'ஜாக்கெட்டு'களை அந்தச் சட்டைகளின் பேரில் சிறுவர் அணிந்தார்கள். கையினுல் பின்னப்பட்ட நீளக் குல்லாய்கள், விரல்களற்ற கையுறைகள், புடைத்தெழும்பி நிற்கும் பெரிய அளவிலான கழுத்துக் குட்டைகள் ஆகியவற்றையும் அவர்கள் தரித்துக் கொண்டார்கள். இவ்வாறு உடை உடுத்துத் தயாரானதும் தந்தையைப் பின்பற்றிக் களஞ்சிய முற்றத்துக்குச் சென்றனர், சிறுவர் இருவரும்.

சக்கரங்களுக்குப் பதிலாக வழுக்குப் பட்டைகள் பொருத்தப்பட்ட பண்ணைக் கட்டை வண்டியான 'பங்' அங்கே மரக்குவியலைச் சுற்றி மிதிபட்டிருந்த பனித்திரையில் நின்றுகொண்டிருந்தது. அடுப்பளவிலான மரக்குச்சிகள் அதில் முதல்நாளிரவே உயரமாக அடுக்கப்பட்டிருந்தன. அந்தப் 'பங்! வண்டியில் தங்கள் குதிரைகளான மாலியையும் டானையும் பூட்டுவதில் தங்கள் தகப்பனுருக்குத் துணை செய்தனர், இரு பாலகரும்.

கந்தலான சில பழைய மெத்தை விரிப்புகளையும் நீண்டு குறுகிய கழுத்துச் சுருக்குகளையும் கைநிறைய ஏந்திக் கொண்டு ஸ்ரீமதி வுல்வொர்த் வெளியே வந்தாள். "அப்பப்பா, என்ன குளிர்! சற்று இருங்கள்; அடுப்பில் சில செங்கற்களைச் சூடேற்றிவைத்திருக்கிறேன். ஓடிப்போய் அவற்றை எடுத்துவா, ஃபிராங்கின் காலடியில் வைத்துக்கொள்ள அவைதேவைப்படும்" என்ருள்.

இறுதியில் ஒருவாருக தந்தையோடு வண்டியின் பீடத்தில் அமர்ந்தனர், இரு சிறுவரும். விரிப்புகளை வசதியாகப் போர்த்தியவாறு சூடான செங்கற்களின் மீது பாதங்களை வைத்துக்கொண்டனர். நாக்கைச் சொடுக்கி ஒலியெழுப்பி குதிரைகளைக் கிளப்பினுர்

வுல்வொர்த். பண்ணை முற்றத்தினின்று அந்தப் 'பங்' வண்டி வெளிப்பட்டு, பிரதான சாலையை அடைந்தது.

அவ்வளவு விடியற்காலையில் வேறெந்த வண்டியும் அவ்வழி சென்றிருக்கவில்லை. எனவே, உறைந்திருந்த சேற்றின் மீது புதிதாகப் பெய்திருந்த வெண் பனி சமமாகப் பரவிக்கிடந்தது. இருபுறமுமிருந்த வேலிச் சட்டங்களுக்கிடையே சீரான பாதையொன்றைச் சமைத்திருந்தது, ' அந்தப் பனி. சூரியன் உதித்துவிட்டபோதிலும் சாம்பல் நிற மேகங்களினால் மறைக்கப்பட்டிருந்தான். உறையவைக்கும் ஊதல் காற்று அந்தப் பையன்களின் மூக்குகளைச் சுண்டி, அவர்களுடைய கண்களில் நீர் ததும்பச் செய்தது.

நகருக்கான அந்த நெடும் பயணத்தில் நடந்த சம்பாஷணை சொற்பமே. வுல்வொர்த் எப்போதுமே வாய் திறவாதவர். அதிலும் சமீப காலத்தில் ஏற்பட்ட கவலைகள் பல அவரை முன்னிலும் மௌனியாக்கின. காலம் கெட்டுக் கிடந்தது; உள்நாட்டுப் போர் வேறு உளைத்தது ஒவ்வொருவர் மனத்தையும். இவை தவிர, தன் பண்ணையை அடைமானம் வைத்திருந்ததால் கட்டவேண்டியிருந்த கடன் தவணைகளைச் செலுத்துவது அவருக்குப் பெரும்பாடாக இருந்தது. தங்களுடைய சிறுபிள்ளைப் பேச்சினால் தந்தையின் சிந்தனை கலைக்கப்பட்டுவிடக்கூடாது என்பதை அந்தப்பையன்கள் நன்கு உணர்ந்திருந்தனர்.

பண்ணைகளின் வேலிகள் முடிவடைந்து, வாட்டர்டவுனின் கச்சிதமான முளைத்தொடர் தொடங்குவதற்கு அவர்கள் வெகு தூரத்தைக் கடக்கவேண்டியிருந்தது. அப்பகுதியின் தலைமை ஸ்தலம் அதுவே; சுறுசுறுப்பு மிக்க 7000 மக்கள் வசித்த சிற்றூர். நடுவில் நீதி மன்றத்துடன் இருந்த சதுக்கத்தைச் சுற்றி வர்த்தகப் பகுதி அமைந்திருந்தது. நீதிமன்றத்தின்

மைதானத்தைச் சுற்றிலும் நடப்பட்டிருந்த வேலிச் சட்டத்தில் தங்கள் மாடு, குதிரைகளைக் கட்டிவிட்டு அங்கேயே திறந்தவெளிச் சந்தையைத் தொடங்கி விடுவது விவசாயிகளின் வழக்கம்.

வுல்வொர்த்தின் வண்டி போய்ச் சேர்ந்தபோது மரம் அல்லது தீவன வகையறு ஏற்றப்பட்டிருந்த பல 'பங்'குகள் ஏற்கெனவேயே அங்கு வந்திருந்தன. வேலிச் சட்டத்தில் தன் குதிரைகளை அவர் கட்டிய போது, அடுத்திருந்த விவசாயி தன்னைக் குரோதத்துடன் நோக்குவதை அவர் கண்டார்.

" நகருக்கு இன்று நிறைய மரம் வந்திருக்கிறது. ஆனல், அதை வாங்கத்தான் ஆள் இல்லை. கட்டுக்கு ஒரு டாலர் விதம் நம் மரம் இன்று விலை போகுமானல் நாம் அதிருஷ்டசாலிகள்தான், வுல்வொர்த்" என்றான் அந்த ஆசாமி.

நிதானத்துடன் தலையை ஆட்டினர் வுல்வொர்த். " இப்போதெல்லாம் நம் மரங்களை வெட்டுவதற்குரிய கூலிகூடக் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. இந்தப் பாழும் சண்டைதான் அனைத்தையும் கெடுத்து நாசமாக்கி விட்டது. உங்கள் பையனிடமிருந்து என்ன செய்தி வந்திருக்கிறது, மிஸ்டர் மீன்ஸ்? அவன் கிராண்டின் படையில்தானே இருக்கிறன்?"

அந்தப் பேர்வழியும் தலையை ஆட்டினன். " கடைசியாக நான் கேள்விப்பட்டது, டோனெல்ஸன் கோட்டைக்கான போராட்டத்தில் எவ்வித ஊனமுமின்றி அவன் உயிர் பிழைத்துவிட்டான் என்பது தான். ஆனல் அடுத்தபடி அவனை கிராண்ட் எங்கு கொண்டு செல்லப்போகிறரோ, அது அந்த ஆண்டவனுக்குத்தான் தெரியும். இதோ என் எப்பிடமிருந்து வந்த கடைசிக் கடிதம்."

இருப்புக் கொள்ளாமல் தவித்தனர் இரு சிறுவரும். தந்தையின் அனுமதியின்றி அவர்கள் வண்டியை

விட்டு இறங்குவதற்கில்லை. பெரியவர்கள் பேசும் போது குறுக்கிடத்தான் முடியுமா ?

கடிதத்தை அந்த விவசாயி தேடிக்கொண்டிருந்த போது தன் தந்தையின் சட்டைக்கையைப் பிடித் திழுத்தான் ஃபிராங்க் : " நானும் சார்லியும் சற்று ஊரைச் சுற்றிப் பார்த்து வரலாமா, அப்பா ?!"

" ஓ, போய்வரலாமே ! ஆனால் நீங்கள் நல்லபடி நடந்துகொள்ள வேண்டும். எங்காவது தொலைதூரத் துக்குப் போய்விடக்கூடாது. இந்தச் சுமையைக் கழித்துக் கட்டியவுடனேயே நான் புறப்பட்டுவிடு வேன் " என்று கூறிய வுல்வொர்த், மீண்டும் மீன்ஸின் பக்கம் திரும்பினார். சகோதரர் இருவரும் வண்டியி லிருந்து சரிந்திறங்கி ஓட்டம் பிடித்தனர்.

" கார்ட்டரின் கடை இந்தத் தெருவில்தான் இருக்கிறது " என்று சிறுவன் சார்லி கூறினான், திருப்பத்தை எட்டியதும்.

ஆனால் ஃபிராங்க் அந்தத் தெருவில் திரும்ப வில்லை. " கார்ட்டர் கடையைப் பற்றிக் கவலைப் படாதே. என்னோடு வா " என்றவனாய்ச் சதுக்கத்தின் குறுக்கே அவன் நடக்கலானான்.

வாட்டர் டவுனிலேயே பெரியதும்நேர்த்தியானது மான கடை, ஆக்ஸ்பரி அண்ட் மூர் மூலைக்கடை தான். அன்றுடம் தத்தம் அலுவல்களுக்காக வித விதமான ஆடைகள் உடுத்துவோரும், விருந்துகள், வரவேற்புகளுக்கு உயர்தர உடைகள் தேவைப்பட் டோருமான பணக்காரர்கள்தான் அதன் வாடிக்கைக் காரர்கள். ஏழை விவசாயிகளோ, ஒதுக்குப்புறத் தெருவொன்றில் பழைய நாளைய முறையில் நடந்த கார்ட்டர் கடையையே கட்டிக்கொண்டு காலந்தள்ளி னர். அங்கே, வேலை நேர உடுப்புகள், காலிகோத் துணி, உறுதியான இரும்புச் சாமான்கள் முதலிய சகல பொருள்களையும் கார்ட்டர் கிழவனார் விற்று

வந்தார், தங்கள் தந்தையுடன் அந்தக் கடைக்கு அடிக்கடி அந்தச் சிறுவர் இருவரும் சென்றது உண்டு; மூலைக்கடையினுள் ஒருபோதும் நுழைந்ததில்லை.

நேராக அதை நோக்கித்தான் அப்போது சென்றான், ஃபிராங்க். அதன் வாயிலை அடைந்ததும் சற்று நின்று, சிவப்புநிறத் துணியில் புள்ளிகள் போட்ட தன் கைக்குட்டையை வெளியிலெடுத்தான். அதில் இருந்தன அவை—அதன் ஒரு மூலையில் போடப்பட்டிருந்த பெரிய முடிச்சில் பளபளத்தன, ஐந்து செப்புப் பென்னிகள். அந்தக் காசுகளில் அவனுடையவை நான்கு; மற்றொன்று சார்லியினுடையது.

" சரி வா, தம்பி. உள்ளே போகலாம்' என்று பணித்தான் ஃபிராங்க்.

"ஐயையோ, ஃபிராங்க் ! இந்தக் கடைக்குள்ளேயா போகலாம் என்கிறாய் நீ ?"

" ஏன் போகக் கூடாது ? நாமும் வாடிக்கை காரர்கள்தான், இல்லையா ? சும்மாச் சுற்றிப்பார்க்க நாம் விரும்பவில்லை; வாங்கத்தான் போகிறோம். அம்மாவின் பிறந்த நாளுக்காக ஏதாவது ஒரு நல்ல பொருளை வாங்கவே நாம் ஆசைப்படுகிறோம். அது இந்த இடத்தில்தான் கிடைக்கும். சரி சரி வா, கோழைக் கன்றுக்குட்டியைப்போல சதா என் கையைப்பிடித்துக் கொண்டு வராதே. நாம் வாடிக்கைக்காரர்கள். ஞாபகம் இருக்கட்டும்."

அந்தக் கடையினுள் கதகதப்பாக இருந்தது; வெளிச்சம் மிகுந்திருந்த அதை, மாவு, சாயம், பூச்சி மருந்து உருண்டைகள், சோப்பு ஆகிய அனைத்தின் வாசனைகளும் கலந்ததால் உண்டான இனிய மணமொன்று நிறைந்திருந்தது. அந்தச் சிறு பையன்கள் இருவரையும் அங்கே யாரும் பொருட்படுத்திகவனிக்கவில்லை. முரட்டுத்துணியாலான தங்களுடைய கிராமாந்தர உடைகளில் அவ்விடத்துக்கு அவ்வளவு

பொருத்தமற்றவர்களாக இருந்தனர், அவ்விரு சிறு வரும்.

படபடவெனப் பேசிப் பிரமாதப்படுத்திய பருத்த பெண்மணி யொருத்தியின் குட்டையான குண்டுக் கரங்களில் கன்றுத்தோலாலான ஒரு ஜதை ஃபிரெஞ்சுக் கையுறைகளைப் போட்டுப் பொருத்திக்கொண்டிருந்தாள், ஒரு சிப்பந்திப் பெண். அகன்ற 'வெல்வெட்' பாவாடையையும், நெருப்புக் கோழி இறகுகளாலான அழகிய சிறு தொப்பியையும் அணிந்திருந்த எழிலரசியொருத்திக்கு பூப்பின்னல் துணியொன்றை மற்றொரு மங்கை காட்டிக்கொண்டிருந்தாள். கடையின் மறுபுறத்தில் இருந்த ஆடவர் பிரிவில், கறுப்புத் துணியொன்றை ஆல்பர்ட் இளவரசர் பாணியில் கோட்டுத் தரித்திருந்த ஒரு இளைஞன் ஒரு கனவானுக்குக் காட்டுவதற்காக விரித்துப் போட்டுக் கொண்டிருந்தான். பெரும்பாலும் நன்கு உடுத்திருந்த மாதரும் சில வாடிக்கைக்காரர்கள், பண்டங்களைப் பார்த்தவாறும், சம்பாஷித்தவாறும் நடைபாதையில் திரிந்துகொண்டிருந்தனர்.

" இப்போது நாம் என்ன செய்வது?"—காதோடு கேட்டான் சார்லி.

"ஏன், நிதானமாகச் சுற்றிப் பார்ப்போமே!" "என்று ஃபிராங்க் உரக்கப் பதிலளித்தான். "மற்றவர்களும் இதைத்தான் செய்கிருர்கள். சுற்றிப் பார்த்துக்கொண்டே இருந்தால் நமக்கு வேண்டியதைக் கண்டு பிடித்துவிடலாம்."

அவ்வாறே அவர்கள் சுற்றிப் பார்த்தார்கள் ஏராளமான பண்டங்களைப் பார்த்தார்கள், ஆனால் அவர்கள் கண்டதனைத்தும் உற்சாகத்தை உறிஞ்சுவனவாகவே இருந்தன. அங்கு இருந்த உடைப் பொருள்களும், கையுறைகளும், பின்னல் துணிகளும் தங்கள் சக்திக்கு மிஞ்சியவை என்பது, யாரையும்

கேட்க அவசியமின்றியே ஃபிராங்குக்கு விளங்கியது ஆகவே ஐந்து சதங்களுக்கு இங்கு என்ன கிடைக்கும் என்பதை அவன் அறியக்கூடவில்லை.

அது எப்படி அவனுக்குத் தெரிந்திருக்கமுடியும்? பணம் படைத்த தங்கள் மாமா சில பென்னிகளைக் கொடுத்தபோதன்றி வேறெப்போதும் செலவழிக்கப் பணம் இருந்ததில்லை, வுல்வொர்த்தின் அந்தச் சிறு மகன்களுக்கு. அந்தப் பென்னிகளைப் பதுக்கிவைத்து, தங்கள் கிராமக் கடையிலேயே ஒவ்வொரு காசாகக் கொடுத்து எதையாவது வாங்குவது அவர்கள் வழக்கம். ஒரு பென்னிக்கு அரை டஜன் கோலிக்குண்டு கள், அல்லது நான்கு ஜவ்வு மிட்டாய்கள் கிடைக்கும். ஃபிராங்குக்குப் பத்து வயதாகிவிட்டபோதிலும் சேர்ந்தாற்போல மூன்று பென்னிகளை எந்நாளும் செலவிட்டதாக அவனுக்கு நினைவில்லை. ஐந்து பென் னிகளை அவன் செலவழித்ததில்லை என்பது நிச்சயம். எனவே, அவற்றுக்கு உண்மையிலேயே பெரியதொரு பண்டம் கிட்டியாகவேண்டுமென அவன் நினைத்தான்.

ஆயினும் அப்போது தன்னைச் சுற்றிலும் இருந்த பெரிய பண்டங்கள் எதையும் வாங்கமுடியாது என்பதையும் அவன் அறிந்தான். அவன் தம்பியைவிட அவனுக்கு உலக அறிவு இருந்தது.

“ அதை நாம் வாங்கவே போவதில்லையா,என்ன?” —எரிச்சலுடன் சார்லி கேட்டான். “ எதையாவது வாங்கேன், ஃபிராங்க்.”

“ அம்மாவின் பிறந்த நாளுக்கு வாங்கும் பண்டம் நல்லதாக இருக்கவேண்டும். கண்ட பழைய சாமான் எதையும் வாங்கிவிட முடியாது” என்று ஃபிராங்க் உறுதியளித்தான்.

தைரியமாகப் பேசியபோதிலும் அவனுடைய நாடி தளர்ந்துகொண்டிருந்தது. ஒவ்வொரு பிரிவாகச் சுற்றிக் கொண்டிருந்த கடையாட்களின் கவனம்

தங்கள் பால் திரும்பத் தொடங்கிவிட்டதாக அவனுக்குத் தோன்றியது. கையுறைகளை வாங்கிக் கொண்டு அந்தப் பருமனுன பெண்மணி போய்விட்டாள். சப்தம் போட்ட பெரிய ஜோடுகளை அணிந்திருந்த அந்தச் சிறு பையன்களை சிப்பந்திப் பெண் வெறுப்புடன் நோக்கிக் கொண்டிருந்தாள். தன்னைக் கடந்து செல்கையில் கையை நீட்டி வெல்வெட் ஆடையைத் தொட்டுப் பார்த்ததற்காக, பின்னல் துணி வாங்கிய பாவையிடமிருந்து கோபப் பார்வையொன்றைப் பெற்றிருந்தான் சார்லி. ஆகவே, தன் தம்பியைக் கடையின் பின் பகுதிக்கு அவசரமாக இழுத்துச் சென்றுன் ஃபிராங்க்.

அப்போதுதான் அதை அவன் பார்த்தான். அந்த வழியாக அவர்கள் அதற்குமுன் சென்றிருந்த போதிலும் பின்புறத்தில் இருந்த அந்தப் பிரிவை அவன் கவனித்திருக்கவில்லை. 'அழகிய பண்டங்கள்—அரை விலைக்குக் கிடைக்கும்' என்று பொறித்த சிறிய பலகை அங்கு காணப்பட்டது. அழகியவை. அதிலும் அரை விலைக்கு! சரி, கட்டாயம் நமக்கு இங்கு ஏதாவது கிடைத்தே தீரும்' என்று அவன் எண்ணினுன்.

அந்த மேஜைமீது மற்றும் பல அரை விலைப் பொருள்களும் இருந்தபோதிலும், இரு பக்க ஸெல்லுலாய்டு சீப்புகள் செருகியிருந்த அட்டையொன்றைத் தான் நேராக நோக்கின, ஃபிராங்கின் கண்கள். பளிச்சென்று சிவப்பாயிருந்தன, அந்தச் சீப்புகள் இரண்டும்; அவற்றின் தலைப்புறத்தில் முடிச்சுகளுடன் வளைந்து நெளிந்த கொடிகள் நுண்மையாகச் செதுக்கப்பட்டிருந்தன. அந்த அட்டையை எடுத்து சார்லியினிடம் கொடுத்தவாறு, "நாம் கண்டு பிடித்து விடுவோம் என்று நான் கூறவில்லையா!" என்று களிப்புடன் மொழிந்தான் ஃபிராங்க்.

அகமகிழ்ந்தவாறு அந்த அருஞ்செல்வத்தை அவர்கள் ஆராய்ந்து கொண்டிருக்கையில் யாரோ ஒருவன் ஃபிராங்கின் காதைப் பற்றினான்.—ஆல்பர்ட் கோமகன் மோஸ்தர் கோட்டை அணிந்திருந்த இளைஞனே அவன்.

"அந்தப் பண்டங்களைத் தொட்டால் தெரியும் சேதி! ஏ பையா, என்ன வைத்திருக்கிறாய், உன் கையில்? உடனே அதை என்னிடம் கொடுத்துவிடு" என்று கடுமையாகக் கட்டளையிட்டான் அவன்.

சூனியப் பார்வையுடன் ஃபிராங்க் நிமிர்ந்து நோக்கினான். அன்னையின் மிருதுவான கருங்குழலில் அந்தச் சிவப்புநிறச் சீப்புகள் செருகப்பட்டிருப்பதைக் கற்பனைக் கண்களால் காண்பதில் ஈடுபட்டிருந்தபடியால் பின்புறம் வந்து நின்ற அந்த இளைஞனின் காலடி ஓசை அவன் காதில் விழவில்லை.

அட்டையை அந்த யுவன் பிடுங்கிக்கொண்டான். "இதை எடுத்துக் கொண்டு ஓடிவிடலாம் என்று பார்க்கிறீர்கள், ஹூம்? இங்கே, இந்த ஆக்ஸ்பரி அண்ட் மூர் ஸ்தாபனத்தில் பண்டங்களைத் திருடுபவர்களை என்ன செய்வது என்று எங்களுக்குத் தெரியும். சரி சரி, உங்களை வெளியேற்றுமுன் உங்கள் ஜேபிகளை நான் பரிசோதனை செய்து பார்ப்பதுதான் நல்லது."

ஃபிராங்கின் முகம் சிவந்தபோதிலும் நிதானமுடன் பதிலளித்தான், "நானும் என் தம்பியும் கடைத்திருடர்கள் அல்ல, ஐயா! நாங்கள் சாமான் வாங்க வந்தவர்கள்தான்."

அதுகேட்டு அந்த இளைஞன் பெரிதாகச் சிரித்தான். அவனுடைய கடுமொழிகளையும்விடக் கொடூரமாக இருந்தது அந்தச் சிரிப்பு. "வாங்க வந்தவர்களா? ஓஹோ என்னை மன்னியுங்கள், ஐயா. அது எனக்குத் தெரியாது. உங்களுக்குப் பணிபுரியப் பரம சந்தோஷம், ஐயா. போகட்டும் தாங்கள் வாங்கியுள்ள

பொருள்களை சுற்றிக் கட்டித்தரட்டுமா கனவானே?"

"ஆம், அதுதான் என் விருப்பம்"—நிதானமாகப் பதிலுரைத்தான், ஃபிராங்க்- "இந்தச் சீப்புகளை எடுத்துக் கொள்கிறேன். வேறொன்றும் வேண்டாம்."

"என்ன, வேறொன்றுமே வேண்டாமா? கனவான்களுக்காக எங்களிடமுள்ள கோட்டுத் துணிகளை உங்களுக்கு காட்டலாம் என்றல்லவா நம்பினேன்'"—தன்னுடைய தமாஷ் குறித்துத் தானே உரக்கச் சிரித்தான் அந்தச்சிப்பந்தி. அப்புறம் சட்டென்று அந்த விளையாட்டில் அவனுக்குச் சலிப்பு ஏற்பட்டுவிட்டது.

"சரி சரி, ரொம்ப சரி. இன்னமும் என்னைக் காக்க வைக்காதே பையா" இவற்றின் விலை அரை டாலர், என்று கண்டித்துக் கூறினான்.

"அரை டாலரா!" ஃபிராங்க் திணறினான். "ஆனால்—ஆனால் அரைவிலை என்றல்லவோ இந்தப் பலகை கூறுகிறது?"

"அது சரிதான். ஒரு டாலருக்கு விற்ற இந்த ரகத்தில் கடைசி ஜதையானதால்தான் விலை பாதியாகக் குறைக்கப்பட்டிருக்கிறது. ஐம்பது சதம் ஆகிறது அது. சம்மதமானால் சீக்கிரம் கொடு."—கையை நீட்டினான் விற்பனையாளன்.

ஃபிராங்கின் முகம் மேலும் சிவந்து கன்றியது, "என்னிடம் ஐம்பது சதங்கள் இல்லை, ஐயா."

சிப்பந்தி நிமிர்ந்தான். "இல்லையா, உன்னிடம் இருக்குமென்று நானும் நினைக்கவில்லையே! உன்னைப் பார்த்தாலே அது தெரிகிறதே! சொல்லவும் வேண்டுமா? உங்கள் இரண்டு பேரிடமும் சேர்த்து ஒரு பென்னிகூட இருக்கமுடியாது என்பது நிச்சயம்"—வெறுப்புடன் கூறினான் அவன்.

"எங்களிடம் இருக்கிறது! ஒன்றல்ல, ஐந்து

பென்னிகள் இருக்கின்றன. எங்கே, அவரிடம் காட்டு, ஃபிராங்க்'' என்று சார்லி வாய் திறந்தான்.

''ஐந்து பென்னிகள்—முழுசாக ஐந்து பென்னிகள்!'' அருவருக்கத்தக்க அவுட்டுச் சிரிப்பை மீண்டும் சிரித்தான் அந்தக் குமாஸ்தா. ''நீங்கள் சாமான் வாங்க வந்தவர்கள், இல்லையா?'' என்று கூறிக் கொண்டே ஃபிராங்கின் கழுத்துப்பட்டியைப் பிடித்து முறுக்கினான். ''சரி, நீங்கள் இங்கு வாலாட்டியது போதும். இப்போது நீங்கள் வெளியே போய் விடுங்கள்; ஆனால் இதை மட்டும்ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்: ஐந்து பென்னி வாடிக்கைக்காரர்கள் இந்த மூலைக்கடைக்குத் தேவை இல்லை. உங்கள் அழுக்கு முகத்தை இங்கே மறுபடி காட்டாதீர்கள். உம், நான் உங்களை வெளியில் அடித்துத் துரத்து முன் போய்விடுங்கள்.''

அவ்வாறே அவ்விருவரும் சென்றார்கள்; சார்லி சப்தம் போட்டு அழுதுகொண்டே போனபோதிலும் தீர்மானம் தொனித்த முகத்துடனேயே ஃபிராங்க் நடந்தான். வெளியே வந்ததும் தன் தம்பியை மூக்கைச் சிந்தச் செய்ததோடு அழுகையை நிறுத்து மாறும் உக்ரமாக உத்தரவிட்டான்.

''சரி, கடைசியில் கார்ட்டரின் கடைக்கே போவோம். கிறுக்குப் பிடித்தவன் தான் கார்ட்டர் கிழவன் இருந்தபோதிலும் இந்த மாதிரி அவன் தடபுடல் செய்வதில்லை.''

''இங்கே நாம் நுழையக்கூடாது என்று நான் அப்போதே சொல்லவில்லையா? நமக்கு இங்கே ஜோலியே கிடையாதே, ஃபிராங்க்!''

''இருக்கத்தான் இருந்தது என்கிறேன்'' உறுதியாகப் பதிலுரைத்தான் ஃபிராங். ''நமக்கு ஏற்றதாக ஐந்து சத விலைக்கு இவர்களிடம் ஏதாவது பொருள் இருந்தே இருக்கவேண்டும். அப்படி மட்டும் இருந்

திருக்குமாஞல் நாம் நிச்சயம் வாங்கியிருப்போம். செல விட உன்னிடம் பணம் இருக்குமாஞல் நீயும் ஒரு வாடிக்கைக்காரன் தான்; எந்தக் கடையிலும் நுழைய உனக்கு உரிமை உண்டு.''

''வாடிக்கையாளன் ஆவதற்கு ஐந்து சதங்களை விட அதிகப் பணம் தேவை என்றே நினைக்கிறேன். இதற்குமுன் அது எனக்குத் தெரியாது'' என்ருன் சார்லி.

''நானும் அதை அறிவேன்''—வெடுக்கென விடை பகர்ந்தான் ஃபிராங்க். ''ஆஞல் அது சரியல்ல. ஏழை யாயினும் பணக்காரஞயினும் வாடிக்கைக்காரன் என் ருல் ஒன்றுதான். அவனை நல்ல முறையிலேயே நடத்த வேண்டும்.''

''அப்பாவின் மரக்கட்டைகளை யாரோ ஒரு பெண் மணி பரிசீலித்துக்கொண்டிருக்கிருள்'' சதுக்கத்தின் எதிர்ப்புறத்தை சார்லி சுட்டிக்காட்டிஞன். ''அவற்றைவாங்க அவள் முடிவு செய்தால் அப்பா கிளம்பிவிடுவார். ஆகவே, கார்ட்டரின் கடைக்கு நாம் சீக்கிரம் செல்வது நல்லது.''

கார்ட்டர் கிழவஞரிடம் ஐங்கு சத விலைக்குப் பண்டங்கள் உண்டு; சிறுவர் வந்து வாங்குவது குறித் தும் அவருக்கு ஆட்சேபமேதும் கிடையாது. எனவே அவரிடம் கருநிறத் தலையுடைய ஊசிகளைக்கொண்ட பட்டையொன்றை அவ்விரு பாலகரும் வாங்கிஞர்கள். காற்று அதிகமாக வீசும் தினங்களில் அன்னையின் போர்வையை அழுத்திவைக்க அந்த ஊசிகள் நன்கு பயன்படுமென அவர்கள் ஆனந்தப்பட்டனர். பண்டத் தைப் பொறுக்கும் பொறுப்பை சார்லிக்கே ஃபிராங்க் விட்டுவிட்டான். 'பங்'குக்குத் திரும்பும் வழியில் அவ னிடம் மௌனமும் கடுமையும் குடிகொண்டன. அதைக் கண்ட சார்லி அவனைத் தேற்றலாஞன்.

''இந்த ஊசிகள் அம்மாவுக்குப் பிடிப்பது உறுதி,

ஃபிராங்க். சிவப்புவர்ணச் சீப்புகளைப்போல இவை அவ்வளவு அழகாக இல்லைதான். இருந்த போதிலும், நாம் கொடுக்கின்ற காரணத்தினுல் நமது பரிசு எதையும் அம்மா விரும்புவாள். ஆகவே, சீப்புகளைப்பற்றி நினைத்து வருந்தாதே, அண்ணு.''

சிந்தனையைப் பிரதிபலித்த ஃபிராங்கின் கண்கள் நேராக நோக்கின. "அதெல்லாம் சரி, சார்லி, நம் பரிசு பற்றி நான் வருந்தவில்லை. ஆக்ஸ்பரி கடையிலுள்ள அந்தப் பயலைப்பற்றித்தான் சிந்தித்துக்கொண்டிருக்கிறேன். என்னதான் நீளக்கோட்டு அணிந்து, கழுத்துப்பட்டையை தூக்கி நிறுத்தியிருந்த போதிலும், சகலமும் அறிந்தவனல்ல அவன். எனக்குத் தெரியும், அவன் அறியாததொன்று. கடைக்கு வரும் எவரையும் வாடிக்கையாளராகவே பாவித்து நடத்த வேண்டும் என்பது எனக்குத் தெரியும். ஆம், ஐந்து சதங்களே வைத்திருக்கும் வாடிக்கையாளருக்கும்கூட அந்த உரிமை உண்டு. எனக்கு மட்டும் எப்போதாவது சொந்தத்தில் ஒரு கடை இருக்குமாஞல்!''

# 2

"எனக்கு மட்டும் ஒரு கடை இருக்குமாஞல்—!''—பத்து வயதில் ஃபிராங்க் வுல்வொர்த் இப்படிக் கூறிய போது அவனுடைய தம்பி நகைத்தான். "என்னிடம் பத்து லட்சம் டாலர் இருக்குமேயாஞல்—!'' என்ருே, "எனக்கு ஒரு சலவைக்கல் மாளிகை சொந்தமாஞல்-!'' என்ருே கூறுவதற்குச் சமம்தானே அது?

ஆயினும் அவனுக்குக் கடை கிடைக்கத்தான் இருந்தது; ஒன்றல்ல, பற்பல கடைகள். அவை மட்டுமன்று, அவனிடம் லட்சக்கணக்கான டாலர்கள் குவியவும் இருந்தது; சலவைக்கல் மாளிகையும்

கூடச் சொந்தமாகவிருந்தது. இவை மட்டுமல்ல உலகம் அதுவரை கண்டிராத பலவற்றுக்கும் உடைமையாளனுகவிருந்தான் அவன். உலகிலேயே உயரமான கட்டிடத்தைக் கண்டு அதிசயக்க நாடு நெடுகிலுமிருந்து மக்கள் வந்து குவியவுமிருந்தனர்—ஃபிராங்க் வுல்வொர்த்தின் கட்டிடம் தான் அது!

ஆனுல், மனமிடியச் செய்த அந்த உள்நாட்டுப் போர்க்காலக் குளிர்ப்பருவத்தில் யாரே அவற்றையெல்லாம் எதிர்பார்த்திருக்கமுடியும்? தம்பி சார்லியினுல் அது சாத்தியமல்ல. ஏன், ஃபிராங்குக்கே கூட அது தெரிந்திருக்க முடியாது என்பது திண்ணம்.

வுல்வொர்த் குடும்பத்தில் யாரும் கடைவைத்து நடத்தியது கிடையாது. புரட்சிக்கு முன்பே இங்கிலாந்திலிருந்து வந்து குடியேறி விட்டார், முதல் வுல்வொர்த். அவரும், அவருடைய சந்ததியினர் அனைவரும் விவசாயிகளே. நியூயார்க் ராஜ்யத்திலுள்ள ராட்மான் அருகே ஃபிராங்கின் பாட்டஞரான ஜாஸ்பர் வுல்வொர்த்துக்கு ஒரு பண்ணை சொந்தமாக இருந்தது; அங்கு தான் 1852, ஏப்ரல் 13-ம் தேதி ஃபிராங்க் பிறந்தான். அவனுடைய தம்பியான சார்லஸ் ஸம்னர் வுல்வொர்த் நான்கு வருடங்கள் இளையவன். இருவரையும் தவிர வேறு குழந்தைகள் அவர்களுடைய பெற்ருேருக்குக் கிடையாது.

சார்லி பிறந்த வருடத்தில் ஜான் வுல்வொர்த் கடன்வாங்கி, ஒரு பண்ணைக்குச் சொந்தக்காரராஞர். கிரேட் பெண்ட் கிராமத்துக்கு அருகே, பிளாக் நதியின் கரையில் இருந்தது அந்த நிலப்பரப்பு. ஒன்டாரியோ ஏரியையும், ஸெயின்ட் லாரென்ஸ் நதியையும் ஒட்டியுள்ள அந்த நியூயார்க் ராஜ்யப் பகுதியில் கண்ணுக்கினிய இயற்கைக்காட்சிகள் பலவுண்டு. நதியையும், மரங்கள் அடர்ந்த குன்றுகளையும் நோக்கியிருந்த அந்தப் புதிய வுல்வொர்த் பண்ணையும் அழ

கானதோர் இடம். ஆனால் ஸ்ரீமதி வுல்வொர்த்தின் சகோதரரான ஆல்பன் சடுதியில் சுட்டிக்காட்டியது போல, சாகுபடிக்குச் சிறந்ததல்ல அப்பகுதி. அடைமானச் சுமையும் அதீதமாக இருந்தது. அவருடைய மனைவியின் உறவினர்கள் கருத்தில் ஜான் வுல்வொர்த் சுமாரான ஞானம் படைத்த விவசாயியேயாயினும் தொழில் விஷயத்தில் சுத்த 'அப்பாவி' தான்!

ஸ்ரீமதி வுல்வொர்த்தின் குடும்பத்தினரான மக்பிரயர்கள் சுபிட்சமாக வாழ்ந்தனர்; அவர்களெல்லாம் தங்கள் அழகிய ஃபான்னி அவ்வாறு அதிருஷ்டமற்றவளாக இருந்தது பற்றி மிகவும் கவலைப்பட்டனர். அவளுடைய சகோதரர் அனைவருக்கும் நேர்த்தியான நிலங்கள் இருந்தன; அவற்றில் சாமர்த்தியமுடன் சாகுபடி செய்து, பாங்கியில் பணம் சேர்த்திருந்தனர் அவர்கள். செழிப்பு மிக்க அவர்களுடைய நிலங்கள் விளைச்சலை வாரிவாரிக் கொடுத்தன. ஆகவே அவர்களுடைய மனைவிமாரால் வீட்டு வேலைகளுக்கு 'கூலிக்காரி'களை அமர்த்த முடிந்திருந்தது. பாவம், ஃபானி இப்படிப் பாடுபட்டு உழைத்து இத்தனை ஏழ்மையில் உழலவேண்டியிருக்கிறதேயென அவர்கள் ஒருவருக்கொருவர் கூறிக்கொண்டனர்.

அவளுடைய கணவன் கஷ்டப்பட்டு வேலை செய்யவில்லை என்று அதற்குப் பொருளல்ல. அவருடைய கடும் உழைப்பு பற்றி யாருக்கும் ஐயமேயில்லை. ஆனால் அவருடைய கற்பாங்கான நிலத்தில் உருளைக்கிழங்கு தவிர வேறெதுவும் விளைய மறுத்தது; ஒரு சில பசுக்கள் மேயத்தான் அங்கு புல்லும் இருந்தது. உருளை சாகுபடிக்கும், விறகு வெட்டுவதற்கும் தான் அவருக்கு நேரம் சரியாக இருந்தது; இவ்வாறு பாடுபட்டதற்குப் பலன் சொற்பமாகவே கிடைத்தது. ஆகவே, வாட்டர்டவுனில் விற்பதற்காக வெண்ணெய் கடைந்து கொடுத்து உதவினாள், ஸ்ரீமதி

வுல்வொர்த். வேலை செய்ய யாரையாவது அமர்த்தி ஞல் கூலி கொடுக்கப் பணம் வேண்டும்; ஆகவே உருளை வயல்களில் ஓராள் வேலையைச் செய்தனர், சிறுவர் இருவரும். கிடைத்த வருவாயில் ஒவ்வொரு காசையும் அடைமானத் தொகையின் மீதான வட்டி விழுங்கியது. எனவே, ஜான் வுல்வொர்த்தைத் தன் சகோதரி ஃபானி மணக்க முடிவு செய்தது விவேக மற்றதென ஆல்பன் நினைத்ததில் அதிசயமென்ன!— அதை அவளிடம் சொல்லவும் அவர் தயங்கவில்லை.

வுல்வொர்த்தின் பண்ணையிலிருந்து இருபத் தைந்து மைல் தூரத்தில் இருந்தது, ஆல்பன் மக்பிர யர் வாழ்ந்துவந்த இடமான பால் பாயின்ட். வுல் வொர்த் தம்பதி எப்போதாவது தான் அங்கு செல்வர். சகோதரர் ஆல்பன் நல்லெண்ணம் உடையவரே என் பது ஸ்ரீமதி வுல்வொர்த்துக்கு நன்கு தெரியும்; ஆயி னும் தன் அபிப்பிராயங்களை இங்கிதம் அறியாமல் அவர் கொட்டிவிடுவதாக அவள் கருதினுள். நேர்மை யாகப் பாடுபட்டு உழைக்கும் தன் கணவனேடும், மகிழ்ச்சியுருவான மகன்களுடனும் தான் ஆனந்த மாக வாழ்வதாகவே அவரிடம் கூறிப் பயனில்லை என்பதை அவள் அறிந்திருந்தாள்—என்ன சொன்ன லும்தான் அவர் நம்பமாட்டாரே!

'முன்னேருத' எவராலும் மகிழ்ச்சியோடு வாழ முடியாது என்பதே ஆல்பனின் முடிவான கருத்து. ஜான் வுல்வொர்த் ஒரு நாளும் வாழ்க்கையில் முன்னேற முடியாது என்றே அவர் எண்ணினுர். ஆனல் பையன்கள்?—அவர்களைப்பற்றி நினைத்த போது ஆல்பனின் முகம் மலர்ந்தது—ஆம், கணவனை விட அவர்களைப் பொறுத்தவரையில் ஃபானி அதி ருஷ்டசாலியாக இருந்தாலும் இருக்கலாமென அவர் நினைத்தார். இரண்டுபேரும் சுட்டிப் பையன்கள். அவர் களிலும் குறிப்பாக ஃபிராங்க் புத்திசாலியாக இருப்

பான்போல அவருக்குத் தோன்றியது. அவன் மட்டும் தன் மாமன்கள் மாதிரி நடந்துகொண்டால் ஒருநாள் வெற்றிகரமான விவசாயி ஆகலாம், யார் கண்டது?

ஃபிராங்குக்கும் தன் மாமனை மிகவும் பிடித்திருந்தது. எனவே, மக்பிரயர் பண்ணைக்குப் போக நேர்ந்த போதெல்லாம் ஆனந்தத்தில் திளைத்தான் அவன். அப்போது ஆல்பன் மாமா அளித்த பென்னிகளுக்காக அவரிடம் அவன் நன்றி கொண்டான். அவன் காண்பது வெற்றியோ தோல்வியோ, எவ்வித விவசாயி ஆவதற்கும் தனக்கு விருப்பமில்லை என்பதை அன்பு மிக்க அந்த வள்ளலிடம் ஃபிராங்க் ஒருபோதும் கூறியது கிடையாது. கடை நடத்தத்தான் உண்மையில் அவனுக்கு இஷ்டம் என்பதை அறிந்தால் அந்த மாமாவுக்குப் பிடிக்காமற் போயிருக்காதா?

ஆகவே மாமனிடம் அதை அவன் சொல்லவில்லை. வேறு யாரிடமும் கூறவில்லை—தம்பி சார்லியிடமும் கூட. சொல்வதால்தான் என்ன பிரயோசனம்? பெரியவர்கள் கடிந்து கொள்வர், சார்லியோ சிரிப்பான் தன் ஆசிரியையான எம்மா பென்னிமனிடம் கூறலாமா என்று அவன் சில சமயம் சிந்திப்பதுண்டு. அவள் கண்டிக்கவோ அன்றி நகைக்கவோ மாட்டாள் என்பதாக அவனுக்கு ஒரு நினைப்பு. இருந்த போதிலும் தன் பேரார்வம் பற்றி அவளிடம் கூறக் கூச்சமாக இருந்தது அவனுக்கு.

பள்ளிப்படிப்பில் அதிகம் ஆழச்சந்தர்ப்பம் இருக்கவில்லை, ஃபிராங்க் வுல்வொர்த்துக்கு. எல்லா வயதுப் பிள்ளைகளும் ஒரே அறையில் அமர்ந்து, ஒரே ஆசிரியையிடம் பாடம் கற்கநேர்ந்த 'சிறிய சிவப்புப் பள்ளி'க் காலம் அது. இயல்பானது என்று இப்போது நாம் நினைக்கும் இலவசக் கல்வி அப்போதுதான் ஆரம்பித்த புதிது. தங்கள் இலவசப்பள்ளிகள் குறித்து அமெரிக்கர் மிகுந்த பெருமை பாராட்டினர். ஆனால்

இக்காலத்தவரான நமக்கு அப்பள்ளிகள் வெகு விசித்திரமாகத் தோற்றுவது சகஜம்.

அந்தச் சிறிய, சிவப்புப் பள்ளிக்குத் தங்கள் குழந்தைகளைப் பெற்ருேர் கட்டாயமாக அனுப்பிவைக்க வேண்டுமென இப்போது விதிக்கப்பட்டிருக்கவில்லை. ஏட்டுப்படிப்பு கவைக்குதவாது என்று கருதிய சில தந்தைமார் தங்கள் குழந்தைகளை அறவே அனுப்பவேயில்லை. எழுதவும், படிக்கவும், கணக்குப் போடவும் கற்றுவிட்டால் போதும், பையன் வேண்டிய அளவு படித்தாகிவிட்டதெனப் பெரும்பாலான விவசாயிகள் எண்ணினர். பெண் என்ருலோ, அந்த அளவுக்குக் கூடப் படிப்பு தேவையாகக் கருதப்படவில்லை. உதவி தேவைப்பட்டபோதெல்லாம் பிள்ளைகள் வீட்டிலேயே இருத்திவைக்கப்பட்டனர். அதற்கு மாருக விஷமம் செய்து தொல்லை கொடுப்பதைத் தவிர்க்கும்பொருட்டு மூன்று வயதுக் குழந்தைகளைத் தங்கள் மூத்த பிள்ளைகளோடு அடிக்கடி பள்ளிக்கு அனுப்பிவந்தனர் தாய்மார்! எல்லோருக்கும் பதினறு வயதோடு பள்ளிப் படிப்பு பூர்த்தியாகிவிடும்—அதுவரை அவர்கள் பள்ளியில் தொடர்ந்து படிப்பரேயாளுல். கற்க வேண்டியது அனைத்தையும் அந்த வயதுக்குள் கற்று முடித்திருக்கவேண்டும் என்று கருதப்பட்டது. இவ்வாறில்லையேல், படிப்பதற்குத் தகுதியற்ற படுமுட்டாள் என்று பாவித்து, அவர்களை வேலையில் திருப்புவதே சாலச் சிறந்தெனத் தீர்மானித்தனர்.

அத்தகையதொரு பள்ளியில் ஆசிரியராவதில் அதிகச் சிரமம் இருக்கவில்லை. கணக்கு, எழுதுதல், படித்தல், எழுத்துக் கூட்டுதல், பூகோளம் ஆகியவற்றில் அரசாங்கம் நடத்திய பரீட்சையில் பதினறு வயதான எந்தப் பையனும் பெண்ணும் கலந்துகொள்ளலாம் அதில் தேறியவர்களுக்கு ஆசிரியர் தொழிலுக்கான அத்தாட்சிப் பத்திரம் வழங்கப்பட்டது. ஊதியம்

குறைவுதானெனினும் சாப்பாடும் ஜாகையும் கூடவே கிடைத்தன. 'சுற்று வரிசை' ரீதியில் முறைச்சாப் பாடு சாப்பிடுவார் ஆசிரியர்; ஒரு மாணவனின் குடும் பத்துடன் ஒரு வாரமோ மாதமோ அவர் தங்கிச் சாப் பிட்டதும் அடுத்த குடும்பத்தின் முறை வரும். ஒவ் வொரு பருவத்திலும் குறைந்தபட்சம் ஆறுவாரகாலம் பள்ளி நடக்கும்; அவ்வளவு நாட்கள் ஆசிரியருக்குச் சோறுபோடச் சித்தமாகப் போதிய குடும்பங்கள் இருக்குமானால் நான்கைந்து மாதங்கூடப் பள்ளிக் கூடம் நடப்பதுண்டு.

அப்படிப்பட்டதொரு பள்ளித்திட்டம் இக்காலத் தில் இருந்தால் நாம் அதிர்ச்சியுறுவது நிச்சயம். அது மோசமான ஏற்பாடு என்பதில் சந்தேகமே இல்லை. எனினும், அதன் விளைவுகள் அப்படியொன்றும் எப் போதுமே மோசமாயிருக்கவில்லை. அம்மாதிரிப் பள்ளி யொன்றில்தான் படித்து வெளிவந்தார் ஆப்ரஹாம் லிங்கன்; மற்றும் பல பிரபலஸ்தர்களும் அம்மாதிரிப் பள்ளிகளில் படித்தவர்களே. கற்றறிய மாணவனுக்கு விருப்பம் இருக்குமானால் எப்படிப் போதிப்பது என் பது ஆசிரியருக்கும் தெரிந்திருக்குமானால், எத்தகைய பள்ளியாலும் பிரமிக்கத்தக்க பயனே விளையும்.

ஆப்ரஹாம்லிங்கன்அல்ல, இந்த ஃபிராங்க் வுல் வொர்த்; ஆயினும் படிப்பில் அவனுக்குப் பேரார்வம். போதிப்பதில் பிரியமும், அத்துறையில் உண்மை யானதொரு மேதா விலாசமும் படைத்த ஒரு பெண் மணி அவனுக்கு ஆசிரியையாக வாய்த்தது அவ னுடைய அதிருஷ்டம்தான்.

கிரேட் பெண்ட் பள்ளியின் பொறுப்பை மேற் கொண்டபோது எம்மாபென்மனுக்குப் பதினாறு வயதுதான் தானே எட்டாவது படிவத்துக்கு மேல் படித்திராத சாதாரணப் பெண்தான் அவள். ஆயினும் அரியதொரு ரகஸியத்தை அவள் கண்டுபிடித்திருந்

தாள். அறிவு உலகம் முழுவதும் புத்தகங்களில் அடங்கியுள்ளது, படிக்கத்தெரிந்த எவருக்கும் அதற்கு வழி துலங்கிவிடும் என்பதே அந்தக் கண்டுபிடிப்பு. எனவே அவள் படித்தாள், புத்தகங்களை வாங்கினாள்; அவற்றைப் படித்து முடித்ததும் மேன்மேலும் நூல்களை வாங்கினாள். பள்ளியில் அவள் உபயோகிக்க நேர்ந்தவையான எழுத்துக்கூட்டல் புத்தகத்திலும், மக்கஃப்பே வாசகத்திலும் கண்டிராத பல விஷயங்களை அவள் அறிந்தாள். அவனுடைய வாய்மொழியாகவே ஃபிராங்கின் பேரவாவை அவள் கேட்காவிடினும், அதற்கான வழி வகுத்ததில் அவளுக்குப் பங்குண்டு. அவள் மட்டுமல்ல, எப்போதோ காலமாகிவிட்ட ஃபிரெஞ்சுச் சக்ரவர்த்தியொருவரும் அவனுக்குப் பாதை வகுத்துத் தந்தார்—நெபோலியன் போனபார்ட் தான் அவர்!

மூலைக்கடையில் ஃபிராங்க் மூக்கறுபட்டபின் சில மாதங்கள் கழித்து நேர்ந்தது இது. ஒரு நாள் கிரேட் பெண்ட் பள்ளியில் பூகோளப் பாடம் போதிப்பதற்காக அவனுடைய வகுப்பினர் அனைவரையும் தன் மேஜையைச் சுற்றிக் கூட்டினாள் எம்மா. அவர்கள் பாடம் ஒப்பித்து முடிந்ததும், யாரோ ஏதோ கூறிய தன் விளைவாக சரித்திரம் பற்றி எம்மா பேசும்படியாயிற்று. அந்த வடக்கு நியூயார்க் பிரதேசமானது வெறும் மரங்களும், குன்றுகளும், தண்ணீரும் மட்டும் நிறைந்ததொரு பகுதியல்ல; அங்கு எவ்வளவோ நடந்திருக்கின்றன என்றாள் அவள். எல்லாம் முக்கியமான, பரபரப்பூட்டும் நிகழ்ச்சிகள்; எனவே, அவற்றில் சிலவற்றை அவள் எடுத்துரைத்தபோது பிள்ளைகள் அனைவரும் திறந்த வாய் மூடாமல் செவி மடுத்தனர்.

அண்மையிலுள்ள ஒன்டாரியோ ஏரிக்கரையில் தான் இந்தக் கண்டத்தைச் சொந்தமாக்கிக் கொள்வதற்கான போர்களைப் பிரிட்டிஷாரும் ஃபிரெஞ்சுக்காரர்

களும் நடத்தினர்; பின்னர் அதே காடுகளில் புரட்சிப் படைகளும் பொருதியிருக்கின்றன; சிவப்பு இந்தியரும் வெள்ளையரும் வெட்டி மடிந்த துண்டு, அங்கேயே. வாட்டர்டவுனுக்கு அப்பால் பத்தே மைல் தூரத்திலுள்ள ஸாக்கெட் துறைமுகத்தில் தான் ஜெனரல் ஜெபுலான் பைக்கும் புதைந்து கிடக்கிறார் என்றெல்லாம் அவள் கூறினாள். பிறகு, "எந்தப் போரில் ஜெனரல் பைக் உயிர் துறந்தார் என்பதை உங்களில் யாராவது கூற முடியுமா?" என்று வினவினாள். "ஏனடா ஆர்லாண்டோ, நீ ஸாக்கெட் துறைமுகத்தைக் கடந்துதானே வருகிறாய்? உனக்குத் தெரிந்திருக்க வேண்டுமே!"

"தெரியும், அம்மா"—சுடர்விட்ட செந்நிறக் கேசமுடைய பெரிய பையனான ஆர்லான்டோ தட்டித் தடுமாறி எழுந்தான். எந்தக் கேள்விக்கும் அவனுக்குப் பதில் தெரிவது அபூர்வம்தான். எனினும் அந்த வினவுக்கு மட்டும் அவன் விடை அறிந்திருந்தான்.

"என் பாட்டனார் அப்போரில் பங்கெடுத்தவர்" என்றான் அவன், பெருமையுடன் "அவர் ஒரு மாலுமி. அந்தத் துறைமுகத்தில் அப்போது ஏராளக் கப்பல்கள் கூடியிருந்தன. எல்லாவற்றிலும் சிப்பாய்கள் நிறைந்திருந்தனர். ஆகவே—அதனால் அந்தக் கப்பல்கள் ஏரியைக் கடந்து டொரான்டோவுக்குச் சென்றன அங்கே துப்பாக்கிச் சண்டை கடுமையாக நடந்தது. கோட்டையைத் தகர்த்து, சிவப்பு அங்கிக்காரர்களைச் சரணடைய வைத்தோம். அப்போதுதான் ஜெனரல் கொல்லப்பட்டார். ஆனாலும் நாமே வெற்றி பெற்றோம்." என்றான்.

ஆஸனத்தில் ஆர்லான்டோ அமர்ந்து, வெற்றிப் பெருமிதத்தோடு சுற்றிலும் பார்த்தான். எம்மாவோ சிறுநகை புரிந்தாள்: "சபாஷ், ஆர்லான்டோ! வீரரான உன் பாட்டனாரைப் பற்றி நீ எப்போதும்

பெருமை கொள்ளவே வேண்டும். இப்போது சொல்லு, அவர் ஈடுபட்ட போரின் பெயர் என்னவென்று.''

தனக்குத் தெரியாதென்று தலையசைத்தான் ஆர்லான்டோ. அப்போர் பற்றிய பாட்டனாரின் வர்ணனையை அவன் கேட்டதுண்டு; ஆனால் அதற்கு எப்பெயரையும் அவர் சூட்டியதாக அவனுக்கு நினைவில்லை.

“குழந்தைகளே, உங்களில் யாருக்காவது தெரியுமா?'' என்று மற்ற பாலரை எம்மா கேட்டாள்

''*1812*-ம் வருடப் போர்'' என்று பல குரல்கள் சேர்ந்து பதிலளித்தன.

“ரொம்ப சரி. அந்தப்போர் எப்படித் தொடங்கியது என்பதை யாராவது கூற முடியுமா?''

எல்லாக் குழந்தைகளும் பதில் தெரியாமல் விழித்தன. எனவே அந்த வரலாற்றை அவர்களுக்குப் பொறுமையாக விவரித்தாள் எம்மா. போனபார்ட்டின் பேராசையானது ஐரோப்பா பூராவையும அவருக்கு எதிராக அணிகூடச் செய்த ஆரம்பநாளிலிருந்து அனைத்தையும் அவள் கூறினாள்.

“போனபார்ட்'' என்ற பெயரை அவள் குறிப்பிட்டதும், குறுக்கிடுவதற்கு அறிகுறியாகக் கையை உயர்த்தினான் ஃபிராங்க். தனக்குத் தெரிந்ததை எந்தப் பிள்ளையும் கூற எப்போதும் அனுமதித்து வந்தவள் எம்மா. எனவே தன் பேச்சை அவள் நிறுத்தினாள்: ''என்ன ஃபிராங்க்? போனபார்ட்டைப்பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா?''

“ஏதாவதா? அவரைப்பற்றி எவ்வளவோ தெரியுமே!'' ஆர்வமுடன் பதிலிறுத்தான் ஃபிராங்க். “அவருடைய ஏரிக்கு நான் சென்றிருக்கிறேன். கன்றுக்குட்டிகள் வாங்குவதற்காக நானும் என் அப்பாவும் சென்ற கோடையில் அங்கு போயிருந்தோம். அங்கே கோட்டை, கொத்தளங்கள் எல்லாம்

இருந்தனவாம். ஆனால் இப்போது அவையெல்லாம் தரைமட்டமாகிக் கிடக்கின்றன. இந்த போனி—பார்ட் இருக்கிறாரே, அவர் விசித்திரமான படகொன்றை வைத்திருந்தாராம். பிரம்மாண்டமான அதைத் தன் பழைய நாட்டிலிருந்து பிரத்யேகமாக அவர் கொண்டு வந்திருந்தாராம். இந்த விவரங்களை எங்களுக்குச் சொன்ன விவசாயி ஏதோ விசித்திரப் பெயரைக் கூறினார்—அந்தப் படகுக்குத்தான் சொல்கிறேன். இந்த போனி—பார்ட் காடுகளில் வேட்டையாடச் செல்வது வழக்கமாம். தம்மோடு ஏராள நண்பர்களையும் அழைத்துச் செல்வாராம். எல்லாரும் குதிரைகள் மீது சவாரி செய்துதான் காடுகளில் நுழைவார்களாம். அப்புறம்—''

''சற்று இரு, ஃபிராங்க்.'' குறுநகையோடு எம்மா குறுக்கிட்டாள். ''நெபோலியனின் சகோதரனைப் பற்றி நீ நிறைய அறிந்திருக்கிறாய் என்பது எனக்கு நன்றாகத் தெரிகிறது. ஆனால் போரை ஆரம்பித்தது அவரல்ல.''

'அவரல்லவா?'' அதிர்ச்சியுற்றவனாய்க் காணப்பட்டான் ஃபிராங்க். ''ஒன்றுக்கு மேற்பட்ட போனி—பார்ட்டுகள் இருந்ததாகவா கூறுகிறீர்கள்?''

''அதையே தான் கூறவந்தேன். இந்த யார்க் ராஜ்யத்தில் வேட்டை முகாம் அமைத்தவர் ஜோஸப் போனபார்ட். வீர நெபோலியனின் சகோதரர் அவர். அந்தப் படகின் பெயர் கொன்டொலா, ஃபிராங்க். இதோ இந்தப் புத்தகத்தில் ஜோஸப் அமெரிக்காவில் நடத்திய வாழ்க்கைபற்றிச் சில விவரங்கள் கூறப்பட்டிருக்கின்றன; வேண்டுமானால் உனக்கு இதை இரவல் தருகிறேன் இப்போது நாம் பேசுவது 1812-ம் வருடப்போரைப் பற்றி. குழந்தைகளே, நெபோலியன் போனபார்ட்—''

அன்றைய வகுப்புகள் முடிந்ததும் அந்தப் புத்த

கத்தை இரவலாகப் பெற்று, அதிலிருந்த ஒவ்வொரு வார்த்தையையும் ஃபிராங்க் படித்தான். நெபோலிய னின் வாழ்க்கைச் சரிதம் இது; அவருடைய குடும்பத்தி னர் பற்றியும் அதில் சில விவரங்கள் கொடுக்கப்பட் டிருந்தன. சகோதரர் வீழ்ச்சியுற்றதும் அமெரிக்கா வுக்கு வந்த ஜோஸப் பற்றி மேற்கொண்டு விவரங் களில் ஃபிராங்க் சுவை கண்டான். ஆனால் நெபோலிய னின் வரலாறோ அதைவிடப் பெரும் பரபரப்பூட்டு வதாயிருந்தது

உருளைக்கிழங்குவயலைக் கொத்தியபோது அதைப் பற்றியே ஃபிராங்க் சிந்தித்தான்—'சக்ரவர்த்தியாவ தெனத் தீர்மானித்தான் ஒரு ஏழைச் சிறுவன்; அந்த லட்சியத்தை எய்தும்வரை எதுவும் தன்னைத் தேக்கி நிறுத்த அவன் அனுமதிக்கவில்லை'—எதற்காக ஒருவன் சக்கரவர்த்தியாவதற்கு விரும்ப வேண்டுமோ, அது ஃபிராங்குக்குப் புரியவில்லை. அந்தப் போர்களும், மக்களின் கொதிப்பும், கடைசியில் சிறைவாசமும்— இவையெல்லாம் அர்த்தமற்றவை என்றே அவனுக் குப்பட்டன ஆனால் ஒன்று மட்டும் அவன் மனத்தில் ஆழப் பதிந்தது: 'போதிய அளவு பாடுபட்டால் நாம் வேண்டியதைப் பெறலாம்' என்பதே அது. அதற்கு நாம் பணக்காரனாகப் பிறக்கத் தேவையில்லை. எதை எப்படிச் செய்வது என்று கூறவும், அதில் உதவவும் யாரும் அனாவசியம். நாமே ஒரு முடிவு செய்துவிட்டு, அதன்பின் அதிலிருந்து பிறழாதிருப்பதுதான் வேண்டுவதெல்லாம். அந்த லட்சியத்தை விட்டு விட்டு, பதிலுக்கு வேறெதையும் பின்பற்றலாகாது. நாம் விரும்புவதென்ன என்பதைத் தீர்மானமாகத் தெரிந்துகொண்டு, அதையே உறுதியுடன் தொடர வேண்டும்.

புத்தகத்தை எடுத்து மறுபடியும் ஜோஸப் பற்றிப் படித்தான், ஃபிராங்க். ஜெனரலாகிப் பின்னர் ஸ்பெயின்

தேச மன்னனுகவும் ஜோஸப் முடிசூட்டப்பட்டதைப் படித்தான். ஆனால் அவருடைய சகோதரரான நெபோலியன் உதவியதால் அல்லவோ அவர் மன்னரானர்? நெபோலியன் இல்லாதிருந்தால் அவரால் அவ்வாறு ஆகியிருக்க முடியாதே! சார்லியைப் போன்றவர்தான் அவர்; சார்லிக்கு எப்போதும் யாராவது உதவி செய்தாக வேண்டும். ஆனல் நெபோலியனுக்கோ யாரும் கைகொடுத்தது கிடையாதே! தம் லட்சியம் என்ன என்பதை அவர் நன்கறிந்திருந்தார். அந்த இலக்கை அடையவும் அடைந்தார், முற்றிலும் சுயமுயற்சியாலேயே. நாம் ஒரு முடிவு செய்து கொண்டு, அதனின்று சற்றும் பிறழாதிருப்போமாயின் லட்சியசித்தி எய்தலாம் என்பதைத்தானே அவரது சரிதை காட்டுகிறது? கையில் கால் துட்டு இல்லாத கார்ஸிகச் சிறுவனொருவன் அதைச் சாதித்திருக்கையில் ஏன் யார்க் ராஜ்யப் பையனுல் அது முடியாமற்போய்விடும்?

எதையும் தானே தீர ஆலோசித்துச் செய்வது தான் வாழ்நாள் முழுதும் ஃபிராங்கின் பழக்கம். நெபோலியனின் வரலாற்றை அவன் திரும்பத் திரும்பப் படித்தான். நெபோலியனை மாதிரியாகக்கொண்டு மலர அவன் விரும்பவில்லை. போர்க்களப் பெருமையையோ, அரசியல் அதிகாரத்தையோ சற்றும் நாடாத சமாதானப் பிரியன் அவன்; அன்பே உருவானவன். தான் ஒரு கடைக்காரனுக வேண்டுவதுதான் அவன் விரும்பியதெல்லாம். ஆனல் மன்னர் மன்னனுவதற்கு நெபோலியன் எவ்வளவு பேரார்வம் கொண்டிருந்தாரோ அதே அளவு ஆவல் அவனுக்கு தான் கடைக்காரனுவதில் இருந்தது. அதற்குக் குறைவான வேறெதனுடனும் திருப்தியடைய அவன் தயாராயில்லை. அந்த இலக்கு நோக்கியே அவன் செல்வான்; இறுதியில் அதை அடைந்தும் தீருவான். வழியில்

எந்த இடரும் தன்னைத் தடைப்படுத்த அனுமதியான்; எவரும் தன்னை வழி பிறழ வைக்கவும் விடமாட்டான். என்றாவது ஒரு நாள் சொந்தத்தில் கடை வைத்தே தீர்வதெனத் தீர்மானித்தான், ஃபிராங்க்.

# 3

பதினாறாவது வயதுவரையில் ஃபிராங்கும் பள்ளிக்குச் சென்றான். ஆனால் ஒழுங்காகச் சென்றதில்லை; விட்டுவிட்டுத்தான் செல்ல முடிந்தது. அவ்வாறு அடிக்கடி அவன் பள்ளிக்கூடத்துக்குப் போகாமல் போனதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன: பண்ணையில் வேலை மிகுதியாக இருந்தபோதெல்லாம் தனக்கு உதவி செய்யும் பொருட்டு அவனை வீட்டிலேயே இருத்தி வைத்துக்கொண்டார் தந்தை அவ்வாறே, அவன் உடல் நலமற்றிருந்த சமயங்களில் தாயார் அவனை வீட்டில் தங்க வைத்தாள்.

அவனுடைய தேக நிலை ஸ்ரீமதி வுல்வொர்த்துக்கு எப்போதும் கவலை அளித்துக்கொண்டிருந்தது. அவன் உயர்ந்து வளர்ந்தானாயினும் குச்சிபோல மிகவும் மெலிந்திருந்தான். சளி அவனைச் சடுதியில் பற்றிக்கொண்டது; சுரத்துடன் கூடிய தொண்டைப் புண் அதைத் தொடர்வது வழக்கமாயிருந்தது. நிலத்தில் கடும் வேலை செய்தானானால் உணவுண்ணக்கூட முடியாத அளவுக்குக் களைத்துப் போய்விடுவான். "என் ஃபிராங்கிக்குப் பூஞ்சை உடம்பு" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டாள் ஸ்ரீமதி வுல்வொர்த். அதன் காரணமாக, கடுமையான பண்ணை வேலைக்குப் போதிய பலமுள்ளவன்தானா அவன் என்றும் ஐயுறத் தொடங்கினாள்.

ஆகவே, இறுதியில் தன்னுடைய அபிலாஷை

யைப் பற்றி ஒரு நாள் தாயிடம் கூறியபோது அவள் அதை அனுதாபத்துடன் கேட்பதைக் கண்டான் ஃபிராங்க். அவனுக்குப் பதினறு வயது பூர்த்தியாவ தற்குச் சற்று முன்னர் இது நிகழ்ந்தது. பள்ளியை விட்டு அவன் விலகவிருந்த சமயம் அது. பண்ணையில் அவன் முழு நேரமும் வேலை செய்ய வேண்டுமெனத் தந்தை எதிர்பார்த்தார். எனவே, அதனின்று அகலுவ தாயின் அதுவே தக்க தருணமென நினைத்தான்.

பால் வைக்கும் கொட்டகையில் தன் தாய் வெண் ணெய் கடைந்துகொண்டிருப்பதை அவன் பார்த் தான். தந்தையுடன் வயலுக்குப் போயிருந்தான் சார்லி. தாயுடன் தனித்து நிம்மதியாகப் பேச அதுவே அவனுக்குக் கிடைத்த முதல் சந்தர்ப்பம். சற்றே திக்கித் திணறியவனய்த் தாயினிடம் தன் ஆசைக் கனவைக் கொட்டித் தீர்த்தான்—"விவசாயியாக நான் விரும்பவில்லை. ஒருபோதும் அதில் எனக்கு இஷ்டம் இருந்ததே கிடையாது. வீட்டிலேயே தங்கித் தந்தை யுடன் வேலை செய்வதைவிடச் சாவதே மேல். நகரத் தில் ஒரு கடையில் வேலை பெறுவதுதான் உலகில் எனக்குள்ள ஆசையெல்லாம்!"

கெஞ்சும் கண்களுடன் தாயின் முகத்தை நோக் கியவனய்த் தன் பேச்சை முடித்தான் ஃபிராங்க். சிந்தனை தேங்கிய கண்களால் அவனை அவள் திரும்பி நோக்கினுள். அது எதிர்பாராத கோரிக்கைதான்; இருப்பினும் விரும்பத்தகாத ஒன்ரு? தன் தந்தையின் வாழ்க்கை முறையைத் தொடர அவனுக்குப் போதிய உடல் வலிமை இல்லை என்றே எப்போதும் அவள் நினைத்து வந்திருந்தாள். இப்போதோ அவன் அதை அறவே வெறுப்பதாகத் தென்பட்டது. அப்படிப் பட்ட வாழ்க்கையில் அவனை ஏன் வலுக்கட்டாயமாக நுழைக்க வேண்டும்? இதைவிட சுலபமான ஜீவனே பாயமொன்றை அவனல் கண்டு பிடிக்க முடியுமானல்

எதற்காக அவனைக் கட்டாயப்படுத்த வேண்டும்? கடை வைக்கும் தொழிலும் நேர்மையானதுதான். அதையே அவன் விரும்புவானேயாகில் ஃபிராங்க் ஏன் அதைக் கைக்கொள்ளக்கூடாது? இவ்வாறு அவள் சிந்தனை ஓடியது.

கவலையுடன் அவளையே நோக்கிக்கொண்டிருந் தான் ஃபிராங்க். "அப்பாவுக்கு இது பிடிக்காது என்பது எனக்குத் தெரியும். ஆனால் நீ மட்டும் என் தரப்பில் பேசினால் அவர் மனத்தை மாற்றிவிட முடியும். ஆம், நீ எனக்காகப் பரிந்து பேச வேண்டும், அம்மா!" என்று அவன் மன்றாடினான்.

குறுநகை புரிந்தவாறு அவன் தோளைத் தட்டிக் கொடுத்தாள் ஸ்ரீமதி வுல்வொர்த் "உன் தரப்பில் தான் நான் இருக்கிறேன், ஃபிராங்க். அதைப்பற்றி உனக் குக் கவலையே வேண்டாம். விவசாயம் உனக்குப் பிடிக் காததால் மற்றொரு வேலையை நீயாக யோசித்து முடிவு கட்டிய வரையில் நீ மிகவும் புத்திசாலித்தன மாகவே நடந்துகொண்டிருக்கிறாய். உனக்குப் புத்தி இருக்கிறது, மகனே—அண்ணன் ஆல்பன்கூட அதை ஒப்புக்கொள்கிறான். ஆனால் அவனுக்கும்கூட இந்தப் புதிய யோசனை பிடிக்காதென்றே பயப்படுகிறேன். உன் தந்தையைப்போலவேதான் அவனும் இதற்குச் சம்மதிக்கமாட்டான்."

"உன்னையும் என்னையும் தவிர வேறெவரும் இதை விரும்பமாட்டார்கள் என்றே நினைக்கிறேன்" வருத் தம் தோய்ந்த குரலில் கூறினான் ஃபிராங்க். "ஆனால் வர்த்தக வாழ்க்கை முறையைத்தான் நான் விரும்பு கிறேன். அது ஒன்றைத்தான் நான் விரும்புகிறேன்."

"அது எனக்கு நன்றாகத் தெரிகிறது. என்னால் முடிந்தமட்டிலும் அதற்கு உதவியும் செய்கிறேன். ஆனால் தந்தையின் சம்மதம் தவிர அதற்கு வேறு பலவும் வேண்டும்; ஃபிராங்க். எந்தக் கடையில் எப்படி

உனக்கு வேலை கிடைக்கும்? பட்டணத்திலேயே பல பையன்கள் அதற்குப் போட்டிக்கு இருப்பார்களே! எதற்காக கிராமத்துப் பையனொருவனை வேலைக்கு அமர்த்த வேண்டும்?"

"அது பற்றியும் நான் யோசித்துவிட்டேன்"— ஆர்வமுடன் கூறினான் ஃபிராங்க். "பட்டணத்துப் பையன்களுக்கு இல்லாத பயிற்சியே எனக்குத் தேவை கொள்முதல்-விற்றுமுதல் கணக்குகளைப் பதிய மட்டும் எனக்குத் தெரிந்துவிடுமானால் உடனடியாக எந்தக் கடைக்காரருக்கும நான் உபயோகமுள்ளவனாகி விடுவேன்."

'ஆனால் கணக்குப் பதிவுதான் உனக்குத் தெரியாத விஷயமாயிற்றே!"

"அதை நான் கற்றுக்கொண்டுவிட முடியும், அம்மா. எப்போதுமே கணக்கில் நான் கெட்டிக்காரனாகத்தான் இருந்துவந்திருக்கிறேன். வேண்டுமானால் ஆசிரியை எம்மாவைக் கேட்டுப்பார். ஆகவே கணக்குப் பதிவு முறையைக் கற்க எனக்கு அதிக நாளாகி விடாது. மேலும், வாட்டர் டவுனில் ஒருவன் அதற்கு வகுப்புகள் நடத்துகிறான். சங்கீத போதனையைப்போலத் தனிப்படச் சொல்லிக் கொடுக்கிறான். அவனிடம் நான் கொஞ்ச நாள் பாடம் படிக்க முடியுமானால்—"

"ஐயையோ, ஃபிராங்கி, அதற்கு ஏராளச் செலவாகும். அதோடு பண்ணை வேலைகளிலிருந்தும் அது உன்னைப் பிரித்துவிடுமே!"

"அதிகப் பொழுதை அபகரித்துவிடாது" என்று ஃபிராங்க் அறிவுறுத்தினான். "பள்ளிக்குப் போவதைவிட அதிக நேரம் ஆகிவிடாது அதற்கு. இங்கு அன்றாட வேலை முடிந்து சாப்பிட்டான பிறகும்கூட அவன் எனக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க இசையக் கூடும். பண விஷயம்தான் எனக்குக் கவலையாயிருக்கிறது!'—உடைத்துச் சொன்னான் அவன்.

"அதற்கு எவ்வளவு செலவாகும்?"

"பாடத்துக்கு ஐம்பது சதம் வீதம் பிடிக்கும். மொத்தம் இருபத்து நான்கு பாடங்கள். ஆக, பன்னிரண்டு டாலர்களாகும், அம்மா"

பன்னிரண்டு டாலர்கள் பெரும்பாலருக்கு இது பெருந்தொகை அல்லதான். ஆனால் ஏழ்மை வசப்பட்ட வுல்வொர்த்துகளுக்கோ இது மலையத்தனை தொகையல்லவா!

சிறிது நேரம் ஃபானி சிந்தித்தாள். பின்னர் சாவதானமாகக் கூறினாள்: "அந்த அளவு நான் சேமித்து வைத்திருக்கிறேன், ஃபிராங்கி. தேக அசௌக்கியம், அல்லது எதிர்பாராத நெருக்கடி ஏற்படும்போது செலவழிப்பதற்காகத்தான் சேர்த்து வைத்திருக்கிறேன். அது உன் அப்பாவுக்குத் தெரியாது. இப்போது இதை அவரிடம் சொல்வோம்; நல்ல காரியத்துக்காக அது பயன்படுகிறது என்பதையும் கூறுவோம்."

அவளை ஆரத் தழுவிக்கொண்டான் ஃபிராங்க் நரை விழத் தொடங்கியிருந்த அவளுடைய அடர்ந்த கருங்குழலை மெல்லத் தடவலானான். "இதற்காக நீ வருந்தத் தேவையிராது, அம்மா" என்றான், ஆனந்தம் துள்ள "நான் சம்பாதிக்க ஆரம்பித்ததுமே அதை உனக்குத் திருப்பித் தந்துவிடுவேன் அப்புறம் சொந்தத்தில் கடை ஏற்படுத்தியதும் அதில் எந்தப் பொருளிலும் முதல் உரிமை உனக்குத்தான்!"

"சொந்தக் கடையா!" என்று அவள் சிரித்தாள். "அடேயப்பா, பெரிய பெரிய மனக் கோட்டைகளையெல்லாம் கட்டுகிறாயே, திடீரென்று! இதோ பார், ஃபிராங்க், இந்த மாதிரி முட்டாள்தனமான ஆசைகள் வைத்து உன் மூளையைக் குழப்பிக்கொள்ளாதே."

"என் மூளையில் ஒன்றேயொன்றுக்குத்தான் இடமுண்டு, அம்மா. அது முட்டாள்தனமானதல்ல என்று நான் உறுதியாகக் கூறமுடியும்" என்று

பதிலிறுத்தான் ஃபிராங்க்.

விஷயத்தைத் தன் கணவனிடம் ஸ்ரீமதி வுல்வொர்த் சொல்லி, அவரது ஆட்சேபம் ஒவ்வொன்றையும் உறுதியாக மறுதளித்தாள். அவரை அவள் அரை மனத்துடன் சம்மதம் அளிக்கச் செய்வதற்குள் வாட்டர்டவுனில் இருந்த 'பேராசிரியரு'டன் ஒரு ஏற்பாடு செய்துகொண்டுவிட்டான் ஃபிராங்க், வாரந்தோறும் நான்கு மாலைகளில் அவரது விடுதிக்குச் சென்று படித்தான். ஆறுவது வார முடிவில் புத்தொளியுடன் பிரகாசித்த அத்தாட்சிப் பத்திரத்தைப் பெற்று, அதன் துணையோடு வேலையைத் தேடிப் புறப்பட்டான்.

வேலைதேட அதைவிட அசந்தர்ப்பமான சமயம் வேறு இருந்திருக்க முடியாது. உள்நாட்டுப் போர் முடிவையடுத்து வாணிபவுலகைப் பொருளாதார மந்தம்கவ்விக்கொண்டது. அதுபல்லாண்டுகாலம்நீடித்தது விலைகள் வெகுவாக ஏறின; பணப் பற்றுக்குறை மிகுந்திருந்தது. எனவே, பழைய வேலைக்காரர்களை வீட்டுக்கனுப்பி வந்தனரேயன்றிப் புதிதாக யாரையும் எடுத்துக்கொள்ளும் நிலையில் கடைக்காரர்கள் இல்லை. அப்படியே வேலை காலியானாலும் போரிலிருந்து திரும்பிய மாஜி சிப்பாய்களுக்கு முதல் வாய்ப்பு அளித்தனர். அனுபவம் ஏதும் இல்லாதிருந்த கிராமாந்தரப் பையனை அமர்த்திக்கொள்ள யாரும் தயாராயில்லை.

பள்ளியிலிருந்து ஃபிராங்க் விலகியபின் கழிந்த நான்காண்டுகள் அவனுடைய வாழ்க்கையிலேயே மிக மோசமானவையாகும். பயனற்ற காரியத்தில் தன் மனைவியின் நல்ல பணம் விரயமாகிவிட்டதே என்று அடிக்கடி அரற்றினார் வுல்வொர்த். என்ன நேருமெனத் தான் முன்னரே சொல்லவில்லையாவெனச் சுட்டிக்காட்டவும் தவறவில்லை. மாமன் ஆல்பனும், அந்த முட்டாள்தனமான யோசனையை மறந்துவிட்டு

விவசாயத்தில் இறங்கும்படி கூறினர். அந்த இரு பெரியவர்களும் அவனை வற்புறுத்தினர்.

மனமிடியச் செய்த அக்காலம் முழுவதிலும் பண்ணை வேலைகளில் அவன் மூழ்க நேர்ந்தது. தந்தைக்குத் தன் உதவி தேவைப்படாத சமயங்களில் அண்டை அயலாருக்கு மரம் வெட்டிக் கொடுத்தும், முளைகளைப் பிடுங்கியும் உதவினன். இதன் மூலம் சம்பாதித்த முதல் டாலரைத் தாயினிடம் கொண்டு வந்து கொடுத்தான்: "கணக்குப் பாடங்களுக்காக நீ செலவிட்ட பணத்துக்காக இதை வைத்துக்கொள். முழுப் பணத்தையும் திருப்பித் தரச் சிறிது காலம் பிடிக்கத்தான் பிடிக்கும். இருந்தபோதிலும் ஒரு சதம் கூடப் பாக்கியில்லாமல் முழுத் தொகைகளையும் கொடுத்துவிடத்தான் போகிறேன்."

அந்த வெள்ளி டாலரை மிருதுவாக அவன் கைக்குள்ளேயே திணித்தாள் ஸ்ரீமதி வுல்வொர்த்: "வேண்டாம், ஃபிராங்கி. நீ எனக்கு எதுவும் கொடுக்க வேண்டியதில்லை. உன் பணத்தை நீயே வைத்துக்கொண்டு சேமித்துவா. பிற்பாடு தேவைப்படும்போது அது உதவும். ஏன், நீ கூறுகிறாயே, அந்தக் கடையை வைக்கவும் உதவலாம்."

வரட்சியாகப் புன்னகை புரிந்தான் ஃபிராங்க் "நான் கடை தொடங்க முடியும் என்பதை நீ நம்பவில்லை, அப்படித்தானே அம்மா? ஆம், என்னைத்தவிர வேறு யாரும் அதை நம்புவதில்லை. எனக்குக்கூடச் சில சமயங்களில் நம்பிக்கை குன்றிவிடுகிறது. ஆனல் அதிக காலத்துக்கல்ல. ஏன் நெப்போலியன்கூடச் சில சந்தர்ப்பங்களில் உற்சாகம் இழந்ததுண்டாம். இருப்பினும் விடாமல் தொடர்ந்து முன்னேறினராம்...சரி, சரி, ஏதாவதொரு பழைய காலுறையைக் கொடு, இந்தப் பணத்தைப் போட்டுவைக்க. நான் சம்பாதிக்கும் ஒவ்வொரு பென்னியையும் சேர்த்து வைக்கத்

தொடங்குகிறேன். எந்தச் சமயம் உனக்குத் தேவைப் பட்டாலும்—"

"ஊஹூம், எனக்கு ஒருபோதும் அது தேவைப் படாது, மகனே. ஆனால் உனக்கு வேண்டியிருக்கும். சொந்த வழியில் செல்ல ஒரு பையன் விரும்பும்போது கையில் கொஞ்சம் பணம் இருப்பது அவசியமானது. பயனுள்ளது. அதை வைத்துககொண்டு உனக்கு இஷ்டமானதைச் செய்துகொள்" என்று கூறிவிட்டு, தையல் பொருள்கள் இருந்த தன் பையில் தேடினாள். ஒரு காலுறையைத் துழாவியெடுத்து, "இதோ ஒற்றை யாக ஒரு சிவப்புக் காலுறை இருக்கிறது. இது போதுமா உனக்கு?"

"அபாரம், போ! சிவப்புதான் எனக்குப் பிரியமான வர்ணம். ஒரு வேளை இது எனக்கு அதிருஷ்டம் தேடித்தந்தாலும் தரலாம்." அந்தக் காலுறையின் அடி வரையிலும் அந்தக் காசைத் தள்ளினான். "இது என் கடைக்காக" என்றான் உறுதியோடு. "பார்த்தால் அதிகமில்லை. இல்லையா? ஆனால் இது ஒரு ஆரம்பம் தான். நீயே பார்க்கப்போகிறாய், அம்மா, பார்க்கத் தான் போகிறாய். இன்னமும் சொல்வேன், அந்தக் கடையை நான் வைத்தே தீருவேன்."

திடஉறுதியுடன் அவன் பேசினான் ஆயினும் அவ னுடைய நம்பிக்கை சிறுகச் சிறுகக் குறைந்துவந்தது. வாட்டர்டவுனிலும், சுற்றுவட்டாரத்தில் இருந்த பல சிற்றூர்களிலும் கடைகடையாக வேலை தேடினான்; இறுதியில், கிரேட்பெண்டில் சிறியதொரு பலசரக்குக் கடை வைத்திருந்த டேனியல் மக்நீல் அவனுக்கு வேலைதர முன்வந்தார். ஆனால் தம்மால் அவனுக்கு ஊதியமேதும் தரவியலாது என்றார். ஆயினும் ஒழிவு இருக்கும்போதெல்லாம் அவன் தம் கடைக்கு வந்து அனுபவம் பெறலாம் என்றும் கூறினார்.

எல்லாக் கடை முதலாளிகளும் அனுபவம் அவசிய

மென அறிவுறுத்தியபடியால் இந்த ஏற்பாட்டை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டான், ஃபிராங்க். பகல் பொழுது பூராவும் பண்ணை வேலைக்கே சரியாகஇருந்தது. ஆனால் மாலை நேரம் முழுவதையும் கடையில் கழிக்க அவனால் முடிந்தது. வேலையில் நாட்டமும் ஆவலும், விரைவில் கற்றுக்கொள்ளும்சக்தியும் அவனிடம் இருப்பதை மக்நீல் கண்டார். அவருடைய கடையில் பணமெதையும் அவன் சம்பாதிக்கவில்லையாயினும் பயனுள்ள நண்பரொருவரைப் பெற்றான்.

1873-ம் ஆண்டு மார்ச் மாதத்தில் பனிபெய்த ஒருநாளிரவு வழக்கம்போல ஃபிராங்க் வரவில்லை கடை மூடும் நேரமான ஒன்பது மணியானபோதுகூட வர வில்லை. தனியாகவே கடையைக் கட்டிவிட்டு, பனிமாரியினூடே சிரமப்பட்டு வீடு சென்றார் மக்நீல். வீட்டினுள் நுழைந்து மேலாடையை அவர் களைந்து கொண்டிருந்தபோது யாரோ கதவை இடிக்கும் சப்தம் கேட்டது. மக்நீல் வெளியே வந்தார்.

ஃபிராங்க் வுல்வொர்த் தான் வாயிற்படியில் நின்றுகொண்டிருந்தான். அவனுக்கு அப்போது ஏறக்குறைய இருபத்தோரு வயது ஆகியிருந்தது. உயர்ந்து, ஒல்லியாக வளர்ந்திருந்தான். அவனுடைய நீலக் கண்களில் எப்போதும் ஒரு கவலைக்குறி. மற்ற நாட்களைவிட அன்று அக்கவலை மிகுதியாகக் காணப் பட்டது. கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்த மரக்கணப்பினருகே இருந்த ஒரு ஆஸனத்துக்கு அவனை இட்டுச்சென்று அமர்த்தினார், வயதான அந்தக் கடைக்காரர். வந்த விஷயத்தை ஃபிராங்க் சொல்லித்தீர்க்கையில் பரிவோடு மௌனமாகச் செவி யுற்றார்.

அன்று பிற்பகல் வுல்வொர்த் வீட்டுக்கு ஆல்பன் மக்பிரயர் மாமன் வந்திருந்தார். ஃபிராங்குக்கு நிரந்தர வேலையொன்று தரவே அவர் வந்தார்.

அவனைத் தன் பண்ணையில் வேலைக்கு அமர்த்தி, மாதம் 18 டாலர் சம்பளமுடன் இலவசமாக உணவும் உறைவிடமும் கொடுக்க அவர் தயாராயிருந்தார். அவ்வேலையை அவன் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றார். தங்கள் நிலத்தில் வேலை செய்யுமளவு சார்லி வளர்ந்துவிட்டானகையால் ஃபிராங்கை எளிதாக விட்டுக்கொடுக்க முடியும் என்று ஜான் வொர்த் கூறினர்.

அந்த யோசனை குறித்துப் பல மணி நேரம் அக் குடும்பம் ஆலோசித்தது. கடை வேலை கிடைக்கும் என்றே இன்னமும் தான் நம்பிக்கொண்டிருப்பதாகத் தயங்கித் தயங்கி ஃபிராங்க் கூறியபோது ஆல்ப னுக்கு வந்த கோபம் கொஞ்சநஞ்சமல்ல. மாமனின் யோசனையை ஏற்பதானல் நிரந்தரமாக விவசாயத்தி லேயே ஃபிராங்க் ஈடுபட்டாக வேண்டும். அதுவோ அவனுக்குப் பிடிக்கவேயில்லை.

தந்தை திட்டினர், மாமன் கொதித்துக் குதித் தார்; ஆயினும் ஃபிராங்க் அசைந்து கொடுக்கவில்லை. கடைசியில் தாய்தான் அந்த விவாதத்தை முடித்து வைத்தாள். வெகு நேரம் மன்றாடியபின் அது குறித்து மேலும் இரண்டு வாரம் அவகாசம் அளிக்க ஆல்பனை அவள் சம்மதிக்கச் செய்தாள். அதற்குள் கடை வேலை எதுவும் கிடைக்காவிடில் மக்பிரயர் பண்ணைக்கு ஃபிராங்க் போய்விட வேண்டியதுதான் என்று முடி வாயிற்று.

“ஆனல் நான்கு வருடமாகியும் எந்தக் கடையி லும் எனக்கு வேலை கிடைக்கவில்லையே! இரண்டு வாரத்துக்குள் எப்படி நான் வேலை சம்பாதிப்பது? இந்தக் கவலைதான் என்னை அரித்துத் தின்கிறது நான் என்ன செய்ய வேண்டுமென நீங்கள் நினைக்கி றீர்கள்?” என்று நம்பிக்கை இழந்தவனய் ஃபிராங்க் கேட்டான்.

தம் வாயில் இருந்த சுக்காஊ எடுத்தார் கிழவர் மக்நீல் "நீ என்ன செய்ய இயலும் என்பதே கேள்வி, இல்லையா ஃபிராங்க்? உன் மாமன் அளிக்க முன் வந்திருக்கும் வேலை சிறந்ததுதான், சந்தேகமில்லை அதை நீ ஏற்காவிடில் உன்னை முட்டாள் என்றுதான் பெரும்பாலானவர் கூறுவர். வேண்டாம், வேண்டாம், நீ சொல்லத் தேவையே இல்லை என்னைப் பொறுத்த வரையில் அந்த வேலையை ஏற்க மாட்டேன். சிலருக்கு விவசாயமே ஏற்றது, மற்றும் சிலர் அதற்குத் தகுந்தவர்களல்ல. என்னைப்போலவே நீயும் அதற்கு லாயக்கற்றவன் தான். சரி, என்ன செய்வது என்பதை இப்போது ஆலோசிப்போம். மூலைக்கடையில் வேலைக்கு நீ ஏற்கெனவேயே விண்ணப்பம் செய்திருக்கிருய், அல்லவா?"

"ஆமாம்; ஆனல் அங்குள்ள முதல் குமாஸ்தாவைத் தாண்டி என்னல் போக முடிந்ததில்லை. அந்தக் கடைக்கும் என் நிலைக்கும் ஏணி வைத்தாலும் எட்டாதாம்—சந்தேகத்துக்கிடமின்றி அதை அவன் சொன்ஞன்" என்று ஃபிராங்க் பதில் கூறிஞன்.

'அப்படியா! சரி, அவர்களுடைய மொத்த விற்பனைப் பிரிவுடன் எனக்கு வியாபாரம் உண்டு. உன்னைப் பற்றி ஆக்ஸ்பரியிடம் பேசினல் பயனேற்படுமா என்று யோசிக்கிறேன். உனக்கு நான் நல்ல அத்தாட்சி கொடுக்க முடியும். நான் சொல்கிறேன் கேள், ஃபிராங்க். விரைவில் வாட்டர்டவுனுக்குச் சென்று பண்டங்கள் வாங்கப் போகிறேன். அப்போது ஆக்ஸ்பரியுடன் பேசுகிறேன்."

"எனக்கு இரண்டு வாரம்தான் அவகாசம் இருக்கிறது" என்று அவருக்கு ஞாபகமூட்டிஞன் ஃபிராங்க்

"என்றைக்கு நான் செல்வேன் என்பதை இப்போது திட்டமாகக் கூறமுடியாதாயினும் இரண்டு வாரங்களுக்குள் நிச்சயம் போகவிருக்கிறேன். அது

இருக்கட்டும், என் சகோதரியின் மகன் வந்துள்ளபடியால் கடையில் சில நாட்களுக்கு உன் உதவி தேவையாயிராது. ஆயினும் அவ்வப்போது வந்து பார்த்து விட்டுப்போ. உனக்கு ஏதாவது செய்தி இருந்தாலும் இருக்கும்.''

முதல்வாரம்முழுவதும் ஓரிரவு தவருமல் அவரைப் போய்ப் பார்த்து வந்தான் ஃபிராங்க். அதுவரை அவர் வாட்டர்டவுனுக்குப் போய்வரவில்லை என்பதன்றி வேறேதும் அறிய 'இயலவில்லை. ஆனல் திங்களன்று அவனுக்கு நல்ல சேதி காத்திருந்தது. வாட்டர்டவுனுக்கு மக்நீல் சென்று, ஆக்ஸ்பரி-மூர்கடையில் சில சாமான்கள் வாங்கியிருந்தார் ; அப்போது ஆக்ஸ்பரியை அவர் சந்தித்து, கிரேட்பெண்டைச் சேர்ந்த ஒரு கெட்டிக்கார இளைஞனை வேலைக்கமர்த்திக் கொள்ளும்படி வற்புறுத்தினர். அப்போது தம் கடையில் வேலை எதுவும் காலியாக இல்லையாயினும் பையனைப் பார்க்க ஆக்ஸ்பரி இசைந்துவிட்டார்.

''போய் அவரைப் பார், இனி உன் வாயைக் கொண்டுதான் நீ வேலை தேடிக்கொள்ள வேண்டும். உன்னை அவருக்குப் பிடித்துவிட்டால் உனக்காக ஒரு வேலையைச் சிருஷ்டிப்பது சிரமமல்ல'' என்று மக்நீல் அறிவுரை கூறினர்.

''நாளையே செல்கிறேன்''...மகிழ்ச்சி மேலிடக் கூறினன் ஃபிராங்க். கிழவரின் கையை இறுகப் பற்றிக்கொண்டான் : ''இந்த உதவியை நான் ஒரு நாளும் மறவேன், மிஸ்டர் மக்நீல் ஒருநாளும் மறவேன் !''

# 4

மக்நீலின் புகழுரைகள் மிகுந்ததொரு சிபாரிசுக் கடிதத்துடன் வாட்டர்டவுன் சென்று, ஆக்ஸ்பரி அண்ட் மூர் கடையில் ஆஜரானுன், ∴பிராங்க் அன்று சனி சுரத்தினுல் ஆக்ஸ்பரி வீட்டிலேயே தங்கி விட்டதாக ஒரு குமாஸ்தா கூறினுன். ஒரு கணம் தயங்கிய ∴பிராங்க், அவருடைய வீட்டுக்குச் செல்வதற்கான வழியை விசாரித்தான்.

அந்த வீட்டில் ஒரு வேலைக்காரி அவனைச் சமையலறைக்கு அழைத்துச் சென்ருள். அங்கே சூடான கடுகுத் தண்ணீர் நிரம்பியிருந்த தொட்டியில் கால்களை வைத்துக்கொண்டு அந்த வியாபாரி உட்கார்ந்திருந்தார். தமது இரவு நேரச் சட்டைமீது கம்பளியொன்றைப் போர்த்தியிருந்த ஆக்ஸ்பரி, அவருடைய கடையில் இருந்த தலைமைச் சிப்பந்தி போல அவ்வளவு பயங்கரமாகத் தோற்றமளிக்கவில்லை. தைரியமாக அவரை அணுகிய ∴பிராங்க், அவரிடம் மக்நீலின் கடிதத்தைத் தந்தான்.

உடல் நலிவினுலும், அதற்கான சிகிச்சையினுலும் சலித்துப் போயிருந்த ஆக்ஸ்பரி, அவ்வாறு யாராவது ஒருவர் வருவதை ஆர்வமுடன் வரவேற்கும் நிலையில் இருந்தார். கடிதத்தைப் படித்து முடித்ததும் நிமிர்ந்தார்: "உன்னை வேலைக்கு அமர்த்திக் கொள்ளாவிடில் வாழ்விலேயே அரியதொரு சந்தர்ப்பத்தை நழுவவிட்டவன் ஆவேன் என்கிருர் மக்நீல், உனக்குக் கணக்கும் தெரியும் என்று கூறியுள்ளார். அவருக்காகக் கணக்குப் பதிந்தவனு நீ?"

"இல்லை, ஐயா. தம் கணக்கு விவரங்களை அவரே கவனித்துக் கொண்டார். ஆனுல் அவ்வேலையை எப்படிச்செய்வது என்பது எனக்குத் தெரியும். இந்த ஊரிலுள்ள பேராசிரியரிடம் அதை நான் பயின்றேன்."

"அப்படியா ? ஆனால் அது ஒரு விதத்திலும் எங்களுக்கு உதவப் போவதில்லை" என்று முனகினார் ஆக்ஸ்பரி. "எங்களிடம் தேர்ந்ததொரு கணக்காயர் இருக்கிறார். உன்னை நாங்கள் எடுத்துக் கொள்வதாயின் சாதாரணச் சிப்பந்தி வேலைதான் தர முடியும்."

"சரி, ஐயா !" ஃபிராங்க் முகம் பிரகாசம் அடைந்தது. "நீங்கள் குறிப்பிடும் எந்த வேலையையும் செய்ய சித்தமாக இருக்கிறேன்."

"ஹூம், எந்த வேலைக்கு நீ லாயக்கு என்பது பிடிபடவில்லையே ! அது இருக்கட்டும், எப்படிப்பட்ட ஆசாமி நீ ? குடிப்பது, புகை பிடிப்பது போன்ற தீய பழக்கம் ஏதாவது உண்டா ?"

"நான் குடிப்பதில்லை, ஐயா"...நாணத்துடன் ஃபிராங்க் பதிலிறுத்தான். "புகைப்பதும் கிடையாது. ஞாயிறுதோறும் என் குடும்பத்துடன் மெதடிஸ்ட் ஆலயத்துக்குச் செல்வது வழக்கம்."

"அது சரி, கெட்ட பழக்கம் ஏதாவது உண்டா சொல்?"...வியாபாரி விடவில்லை.

"கிரேட் பெண்ட் வட்டாரத்தில் மிகத் தீயது எதையும் செய்ய இடமிருக்கிறதென நான் எண்ணவில்லை, மிஸ்டர் ஆக்ஸ்பரி. அப்படி ஏதாவது இருக்குமானால் அதைக் கண்டுகொள்ள முடியாத அளவு நாங்கள் வேலையில் மூழ்கிக் கிடக்கிறோம் என்றே கூறுவேன்."

அது சரியான பதிலாயிருக்கக்கூடுமென ஃபிராங்க் நினைக்கவில்லை. ஆயினும் அது ஆக்ஸ்பரியைத் திருப்திப்படுத்தியதாகத் தோன்றியது.

"கடும் உழைப்பாளி வம்சத்தில் வந்தவன் நீ, இல்லையா? அதுவரையில் நல்லது தான். எனினும் இன்னமும் என்னால் நிச்சயமாகக் கூற இயலவில்லை. வெறும் பட்டிக்காட்டானாகவே நீ எனக்குத் தோன்றுகிறாய், இளைஞனே! எங்கள் வாடிக்கையாளருடன் நீ

எப்படிப் பழகுவாய் என்பதை என்னால் நிதானிக்க முடியவில்லை. இருப்பினும், மக்நீலின் விருப்பத்தைப் பூர்த்தி செய்யவே ஆசைப்படுகிறேன். நீ என்ன செய்யவேண்டும் என்பதைச் சொல்கிறேன், கேள். கடைக்குச் சென்று என் கூட்டாளியைப் பார். உன்னை வேலைக்கு வைத்துக்கொள்ளச் சொன்னேன் என்று அவரிடம் கூறிவிடாதே. உன்னைப் பார்த்துப் பரிசீலித்து அவரது அபிப்பிராயத்தை சொல்லச் சொன்னேன் என்று மட்டும் கூறு. நீ தகுதியற்றவன் என்று அவர் நினைத்தால் அதோடு இவ்விஷயம் தீர்ந்தது. ஆனால் உன்னை வேலைக்கமர்த்திப் பரீட்சிக்க அவர் இஷ்டப்பட்டால் எனக்கு ஆட்சேபம் எதுவுமில்லை.”

அந்த வீட்டை விட்டு வெளியே வந்ததும் ஆறுதல் புன்னகையொன்று அரும்பியது ஃபிராங்கின் முகத்தில். அந்தப் பேட்டி யொன்றும் மோசமாக அமைந்துவிடவில்லை அல்லவா! மிகவும் நேச முறையிலேயே ஆக்ஸ்பரி நடந்து கொண்டார்; ஆகவே புதுத் தெம்புடன் கடைக்குத் திரும்பி மூரின் பேட்டியைக் கோரினான்.

முதலாவதை விட அந்த இரண்டாவது பேட்டி பெருஞ் சோதனையாக அமைந்தது கடையின் பின் பகுதியில் தம் காரியாலயமாகிய உயரமானதொரு மேடைக்கு ஃபிராங்கை மூர் தருவித்தார். பக்க வாட்டில் படர்ந்த மீசையுடனும், குதிரை லாட வடிவிலான தங்க ஊசி செருகப்பட்டிருந்த 'ஸாடின்' கழுத்துச் சுருக்குடனும் அச்சமூட்டும் வகையில் காட்சியளித்தார் அவர். முகத்தைச் சிணுங்கியவாறு மக்நீலின் கடிதத்தைப் படித்ததும் கேள்விமேல் கேள்வி போட்டுத் துளைக்கத் துவங்கினார்.

அடுத்தடுத்து அதிவேகமாக வந்தன, அக்கேள்விகள்...விற்பனைப் பட்டியல் தயாரிக்க ஃபிராங்குக்குத்

தெரியுமா? பண்டங்களை வகைப்படுத்தி, எண்ணி, ஜாபிதா தயாரிக்க அவனால் இயலுமா? துணி வகை யறுவை அளப்பது எப்படி? அசல் பட்டுக்கும் பருத்தி கலந்த பட்டுக்குமிடையே உள்ள வித்தியாசத்தை அவனால் கண்டு கூற முடியுமா? பிளானெலுக்கும் பிளானெலட்டுக்குமிடை பேதத்தை அறிவானா?... "என்ன, ஒரு ஜவுளிக்கடைச் சிப்பந்தி அறிய வேண்டிய இந்த மிகச் சாதாரண விஷயங்கள் கூடவா அவனுக்குத் தெரியாது?"

"கணக்குப் பதியத் தெரியும்" என்று வகையறி யாதவனாய்க் கூறினான் ஃபிராங்க்.

"எங்களிடம் கணக்காயர் இருக்கிறார், தேவை யான அளவுக்கு விற்பனையாளர்களும் உண்டு. ஜவுளி வியாபாரத்தில் அரிச்சுவடி கூட அறியாத நாட்டுப் புறத்தானை நாங்கள் ஏன் வேலைக்கு வைத்துக் கொள்ள வேண்டும்?"

"என்னால் கற்றுக்கொள்ள முடியும்" நிதானமாகக் கூறினான் ஃபிராங்க்.

"விரைவாகவே கற்றறியக் கூடியவன் நான், மிஸ்டர் மக்நீலே அவ்வாறு கூறவில்லையா? பெரும் பாலும் மளிகை சாமான்களையே விற்பவர் அவர். ஆகவே துணிவகைகளைப்பற்றி அதிகமறிய எனக்குச் சந்தர்ப்பம் இருக்கவில்லை; ஆயினும் என்னால் கற்றுக் கொண்டுவிட முடியும், மிஸ்டர் மூர். அதற்காக எவ் வளவு காலம், எத்தனை பாடுபட வேண்டியிருந்தாலும் நான் பொருட்படுத்த மாட்டேன்."

உண்மையான ஆர்வம் பிரதிபலித்த அந்த இள முகத்தை ஊன்றி நோக்கினார் மூர். "நகரத்தில் சில நாள் வாழ்வதற்கான வெறும் சாக்குத்தானே இது? இல்லை, நிஜமாகவே கடை வேலையையே உன்னுடைய நிரந்தர ஜீவனோபாயமாகக் கொள்ள உனக்கு விருப்பம் இருக்கிறதா?" என்று அவர் வினவினார்.

"நான் எப்போதும் செய்ய ஆசைப்படும் ஒரே வேலைத்துறைதான், மிஸ்டர் மூர். என் வாழ்க்கையிலேயே இது ஒன்றுதான் என் வேலையாக இருக்குமென எண்ணுகிறேன்."

அவனுடைய குரலில் அந்தரங்கசுத்தி ஐயமறத் தொனித்தது. ஒரு கணம் தயங்கிய மூர், தம் கையில் இருந்த மக்கீலின் கடிதத்தை நோக்கினார். அதன் உறையின்மீது, "அனுபவம் அற்றவன் தான், ஆயினும் ஆர்வம் இருக்கிறது. வேண்டுமானால் பரீட்சை செய்து பார்க்கவும்" என்று எழுதப் பட்டிருந்தது. ஆக்ஸ்பரியின் கையெழுத்துதான் அது அவரோ அந்தக் கடையின் மூத்த கூட்டாளி.

"சரி உனக்கு ஒரு சந்தர்ப்பம் அளித்துப் பார்க்கிறேன்" என்றார் மூர் இறுதியில். "ஆனால் அடிமட்டத்திலிருந்துதான் நீ தொடங்கவேண்டும். ஆமாம், ஏணியின் கடைசிப்படிதான் உனக்குக் கிடைக்கும், தம்பி. சிப்பப் பெட்டிகளைத் திறப்பது, ஜன்னல்களைக் கழுவுதல், கணப்புக்கான விறகுகளைப் பிளப்பது, அவை அணையாமல் பார்த்துக் கொள்ளுதல், சாம்பலை வெளியே கொண்டுபோய்க் கொட்டுவது போன்ற வேலைகளைத்தான் நீ செய்யவேண்டும். ஆம், கடையைக் கூட்டிச் சுத்தப்படுத்துவதும் உன் வேலைதான். இப்போது சொல்லு, இந்த மாதிரியான கடை வேலைகளையா நீ செய்ய விரும்புகிறாய்?"

"ஆம், ஐயா. கடையில் எந்த வேலையாயினும் செய்யவே ஆசைப்படுகிறேன்"...மகிழ்ச்சியுடன்விடை கூறினான் ஃபிராங்க் "நீங்கள் குறிப்பிட்ட வேலைகளே எனக்குப்போதும். எப்போது அவற்றை நான் ஆரம்பிக்கவேண்டும், மிஸ்டர் மூர்? எனக்கு எவ்வளவு ஊதியம் தரப் போகிறீர்கள்?"

"ஊதியமா! வியாபார முறையைச் சொல்லிக் கொடுப்பதற்கு உனக்கு ஊதியமா? அட முட்டாள்

பயலே! அதற்காக நீயல்லவோ எங்களுக்குப் பணம் தரவேண்டும்! கணக்குப் பதிவு முறையைக் கற்றுக் கொள்ளப் பணம் கொடுத்தாய், அல்லவா? அதேபோல, கடை நடத்துவதைக் கற்றுத்தருவதற்காக எங்களுக்கும் நீ பணம் கொடுக்கத்தானே வேண்டும்? போனால் போகிறது என்று நாங்கள் தாராள மனத்துடனேயே நடந்து கொள்கிறோம். உன்னிடம் நாங்கள் ஒரு சதம் கூட வாங்கமாட்டோம். எந்த வேலைக்காவது நீ தகுதியுடையவன் என்பது தெரியவந்தால் இன்னும் ஆறு மாதத்தில் உனக்குச் சம்பளம் கொடுக்கத் தொடங்குவோம். எப்படி இந்த ஏற்பாடு? இதுதான் நான் அளிக்கக் கூடியது. இஷ்டமிருந்தால் ஏற்றுக் கொள், இல்லாவிடில் விட்டுவிடு."

தன் நம்பிக்கை சீர் குலைந்ததை எப்படியோ சமாளித்து மறைத்துக்கொண்டான் ஃபிராங்க். "இது பற்றி நான் யோசித்து முடிவு கூறலாமா, ஐயா?" "இன்று மாலையே சொல்லிவிடுகிறேன்." என்று அமைதியாகக் கேட்டான்.

"எப்படி வேண்டுமானாலும் செய்துகொள்" அசிரத்தையுடன் மொழிந்துவிட்டுத் தம் மேஜைக்குத் திரும்பினார் மூர்.

அதிர்ச்சி கண்களை மறைக்க, தட்டித் தடுமாறிக் கடையிலிருந்து வெளியே வந்தான் ஃபிராங்க். நீதி மன்றத்தின் படிகளை அடைந்தான்; அவற்றில் படிந்திருந்த பனியைத் தள்ளிவிட்டு அமர்ந்தான். பின்னர் ஒரு பென்ஸில் துணுக்கையும், காகிதத் துண்டொன்றையும் எடுத்துக் கணக்குப் போடலானான்.

அவனுடைய 'பாங்கி'யான அந்தப் பழைய சிவப்புக் காலுறையில் அப்போது சரியாக 50 டாலர்கள் சேர்ந்திருந்தன. அந்தச் சேமிப்பு நீடிக்குமளவு அவனால் ஊதியமின்றியே உழைக்க முடியும். ஆனால் நகரத்தில் ஆறு மாதம் வசிக்க அந்த 50 டாலர்கள்

போதுமா? ஐம்பதை இருபத்துநான்கு வாரங்களினால் வகுத்தான். கிடைத்த விடையைக் கண்டதும் தலையை ஆட்டி மறுதளித்தான். நகரில் இருந்த சாப்பாட்டு விடுதிகள் எவ்வளவு கட்டணம் வசூலிக்கும் என்பது அவனுக்குத் தெரியாது; ஆயினும் அத் தொகையைவிட அது அதிகமாகவே இருக்கும் என அவனுக்குத் தோன்றியது. எனினும் விசாரித்து திட்டமாகத் தெரிந்து கொள்வதே தரமெனத் தேர்ந்தான்.

அதன்பின் இரண்டு மணிநேரம் வாட்டர் டவுனின் சந்து பொந்துகளில் 'உணவு, உறைவிட வசதிகள் கிடைக்கும்' என்று போட்ட பலகைகளைப் பார்த்தவாறு ஃபிராங்க் சுற்றியலைந்தான், அவை ஏராளமாகக் காணப்பட்டன. ஏனெனில், பல வீடுகளின் தகப்பன்மாரை உள்நாட்டுப் போர் பலி கொண்டுவிட்டது. எனவே, சொந்த வீடுகள் வைத்திருந்த விதவைகளெல்லாம் வருவாயை உத்தேசித்து விருந்தினரை ஏற்றார்கள். பல வீடுகளின் கதவு மணியை ஃபிராங்க் அடித்து, ஒவ்வொரு வீட்டு எஜமானியையும் விசாரித்தான். கணந்தோறும் அவன் ஆர்வம் மேன்மேலும் வரண்டது. காரணம், சாப்பாட்டுடன் கூடிய ஒற்றையறைக்கு குறைந்தபட்சம் வாரம் 3½ டாலர் கட்டணம் கேட்டார்கள்.

கடைசி வீட்டினின்று திரும்பி மீண்டும் கடைக்குச் சென்றான் ஃபிராங்க் மூரின் காரியாலயப்படியில் ஏறியபோது அவன் இதயம் வேகமாக அடித்துக் கொண்டது. இம்முறை அவன் முயற்சி தோற்றால் ஆல்பன் மாமாவின் பண்ணை தவிர அவனுக்கு வேறு புகல் இல்லையல்லவா? ஆகவே, தோற்கவே கூடாது என்று திடச்சித்தம் கொண்டான்.

"ஹூம், முடிவு என்ன?" என்று அந்த வியாபாரி வினவினார்.

தொண்டையைக் கனைத்துக் கொண்டான் ஃபிராங்க். தன் குரல் நடுங்கிவிடக்கூடாதே என்று கவலைப்பட்டான்: "நான் 50 டாலர்கள் சேர்த்துவைத்திருக்கிறேன், மிஸ்டர் மூர். அதைக் கொண்டு இந்த நகரத்தில்நான் மூன்று மாதம் காலந்தள்ளிவிடலாம். ஆகவே அந்த மூன்று மாதங்களுக்கு எனக்கு ஊதியம் தேவையில்லை. அதற்கிடையில் தான் தகுதியற்றவனுகத் தோன்றினுல் எப்போது வேண்டுமானுலும் நீங்கள் என்னைத் தள்ளிவிடலாம்."

"அதை நீ எனக்குச் சொல்லித் தரவேண்டியதில்லை" என்று மூர் குறுக்கிட்டார். "எப்போது உன் வேலை பிடித்தமில்லையோ உடனே வெளியியே போய்விடவேண்டியதுதான்."

"சரி, ஐயா. அதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனுல்... "உறுதியாகக் கூற முனைந்து விட்டான்:—"என்னை நீங்கள் தொடர்ந்து வைத்துக் கொண்டால் மூன்று மாதம் கழித்து வாரம் 3½ டாலர் சம்பளம் கொடுக்கவேண்டுமென்று விரும்புகிறேன். வாட்டர்டவுனில் வாழ அந்த அளவு எனக்குச் செலவாகும். அதன்பிறகு, என் வேலை உங்களுக்குத் திருப்தியளிக்கும் பட்சத்தில் அதைவிட அதிகச் சம்பளத்தை எதிர்பார்ப்பேன்."

"உம், எதிர்பார்க்க மாட்டாயா, பின்னே?" மூர் உறுமினுர். ஆயினும் அவருடைய கூரிய நோக்கு குழையலாயிற்று "வேலை வேண்டுமென உளமார நீ விரும்புகிருய் என்பது எனக்குத் தெரிகிறது. தங்களுக்கு இஷ்டப்பட்டபோது வந்து போகும் நகர இளைஞர் சிலரைப்போலன்றி நீ அதிக ஆர்வமுடனேயே வேலையை விரும்புகிருய் என்று கூறுவேன். நீ சேமிக்கும் பழக்கமும் உடையவன், இல்லையா? அதுவேறு உனக்குச் சாதகமானதொரு அம்சம். சரி, உன் விருப்பப்படியே நடக்கட்டும்,

பையா. உன்னை அதற்குமுன் அனுப்பிவிட நாங்கள் தீர்மானிக்காவிடில்; மூன்று மாத காலத்துக்கு ஊதிய மின்றியே நீ வேலை செய்யவேண்டும். அதன் பிறகு வாரம் 3½ டாலர் சம்பளம்.''

''அதற்கும் பிறகு அதைவிட அதிக ஊதியம், அதற்கு நான் அருகதை உடையவனாகும் பட்சத்தில்'' ஃபிராங்க் அவருக்கு நினைவூட்டினான். ''நன்றி. மிஸ்டர் மூர். என்னால் இயன்றவரை உழைக்கிறேன்.''

அடுத்த ஞாயிறன்று காலையில் தங்கள் பண்ணை யிலிருந்து நிரந்தரவிடைபெற்றுப்பிரிந்தான் ஃபிராங்க். உருளைகிழங்கு ஏற்றிய வண்டியில் அவனையும் ஏற் றிக்கொண்டு நகருக்கு அழைத்துவந்தார், ஜான்வுல் வொர்த். தான் தேர்ந்தெடுத்திருந்த சாப்பாட்டு விடுதியில் இரண்டொரு துணிகளே கொண்ட தன் மூட்டையைப் போட்டுவிட்டு மூலைக்கடைக்கு விரைந் தான், ஃபிராங்க்.

அப்போது நண்பகல் நேரம். ஆகவே வியாபாரம் மும்முரமாக நடந்துகொண்டிருந்தது. சாமான் வாங்க வந்த ஒரு பெண்மணியை வண்டி ஏற்றி வழியனுப்பிக்கொண்டிருந்தார் ஆக்ஸ்பரி. அதேசமயம் கடைவாயிலை ஃபிராங்க் அடைந்தான். வண்டிபுறப் பட்டதும் தம் புதிய ஊழியனை ஆக்ஸ்பரி நோக்கினார்.

''அடேடே! அந்தப் பட்டிக்காட்டுப் பையனல் லவா நீ! வேலை செய்ய வந்துவிட்டாய், இல்லையா?''

''ஆம், மிஸ்டர் ஆக்ஸ்பரி. உங்கள் சளித்தொல்லை தீர்ந்துவிட்டது என்றே நம்புகிறேன், ஐயா.''

''அது சரியாகிவிட்டது. ஏன் அப்பா, உங்கள் ஊரில் யாரும் கழுத்துப்பட்டை அணிவது கிடை யாதா?''

ஃபிராங்கின் முகம் வெட்கத்தினால் சிவந்தது. வேறு உடை இல்லாததாலேயே கிராமப்புற ஆடை

களை அவன் அணிந்துகொண் டிருந்தான்.

"கிடையாது, ஐயா!" என்று ஈனஸ்வரத்தில் அவன் பதிலளித்தான்.

"கழுத்துச் சுருக்கும்கூடப் போடுவதில்லையா?" இதோ பார், பையா, இங்கே கழுத்துப்பட்டை, சுருக்கு இல்லாமல் வெறும் ஃப்ளானெல் சட்டையுடன் வாடிக் கையாளரைக் கவனிக்கமுடியாது. இந்தா, இந்தா, எதற்காக இப்படி முகத்தைத் தொங்கப்போட்டுக் கொள்கிறாய்? ஆடவர் 'உடைப் பிரிவுக்குப் போ; உனக்கு வெள்ளைச் சட்டையும் கழுத்துச் சுருக்கும் கொடுக்கும்படி அங்கே இருப்பவர்களிடம் கேள். உனக்கு ஊதியம் கிடைக்கத் தொடங்கும்போது அவற்றின் விலையை அதில் பிடித்துக்கொள்கிறோம். சரி, ஓடி வேலையைப் பார்; என் கூட்டாளியைக் கண்டு கலங்கிவிடாதே. குரைக்கிற நாய் கடிக்காது, தெரியுமல்லவா? அவர் கூச்சல் போடுவாரேயொழிய கருணையுள்ளம் படைத்தவர் என்பதை நீயே கண்டு கொள்வாய்."

நீண்டு வளர்ந்து வேதனையும் தந்த அந்த முதல் நாளில் ஆக்ஸ்பரி ஒருவர் தான் அவனிடம் அன்பான வார்த்தைகள் கூறியவர். இன்ப்ளுவென்ஸா ஜுரத்தினால் பெரும்பாலான சிப்பந்திகள் கடைக்கு வரவில்லை. அவனுக்குச் சட்டையும் சுருக்கும் போட்டுவிட்ட விற்பனையாளன் தன் ஆணவம் கலந்த வெறுப்பை வெளியிடத் தவறவில்லை. ஃபிராங்குக்கு அது தீர்மானமாகத் தெரியாவிடினும்கூடப் பத்தாண்டுகளுக்கு முன் தானும் சார்லியும் சந்தித்த அதே மனிதன்தான் அவன் என்று தோன்றியது, அவனோ இல்லையோ, அதே ஏளனத்தையும் விரோதபாவத்தையுமே அவனிடம் ஃபிராங்க் கண்டான்.

முதல் நாள் ஒருவன் செய்யக்கூடிய அத்தனை பிசகுகளையும் புரிந்தவாறு அன்றையப் பொழுதை

அவன் கழித்தான். பண்டங்கள் எங்கே வைக்கப் பட்டுள்ளன. விலைச்சீட்டை எப்படிப் படிப்பது, அல்லது விற்பனைப் பட்டியலை எப்படி எழுதுவது என்பதொன்றும் தெரியவில்லை அவனுக்கு. ஆடைத் துணிச் சுருளொன்றைப் பிரித்து அளிப்பது சுளுவாகத் தென்பட்டபோதிலும், அதை விரித்தபின் சுருட்டவகை துலங்காமல் விழித்தான்; மூர் வந்து அந்தச் சிக்கலைத் தீர்க்கவேண்டி வந்தது.

விலைச் சீட்டுகள் தான் அனைத்திலும் அவனுக்கு அதிகச் சங்கடம் தந்தன. பார்த்தவுடன் தெரியும் எண்களன்றி, மனப்பாடம் செய்யவேண்டிய ரகசியச் சங்கேத முறையொன்றில் விலைகள் குறிக்கப்பட்டிருந் தன. அக்காலத்தில் இது சகஜமானதொரு பழக்கம். ஏதாவது வாங்க விரும்பும் வாடிக்கையாளர் அந்த விலைச் சீட்டைப் பார்த்து, தனக்குக் கட்டிவருமா வராதா என்று தீர்மானிக்கமுடியாது. விலையைக் கூறுமாறு விற்பனையாளனைக் கேட்டுத்தானுகவேண் டும். அப்புறம், அது தனக்கு அதீதமென அவர் எண்ணுவாரானுல், அவ்வாறல்ல என்பதை எடுத் துரைத்து அவருடைய மனத்தை மாற்றுவது விற் பனையாளனின் கடன். சில சமயங்களில் வாடிக்கை யாளர் விடாப்பிடியாக இருப்பார்; அப்போது விலை குறைக்கப்படுவதும் உண்டு.

அந்த முதல் நாளன்று முழு மோசமாகவிருந் தான் ஃபிராங்க். மறுநாள் பெரும்பாலான சிப்பந்தி கள் வேலைக்குத் திரும்பியதும் விற்பனைப் பொறுப்பி லிருந்து அவன் விடுவிக்கப்பட்டான். அன்று இனிய தொரு ஆச்சரியமும் அவனுக்குக் காத்திருந்தது; மாதர் உள்ளணிப்பிரிவின் பொறுப்பாளியாயிருந்த ஸ்ரீமதி அடீலியா கூன்ஸ், தனக்கு கிரேட் பெண்டில் பழக்கமான பெண்மணி என்பதைக் கண்டான். அவனுடைய ஞாயிற்றுக்கிழமைப் பள்ளியில் படித்த

மூத்த பெண்களில் அவள் ஒருத்தி என்பது அவனுக்கு ஞாபகம் வந்தது. மெதடிஸ்ட் பாதிரியாரொருவரை மணந்தபின் அந்தக் கிராமத்தைவிட்டு அவள் சென்று விட்டாள். இப்போது அவள் விதவையாகி அக்கடையில் ஊழியம் புரிந்துவந்துள்ளாள். அவனைவிட ஐந்து வயதே மூத்தவளாயினும் ஒருபோதும் மறக்கவியலாத அளவு தாயன்பைக் காட்டினாள் அவள்

ஆரம்பத்தில் சில வாரங்கள் கடினம் மிகுந்தவை. ஆகவே அவனுக்குப் பரிவு தேவைப்பட்டது. கடையின் வேலை நேரம் காலை ஏழு மணியிலிருந்து இரவு ஒன்பது மணி வரையில்; இவ்வாறு வாரம் ஆறு நாள். ஃபிராங்கோவெனில் காலை கடை திறப்பதற்கு ஒரு மணி நேரம் முன்னதாகவே வரவேண்டியிருந்தது. தரையைப் பெருக்கினான், தூசியைத் தட்டினான் அவன்; சாம்பலைக் கொண்டுபோய் வெளியில் கொட்டி விட்டுக் கணப்புக்கு விறகு போட்டு மூட்டினான். விளக்குகளுக்குத் திரியைத் திருத்தி எண்ணெய் போட்டான். பெட்டிகளைக் கீழேயிருந்த நிலவறைக் கிடங்குகளுக்குத் தூக்கிக்கொண்டு போய் வைத்தான்; அவற்றைத் திறந்து சாமான்களை வகை பிரித்து அடுக்கினான்.

இந்த வேலைகள் அனைத்தையும் பொறுமையுடனும் சீராகவும் செய்தான்; வாய் திறந்து ஒரு வார்த்தைகூடப் புகார் செய்தது கிடையாது. முதலில் விரோதபாவம் காட்டிய தலைமைச் சிப்பந்தியின் மனம் இதைக் கண்டு மாறிவிட்டது. விற்பனை வேலையைப் பொறுத்தவரையில் புதிய ஆள் பிரயோசனமில்லையாயினும் கட்டிடத்தைச் செவ்வனே வைத்துக்கொள்வதிலும், சாமான்களை ஒழுங்குமுறையாக வைப்பதிலும் அவன் ஆச்சரியப்படும்வகையில் அதிசமர்த்தனாக இருக்கிறான் என்று மூரிடம் அவன் தெரிவித்தான். அந்தக் கடையில் அவன் அளவுக்கு

எவ்ரும் ஒருபோதும் பாடுபட்டு வேலை செய்ததில்லை என்றும் கூறினன்.

இதன் பயனாக மூன்றாவது மாத முடிவில் 3½ டாலர் கொண்ட சம்பள உறை முதன் முதலாக அவனுக்குக் கிடைத்தது. ஓராண்டில் அது நாலு டாலராக உயர்த்தப்பட்டு இறுதியில் ஆறு டாலரும் ஆகியது.

விற்பனையில் திறமை காரணமாக இந்த ஊதிய உயர்வுகள் கிடைத்துவிடவில்லை. அது சம்பந்தப் பட்டவரையில் ஆரம்பத்தில்போலவே அப்போதும் படுமோசமாகவே ஃபிராங்க் இருந்தான். எந்தப் பொருளையும் வாங்குமாறு வாடிக்கைக்காரர்களை அவனால் கட்டாயப் படுத்தக்கூடவில்லை. மரியாதையும் சிரத்தையும் காட்டினன்; பண்டங்களைப் பொறுமையோடு எடுத்துக் காண்பித்தான். ஆனால் எதை வாங்குவது என்பதை முடிவு கட்டும் உரிமை வாடிக்கையாளருக்குத்தான் உண்டு என்றே அவனுக்குத் தோன்றியது. எந்த அளவு செலவிடவேண்டுமெனத் தீர்மானிக்கும் பொறுப்பு வாடிக்கைக்காரருடையதே என்றும் அவன் எண்ணினன். விலை அதிகமான பண்டத்தை அவர் தலையில் கட்டுவது அநீதி என்றே அவனுக்குப் பட்டது.

ஒரு வாடிக்கையாளர் எதையும் வாங்காமல் வெளியேசென்றால் அது விற்பனையாளருக்குத்தான் அபகீர்த்தி என்று அந்நாளைய வர்த்தகர்களைப் போலவே மூரும் நினைத்தார். விற்பதற்காகத்தான் சிப்பந்திகள் தம் கடையில் இருக்கின்றனர் என்பது அவர் கருத்து. ஆகவே ஒவ்வொரு முறையும் அவர்கள் ஏதாவது விற்பனை செய்து தீரவேண்டுமென்று அவர் எதிர்பார்த்தார். உத்தேசித்ததைவிட ஒரு வாடிக்கையாளரை அதிக அளவு வாங்கவும் பணம் கொடுக்கும்படியும் செய்துவிடும் விற்பனையாளன்

கெட்டிக்காரன், அதைத்தான்கடை அவனிடம் எதிர் பார்க்கிறது என்பது அவரது எண்ணம்.

அந்தவகையில் பிரகாசிக்க ஃபிராங்க் வுல்வொர்த் துக்கு விதிக்கப்பட்டிருக்கவில்லை ; ஆனால் அவனை மூருக்குப் பயனுள்ளவனாக்க மற்றும் பல திறமைகள் அவனிடம் பொதிந்து இருந்தன. விற்பனை பண்டங் களைவைத்து ஜன்னல்களை ஜோடிப்பது அவற்றி லொன்று. முதல் வருடம் முடியவிருந்த தருணத்தில் தற்செயலாகஇத்திறமை அவனிடம் காணப்படுவதை அறிந்தனர்.

ஒரு நாளிரவு கடை மூடப்பட்டதும் தெற்குச் சாரளத்தில் இருந்த சாமான்களை அகற்றிவிட்டு அதன் கண்ணாடியை அலம்பும்படி ஃபிராங்கிடம் கட்டளையிட்டனர். "அதன பிறகு அவற்றை நீ திருத்தி வைக்கலாம்" என்று சாதாரணமாகச் சொன் னார் மூர். பின்னர் யாதொரு உத்தரவும் கொடுக்கா மலே போய்விட்டார். உடனே வேலை செய்யப் புகுந் தான் ஃபிராங்க்.

எல்லாப் பண்டங்களும் தன் வசமிருக்கத் தனி யாக இருந்தான் அவன். ஜன்னலைத் துடைத்துத் துப்புரவாக்கியதும் அதனுள் சாமான்களைப் பல்வேறு விதமாக வைத்துப் பார்க்கலானான். ஆடைத் துணி களை ஒன்றன்மேல் ஒன்று அடுக்கி வைப்பதற்குப் பதி லாகச் சில சுருள்களைப் பிரித்து, நாஸுக்கான முறை யில் மடிமடியாக விரித்து வைத்தான்,

சிவப்பு நிறத்தை அவன் விரும்பினானையால் ஆழ்ந்த சிவப்பிலிருந்து வெளிர்ரோஜா வரையிலான பல்வேறு வர்ணப் பட்டுகளை அவன் பொறுக்கியெடுத் தான். இவற்றைப் பின்னணியாகக் கொண்டு, பெண்டிருக்கான கருங்கன்றுத்தோல் ஜோடுகளைப் பெட்டிகளிலிருந்து வெளியிலெடுத்து வைத்தான். அந்தச் சிவப்புத்துணியின் மடிப்புகளில், ஓரத்தில்

வெள்ளைப் பூப்பின்னல் போட்ட கைக்குட்டைகளை இலேசாகக் குத்திப் பரப்பினான்.

குற்றங் குறை ஏதுமிருக்கிறதா என்று பார்க்க வீதிக்குச் சென்றான். ஒரே சீரான வரிசையில் அள வுக்கு அதிகமான ஜோடுகள் இருந்ததாக அவனுக்குப் பட்டது. எனவே, அவற்றில் இரண்டு ஜதை தவிர மற்றவற்றையெல்லாம் அகற்றிவிட்டு, பதிலுக்குச் சில நீண்ட வெள்ளைத் தோல் கையுறைகளை வைத் தான். இந்த ஏற்பாடு முன்னைவிடத் தரமாகத் தோன்றியது. இனி பின்னல் போட்ட சில கழுத்தணி களையும், ஒரு பெரிய வாஸனை எண்ணெய்க் குப்பி யையும், சில ஆடையூசிகளையும், பிரகாசத்துக்காகச் சில அழகிய சீப்புகளையும் வைத்து விட்டால்—

அவ்வேலையில் ஆழ்ந்தவனாய்த் தொடர்ந்து ஜோடித்துக் கொண்டே இருந்தான் அவன். அதில் மூழ்க மூழ்க அவனுடைய ஆனந்தம் அதிகரித்தது. அந்த வேலையைச் செய்வதில்தான் மகிழ்ச்சி இருப்ப தாக அவனுக்குத் தோன்றியது. கணப்பு அணைந்து போய் விட்டதால் குளிர் அவனை விரட்டியெடுத்தது. சாமான்களைச் சாளரத்துக்கு அடிக்கடி கொண்டு போய் அவை பொருந்தாவிடில் திரும்பத் தூக்கி யெடுத்து வந்ததால் அவன் முதுகில் வலியெடுத்து விட்டது. ஆனால் குளிரையோ வலியையோ அவன் உணரவேயில்லை.

கடைசியில் ஒரு வழியாக அவ்வேலையை முடித்த தும் கடையைப் பூட்டிவிட்டு வீட்டுக்குப் புறப்பட் டான். அப்போது நகரக் கடிகாரத்தில் இரண்டு மணி அடித்தது. ஆயினும் இறுதியாகப் பார்ப்பதற் காகச் சற்று நின்றான். மங்கலான தெருவிளக்கைத் தவிர வேறெந்த வெளிச்சமும் இல்லாவிடினும்கூட அந்த ஜன்னலில் பூரணத்துவம் பொலிவதாக அவ னுக்குத் தோன்றியது. தன் தலை சிறந்த சாதனை

யைச் செய்து முடித்த எந்தக் கலைஞனும் அவன் அப்போது அனுபவித்ததைவிட அதிகச் சந்தோஷத்தை அடைந்திருக்க முடியாது.

மறுநாள் காலை வழக்கத்தைவிடச் சற்றுத் தாமதமாகக் கடைக்கு வந்த மூர், தெற்குச் சாளரத்தின் அருகே சில பெண்கள் சிறு கும்பலாக நின்றதைக் கவனித்தார். அவர்களுடைய மகிழ்ச்சிப் பெருக்கைச் செவிமடுத்த வண்ணம் நடையை மெதுப்படுத்தினர். காண்பதற்குச் சுவாரஸ்யமாக இல்லாத வகையில் போர்வைகளும், மேஜை விரிப்புகளும் அடுக்கடுக்காக வைக்கப்பட்டிருந்த வடக்குச் சாளரத்தினருகே கூட்ட மேதும் இல்லாததைக் கண்டார். தெரு முனைக்கு அந்தப்புறத்தில் ஆடவர் ஆடை சாதாரண முறையில் வைக்கப்பட்டிருந்த ஜன்னல்களிலும் கூட்டம் இல்லாததைப் பார்த்தார்.

தம் காரியாலயத்தினுள் சென்றதும் பிராங்க்வுல் வொர்த்தைக் கூப்பிட்டனுப்பினர் அந்த முதலாளி. யாரையும் பாராட்டுவது என்பது மூரின் அகராதியிலேயே கிடையாது ; ஆகவே, எவ்வித விமர்சனத்தையும் வெளியிடாமலே, அன்றிரவு கடை கட்டப்பட்டதும் மற்றச் சாளரங்களையும் துடைத்து, அவற்றிலுள்ள பொருள்களைச் சீராக வைக்கும்படி அவனைப் பணித்தார். “ இனி உன் வேலையில் அதுவும் ஒரு பகுதியாகும் ” என்றார், கண்டிப்பான தொனியில்.

# 5

கடையினுள் காட்சி ஜோடனைகள் செய்வதையும் தன் சிநேகிதியான ஸ்ரீமதி கூனின் துணைகொண்டு சிறுகச் சிறுக ஏற்றுக் கொண்டான். ஃபிராங்க்வுல் வொர்த். அவன் ஜோடித்த காட்சிப் பெட்டிகளும் தட்டடுக்குகளும் மற்றவற்றைவிடக் கவர்ச்சிகரமாக இருந்ததை மூர் கவனித்தார். ஆயினும், அதைப் பற்றி வாய் திறந்து ஒரு வார்த்தை கூட அவர் சொல்லவில்லை. பழங்காலப் போக்கில் ஊறிய ஜவுளி வியாபாரி அவர். பண்டங்களை அதிக அளவில் விற் பவனே சிறந்த கடைச் சிப்பந்தி என்னும் பழங் கருத்தை அவரால் உதறியெறிய இயலவில்லை.

ஆகவே, அவருடைய அபிப்பிராயத்தில் சிறந்த சிப்பந்தியாக முடியவில்லை, ஃபிராங்க் வுல்வொர்த் தினால். ஆனால் ஜோடனைத் திறன் காரணமாக அவன் பயனுள்ளவனாக இருந்தான். மூன்றாண்டு கழித்து அவனுடைய வாரச் சம்பளத்தை ஆறு டாலருக்கு உயர்த்தியதன் மூலம் அந்த உபயோகத் தன்மைக்குப் பிரதிப் பிரயோசனம் அளித்தார்; அதோடு பேசாம லிருந்து விட்டார் அவர்.

அந்த மூன்றாவது ஆண்டில் அந்தக் கடையில் தனக்கு இருந்த பங்கை பெர்ரி ஆர். ஸ்மித் என்பவருக்கு விற்றுவிட்டு ஆக்ஸ்பரி விலகிக் கொண்டார். எனவே கடையின் பெயர் மூர் அண்ட் ஸ்மித் என்று மாறியது. அக்கடையில் புதிதாகக் கொஞ்சம் மூல தனம் போட்டார் ஸ்மித். இதன் பயனாக எல்லாச் சிப்பந்திகளின் சம்பளமும் உயர்த்தப்படும் என்பதாக ஒரு வதந்தி உலாவியது. ஆனால் சில வார காலம் மிகுந்த ஆவலைக் கிளப்பி விட்ட இவ்வதந்தி கடைசி யில் பொய்த்துப் போயிற்று. கடையின் மொத்த

விற்பனைப் பிரிவை விஸ்தரிக்கவே புதிய மூலதனம் செலவாயிற்று. சிப்பந்திகளின் சம்பளங்கள் பழைய அளவிலேயே நீடித்தன.

அந்தச் சமயத்தில் மிச்சிகனில் வேறு வேலை கிடைத்தபடியால் தலைமைச் சிப்பந்தி விலகினார். அவர் ஸ்தானத்துக்கு மற்றொரு சிப்பந்தி உயர்த்தப் பட்டார். தலைமையாளனாகத் தனக்குப் பதவி உயர்வு கிட்டுமென ஃபிராங்க் வுல்வொர்த் எதிர்பார்க்கவில்லை. எனினும் ஏதாவது ஒரு வகையில் உயர்வு பெறத் தனக்குத் தருணம் வந்து விட்டது என்றே எண்ணி னான்.

சாமான் தூக்குவது போன்ற அடிமட்ட வேலைகளையே அவன் இன்னமும் செய்து கொண்டிருந்தான். அதோடு கிடங்கின் பொறுப்பையும் ஏற்றான்; அங்கே பெட்டிகளைத் திறந்து புதிய சாமான்களுக்குச் சீட்டு ஒட்டுவது, தேவைப்படுமளவு அவற்றைச் சீராக வைத்திருப்பது போன்ற வேலைகளைச் செய்து வந் தான். தவிர, வேறு வேலைகள் இல்லாதபோது வாடிக் கையாளர்களையும் அவன் கவனித்துக் கொள்ள வேண்டியிருந்தது,

கணப்பை எரிய விடுவது, கடையைக் கூட்டுவது போன்ற வேலைகளைச் செய்ய ஏன் ஒரு பையனை அவர் கள் அமர்த்தக் கூடாது என்று அவனுக்குத் தோன்றி யது? அப்போது ஜன்னல்களையும் காட்சிப் பெட்டி களையும் அலங்கரிக்க அவனுக்கு அதிக அவகாசம் இருக்குமல்லவா? ஏன், அது போன்ற பெரிய கடை யில் அதுவே முழு நேர வேலையாகக் கூடுமே ! அனைத் தையும் நேர்த்தியாக அமைக்கத் தனக்கு மட்டும் அவர்கள் சுதந்திரம் அளிப்பாரேயாகில் கடைக்கு அது வெகுவாக உதவும் என்பது அவனுக்குத் திண் ணமாகத் தெரிந்தது.

எனவே மூரிடம் அந்த யோசனையை அவன் கூறி

ஞன். அவரோ பொறுமையாகக் கேட்கக் கூட மன மில்லாமல் அதை நிராகரித்து விட்டார். அவரைப் பொறுத்த வரையில்; பண்டங்களை விற்பதுதான் பெரிய விஷயம், பிரதான விஷயம். ஃபிராங்கின் விற் பனைத் திறனே பெருமைப்படக் கூடியதல்ல. ஜன்ன லில் பண்டங்களைக் காட்சிக்கு வைப்பதில் கெட்டிக் காரன் என்பது காரணமாக யாரும் தலைக்கனம் அடை வதை அவர் விரும்பவில்லை. கடைக்கு உதவுவதில் உண்மையிலேயே அவ்வளவு சிரத்தை உண்டென்றால் விற்பனையில் முன்னிலும் முனைந்து தட்டுகளைக் காலி செய்ய முயற்சி செய்வது, தானே என்றார், ஃபிராங்கி னிடம்.

அவருடைய பேச்சினால் ஃபிராங்கின் தன்மானம் தாக்குண்டது. தன் ஜோடனைத் திறனில் மிகுந்த பெருமை கொண்டிருந்தான் அவன். அது எவ்வளவு முக்கியம் என்பதை மூர் ஏன் புரிந்த கொள்ள மாட் டேன் என்கிறார் என்பது அவனுக்கு விளங்கவில்லை. அதையடுத்து அதைப் புரிந்தகொண்ட ஒரே நபரிடம் சென்று தன் புண்பட்ட உணர்ச்சிகளை வெளியிட் டான்.

ஜென்னி கிரேட்டன் என்ற கனேடியக் கன்னி தான் அவள். உறவினள் ஒருத்தியுடன் வசிப்பதற் காகச் சமீபத்தில்தான் வாட்டர் டவுனுக்கு வந்திருந்த வளான அவள், உடை தயாரிப்பதில் வல்லவள். ஏதோ சில துணிகள் வாங்குவதற்காக ஒரு நாள் கடைக்கு வந்திருந்தபோது அவளை ஃபிராங்க் சந்தித்தான். அவ னைப் போலவே அவளும் துணி வகைகளிலும், வர்ண பேதங்களிலும் ஆனந்தம் கண்டாள். மூருக்குத் தெரி யாத ஒரு விஷயம் அவளுக்குத் தெரிந்திருந்தது; ஃபிராங்க் வைப்பது போன்ற வகைகளில் பண்டங் களைக் கவர்ச்சிகரமாக வைப்பதற்குக் கலைஞனின் கண் தேவை என்பதே அவ்விஷயம். வர்ணங்கள்,

வடிவங்களைப் பகுத்துணரும் திறன் அவளிடம் தீர்க்கமாக இருந்தது. ஊசிக் கலையில் அவள் தேர்ந்தவளல்லவா? ஆகவே, தன்னைப் போன்று கலையம்சம் உடையவர்களைச் சந்தித்த மாத்திரத்திலேயே அவள் இனம் கண்டு கொண்டாள்.

கலையைப் பற்றி ஃபிராங்குக்கு ஏதுமே தெரியாதெனலாம். ஆனால் அழகை உணர்ந்து, வந்தித்து வந்தவன் அவன். நீளமாக, மடிப்பு மடிப்பாகத் தொங்கவிடப்படும் ஆழ்ந்த சிவப்புப் பட்டில் ஓர் அழகுண்டு என்பதை அறிந்திருந்தான். ஆனால் அது அசேதன வஸ்துக்களில் கண்ட அழகே. கருணையுடன் பொலிந்த நீலக்கண்களும், மிருதுவான கேசமும் கூடியதாய் மென்மையுடன் மிளிர்ந்த ஜென்னியின் முகத்திலோ உயிரெழிலை அவன் கண்டான். வேறு யாருடனும் தன்னால் பேச இயலாத முறையில் அளவோடு பேச முடிகிறது என்பதையும் அவன் கண்டு பிடித்தான். ஊஹூம். பரிவும் பிரத்தியட்ச நோக்கும் படைத்த தன் தாயுடன் கூட அவ்வாறு அவனால் பேச இயன்றதில்லை. "எனக்கு மட்டும் சொந்தத்தில் ஒரு கடை இருக்குமானால்..." என்னும் தன் பழைய கனவைக் கூறியபோது அவன் தாய் சிரித்தாள். அவனுடைய அந்த வார்த்தைகள் எப்போதும் அவளைச் சிரிக்கவே வைத்தன. ஏளனத்தின் விளைவோ, அன்றி, அன்பின் பயனோ, எதுவாயினும் சரி, அது சிரிப்புத்தான். ஜென்னி கிரேட்டன் அவ்வாறு நகைக்கவில்லை. மாறாக, "ஒரு கடை இருக்குமானால் அல்ல, 'இருக்கும் போது' என்று கூறுங்கள் என்பதாக அவள் திருத்தினாள். தன்னைப் புரிந்து கொண்டு, தன் கனவிலும் நம்பிக்கை வைக்கும் ஒரு நபரைக் கடைசியில் கண்டு பிடித்த அனுபவம் அவனுக்கு ஆனந்த மயமாக இருந்தது.

மூரின் இகழ்ச்சி நிறைந்த சொற்களை ஃபிராங்க்

கூறியபோது அனுதாபத்துடன் ஜென்னி கேட்டுக் கொண்டாள். பின்னர், "இனி நீங்கள் அங்கு நீடிக்கலாகாது" என்ருள் ஆத்திரத்துடன். "உங்கள் திறனை அவர் உணர்ந்து பாராட்டாவிடில் வேறு யாராவது அவ்விதம் செய்தே தீருவர். வேறு எங்காவது வேலைக்கு நீங்கள் ஏன் முயற்சி செய்யலாகாது, ஃபிராங்க் ?"

"அது பற்றித்தான் சிந்தித்து வருகிறேன். புஷ்னெல் கடையில் ஏதோ வேலை காலியாக இருப்பதாகக் கேள்விப்பட்டேன். அங்கு வேண்டுமானுல் என் அதிருஷ்டத்தைச் சோதனை செய்து பார்க்கலாம்."

"புஷ்னெல் கடையா? ஐயோ, அது மிகமோசமானதாயிற்றே! அங்கே எல்லாவிதப் பண்டங்களையும் கலந்த கட்டியாக வைத்திருக்கிருர்கள்; ஆகவே, நாம் எது கேட்டாலும் அவர்களால் தேடியெடுத்துத் தர முடிவதில்லை. அங்கே நான் போவதே கிடையாது. அவர்களுடைய காட்சி ஜன்னல்களோ ஒரே அலங்கோலம். ஒரு நாளும் கழுவப்பட்டவையல்ல அவை; தூசி படிந்த துண்டுகளும் துணுக்குகளும் நிறைந்து கிடைக்கும் ...சரி, சற்றுப் பொறுங்கள்!"—சட்டெனப் பேச்சை வெட்டிச் சிரித்தாள் அவள். " இப்போது புரிகிறது எனக்கு. இந்தக் குழப்ப நிலை காரணமாகத் தான் அந்தக் கடைக்குப் போக நீங்கள் விரும்புகிறீர்கள், இல்லையா ? அது மிகப் பயங்கரமாக இருக்கிறது என்பதால்தானே ?"

"இது மனக்குறளி வித்தைதான், ஜென்னி ! உன்னைத் தவிர வேறு யாராலும் இதை ஊகித்திருக்க முடியாது. புஷ்னெல் கடையிலுள்ள பண்டங்களைச் சீராக்க என் கைகள் பரபரக்கின்றன. அந்தச் சாளரங்களில்தான் நான் என்னென்ன ஜாலங்கள் செய்ய முடியும் ! நான் அங்கு வேலைக்கு முயற்சி செய்வது முட்டாள்தனம் என்று எண்ணுகிருயா ?"

" இல்லே, அதைவிடப் புத்திசாலித்தனமாக நீங்கள் செய்யக் கூடியது வேறென்றும் இருக்க முடியாது என்றே நினைக்கிறேன். மூர் கடையில் முடிந்த மட்டும் முன்னேறி விட்டீர்கள். இதோ பாருங்கள், ·.·.பிராங்க், அவர்களிடம் வீணில் மிதமிஞ்சிய அளவு அடக்கம் காட்டாதீர்கள். இப்போதைவிட அதிகம் பெற நீங்கள் அருகதை உடையவர். ஆகவே, ஆரம்பத்திலேயே அதிகச் சம்பளம் கேளுங்கள்."

அவள் ஊட்டிய தைரியத்தினால் ஆக்கமும் ஊக்கமும் பெற்றவனாய் புஷ்னெலேப் போய்ச் சந்தித்தான் ·.·.பிராங்க். வாரம் பத்து டாலர் சம்பளம் வேண்டுமென்று தைரியமாகக் கேட்டான். " சரி, பத்து டாலரே தருகிறேன். முதல் தேதி முதல் வேலேக்கு வா " என்று அந்தக் கிழவனார் முணுமுணுத்தபோது தன் காதுகளேயே அவனால் நம்ப முடியவில்லே.

ஆனால் மிகுந்த நம்பிக்கை அளிக்க வல்லதாகத் தோன்றிய அந்தப் புதிய வேலே பெரும் ஏமாற்றமாக முடிந்தது. தன்னேக் கொள்ளேயடிக்கவே எல்லோரும் திட்டமிடுகிறார்கள் என்ற திடமான கருத்துக் கொண்டவர் புஷ்னெல்; அந்த சந்தேகக் குணத்துடன் சிடுமூஞ்சி வேறு. தன் கல்லாப் பெட்டியிலேயே எப்போதும் கண்ணும் கருத்துமாக இருப்பார் அவர்; கடைச் சாமான்களிலிருந்து சொந்த உபயோகத்துக்காக ஒரு சிறு துரும்பைக் கூடச் சிப்பந்திகள் எடுத்துக் கொள்ளலாகாது என்று அடிக்கடி எச்சரித்து வந்தார். ஏதாவது திருட்டு நடந்து விடுமோ என்று ஏகத் திகில் அவருக்கு. எனவே ஏற்கெனவேயே கிடங்கு ஆளான ஹாரி மூடி என்னும் பதினேழு வயதுப் பையனே இரவு நேரத்தில் நிலவறையில் படுத்துக் கொள்ளச் சொல்லியிருந்தார். இப்போது ·.·.பிராங்குக்காக மற்றொரு கட்டில் அந்த நிலவறையில் போடப்பட்டது. இரவு நேரத்தில் யார் நுழைந்தாலும் சரி, பார்த்தவுடனேயே

சுட்டுவிட வேண்டும் என்னும் உத்தரவுடன் அவர்க ளிடம் துருப்பிடித்த துப்பாக்கியொன்றும் தரப் பட்டது.

காட்சிஜோடனைகளைத் சிறக்கச்செய்வதற்கான ஃபிராங்கின் யோசனைகள் தயவு தாட்சண்ணிய மின்றி நிராகரிக்கப்பட்டன. பண்டங்களை விற் கவும், கணப்புகளையும் விளக்குகளையும் கவனிக்கவும், திருடர்கள் வராமல் காவல் காக்கவும்தான் அவன் அங்கு இருக்கிருன் என்று பதிலளிக்கப்பட்டது. அவ னிடம் வேறெதுவும் எதிர்பார்க்கப் படவில்லை. கடையை எப்படி நடத்துவது என்பது பற்றித் தனக்கு ஆலோசனை தேவைப்படும்போது கேட்கி றேன் என்ருர் புஷ்னெல்.

“சரியாக உன்னைச் சிக்க வைத்து விட்டார்” என்று உடைத்துச் சொன்ருன் ஹாரி மூடி. “மூர் கடையிலிருந்து உன்னைப் பிரிப்பதற்கான ஆசை வலை தான் அந்தப் பத்து டாலர். உன்னேடு சில வாடிக் கையாளர்களை நீ கொண்டு வருவாய் என்று புஷ்னெல் எதிர்பார்க்கிருர். அப்படி நீ கொண்டு வந்தாலும் சரி, கொண்டு வராவிட்டாலும் சரி, விரைவில் உன் சம்ப ளத்தை வெட்ட ஆரம்பித்து விடுவார். இறுதியில், மூர் கடையில் கிடைத்ததையும்விடக் குறைவாகவே வாங்கப் போகிருய். பார்த்துக் கொண்டே இரு— முதல் வெட்டு இனி எந்த நிமிஷத்திலும் விழக்கூடும்.”

அடுத்த சில வாரங்களுக்குள் அந்த வெட்டு விழுந்து விட்டது. ஊதியத்துக்கேற்ற அளவு பண் டங்களை ஃபிராங்க் விற்கவில்லை என்று புஷ்னெல் கூடிந்து கொண்டார்; எனவே இனி வாரம் எட்டு டாலர்தான் சம்பளம் கொடுக்கப்படும் என்ருர்.

“கோடை காலத்துக்குள் அது ஆறு டாலராகி விடும்” என்று ஹாரி ஜோசியம் கூறிஞன். “இப்படிச்

முறை. இரக்கமற்ற சுத்த மிருகம் அவர் ; என்னைக் கேட்டிருந்தால் முன்னதாகவே எச்சரித்திருப்பேன். எவ்வளவு விரைவில் முடியுமோ இங்கிருந்து வெளி யேறி விடுவதுதான் என் உத்தேசம். உனக்கு அறி வேதும் இருக்குமானால் நீயும் இங்கு தங்கமாட்டாய் ".

வேறு வழியில்லாததாலேயே அந்தக் கடையில் நீடித்து வேலை செய்தான் ஃபிராங்க். அந்தப் பத்து டாலர் சம்பளத்தை நம்பி, தன்னை மணம் செய்து கொள்ள ஜென்னி கிரேட்டனிடம் அவன் சம்மதம் பெற்று அதற்கு ஏற்பாடு செய்திருந்தான். நிச்சய தார்த்தமும் நடந்து விட்டபடியால் மற்றொரு வேலை கிடைக்கும்வரையில் கையிலுள்ள வேலையை உதறி விடும் நிலையில் அவன் இல்லை. குடித்தனம் நடத்தப் போதிய அளவு பணத்தை அவன் சேமித்து வைக்கும் வரையில் காத்திருப்பதாக ஜென்னி உறுதி கூறி யிருந்தாள்; அவள் வெகு காலம் காத்துக் கிடக்க வேண்டும் என்றே தோன்றியது.

இவ்விதம் கவலையும், கடும் வேலையும், ஏமாற்ற மும், குளிரும், ஈரம்மிகுந்த நிலவறையில் உறங்கியது யாவும் சேர்ந்து 1875-ம் வருட மாரிக் காலத் தில் முதல் முறையாக ஃபிராங்கைக் கடும்நோய்க்கு ஆளாக்கின. ஒரு நாள் காலை ஹாரி மூடி விழித் தெழுந்தபோது அவன் கடுஞ் சுரத்தினால் கிறங்கிப் பிதற்றிக் கொண்டிருக்கக் கண்டான்.

தகவல் தெரிந்ததும் வாட்டர்டவுனுக்கு விரைந்து வந்த ஸ்ரீமதி வுல்வொர்த், ஃபிராங்கைத் தங்கள் பண் ணைக்குக் கொண்டு சென்றாள். அங்கே சில வார காலம் நிமோனியாக் காய்ச்சலுக்காளாகி ஆபத்தான நிலையில் அவன் இருந்தான். அதுகாறும் பண்ணை வேலை தன் மகனுக்குக் கடினமானதென நினைத்து வந்த ஸ்ரீமதி வுல்வொர்த்தின் மனது அடியோடு மாறி விட்டது. கடை வேலைதான் அவனுடைய உடல்

நலத்தை உலேத்துவிட்டதென அவள் நினைத்தாள். ஆகவே அவன் குணம் பெற்றதும், கடை வேலையைக் கைவிட்டு நிலத்துக்குத் திரும்ப வேண்டுமெனத் தீர் மானித்தாள்.

அவன் நோயுற்றிருந்தபோது அடிக்கடி வந்து பார்த்துச் சென்ற ஜென்னியும் விவசாயக் குடிமகளாக இருந்தவள்தான். அவனைப் போலவே அவளும் விவ சாய வாழ்க்கையை வெறுத்தாள். ஆயினும் கிராமப் புறத்தின் ஆரோக்கியமான காற்றையும், போஷாக் குச் சக்தி மிகுந்த பண்ணைப் பண்டங்களையும் உட் கொண்டு அவனுடைய உடல் தேறியதைக் கண்ட தும் ஸ்ரீமதி வுல்வொர்த்தின் முடிவுக்கு அவள் இசைந் தாள்.

இருபெண்டிருமாக சுற்றுப்புறத்தில் சுற்றியலேந் தனர். இறுதியில், நான்கு ஏக்கரா பரப்புள்ள கோழிப் பண்ணையொன்று விற்பனைக்கு இருப்பதை அறிந்த னர். கடும் பிரயாசை தேவைப்படும் நிலச் சாகுபடி யுடன் ஒப்பிடும்போது கோழிப் பண்ணை வெறும் குழந்தை விளையாட்டுத்தான். கூட்டு வாழ்க்கையைத் தொடங்கும் இளம் ஜோடிக்கு அதுவே ஏற்றதல் லவா ?

இவ்விதம் ஸ்ரீமதி வுல்வொர்த் எடுத்துரைக்க, ஜென்னியும் அந்த ஏற்பாட்டை ஏற்ருள். தான் நேசித்த இரு பெண்மணிகளையும் எதிர்த்துப் பேசிச் சமாளிக்க முடியாத அளவுக்குச் சக்தியற்றவனுகவும் உற்சாகமிழந்தவனுகவும் ஆக்கியிருந்தது, ஃபிராங் கைப் பீடித்த நோய். தன் கனவுகளைக் கைவிட்டு விட்டுக் கோழிப் பண்ணைக்காரனுவதற்கு அரை மனத் துடன் அவன் சம்மதித்தான்.

அவனும் ஜென்னியும் வுல்வொர்த்துகளின் வீட் டில் 1876, ஜுன் 11-ம் தேதியன்று மணந்து கொண் டனர். அவ்விருவரின் கூட்டுச் சேமிப்பு அந்தச் சிறிய

கோழிப் பண்ணைக்கான முதல் தவணையைக் கொடுக்க உதவியது. ஃபிராங்கின் தந்தை பல கோழிக் குஞ்சுகளைத் தந்தார்.

முழுத் தோல்வி என்று கூற இயலும் காலத்துக்கு அந்தத் திட்டம் நீடிக்கவில்லையாயினும் அதைவெற்றி என்று கூற முடியாது. அத்துடன் ஃபிராங்கு கோழிக் குஞ்சுகளையே கட்டோடு வெறுக்க ஆரம்பித்து விட்டான். அதன் பின் ஒரு போதும் தன் சாப்பாட்டு மேஜையில் கோழிக்கறி தலைகாட்ட அவன் அனுமதித்ததேயில்லை; அந்த அளவுக்கு அவனுக்கு வெறுப்பூட்டி விட்டது.

அந்நிலைக்கு நான்கு மாதம் கழித்து நிவாரணம் கிடைத்தது. மூரினிடமிருந்து வந்த கடிதமொன்றின் மூலம் ஃபிராங்கின் முன்னாள் முதலாளியாகிய அவர் முரடராயினும் நேரிய நெஞ்சம் படைத்தவர். வாடிக்கையாளர்கள் எதிர்பார்க்கத் தொடங்கியிருந்த கவர்ச்சிகரமான காட்சி ஜோடனைகளைத் தம் கடை இழந்துவிட்டதாக அக்கடிதத்தில் மிடுக்குடன் அவர் ஒப்புக் கொண்டார். அழகாக அலங்கரிப்பதில் ஃபிராங்குக்குள்ள தனித் திறமை மற்றச் சிப்பந்திகளிடம் இருப்பதாகத் தோன்றவில்லை என்றும், திரும்பி வர அவனுக்கு விருப்பமிருந்தால் வாரம் பத்து டாலர் சம்பளம் அளிக்கத் தயாரென்றும் தெரிவித்திருந்தார். அதோடு, பழையபடி பண்டங்களைத் தூக்கும் வேலை அவனிடம் எதிர்பார்க்கப்படவில்லை என்றும் கூறியிருந்தார்.

அந்தக் கடிதத்தைப் படித்தபோது ஃபிராங்குக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி இவ்வளவு அவ்வளவு அல்ல. அவன் எப்போதும் அறிந்திருந்ததைத் தானே அதில் அவர் ஒப்புக் கொண்டார்? அதாவது, அவன் வேலை முக்கியமானது என்பதை! இனி அதிக அவகாசம் கிடைக்குமாதலால் முன்பு கைவிட நேர்ந்த சில யோச

ளைகளை முயன்று பார்க்கலாமென அவனுக்குத் தோன்றியது. அடடா, அற்புதமான செய்தியல்லவா அது!—ஜென்னியிடம் அதைக் கூறப் பொறுமை யோடு காத்திருக்க முடியவில்லை அவனால்.

ஆயினும் அவன் காக்கத்தான் வேண்டி வந்தது. ஏனெனில், கோழி முட்டைகளைக் கொண்டு போய்க் கொடுப்பதற்காக அவனுடைய தாயைத் தேடி அவள் சென்றிருந்தாள். அவ்வாறு காத்திருக்க நேர்ந்த அந்த வேளையில், கொழுந்துவிட்டெறிந்த அவனு டைய பரபரப்பு மங்கி மறைந்து விட்டது. கோழிக் குஞ்சுகள்—அவற்றை அவன் மறந்தல்லவா போய் விட்டான்? அந்தக் கோழிப் பண்ணைப் பொறுப்பைத் தாங்கள் ஏற்க முற்படு முன்பு மீண்டும் வேலை தர மூர் முன்வந்திருக்கக் கூடாதா என்று அவன் நொந்தான். இப்போது எப்படி அதை ஏற்பது?

அவ்வமயம் ஜென்னி வந்து சேர்ந்தாள். அவளி டம் அக்கடிதத்தை ஃபிராங்க் கொடுத்தான். “எந்த நற்பயனும் விளைவிக்க முடியாத அளவு காலங்கடந்து இது வந்திருப்பதாகவே நினைக்கிறேன்” என்றான், வருத்தமுடன்.

அதைப் படித்தபோது ஜென்னியின் கண்கள் பளிச்சிட்டன. “காலங் கடந்துவிட்டதா?...இன்னும் காலங்கடந்து விடவில்லை, ஃபிராங்க். மூர் அளிக்க முன்வரும் வேலையை நீங்கள் ஏற்கத்தான் போகிறீர் கள். முட்டை தூக்கும் வேலையிலிருந்து உங்களை விடுவித்துப் பூரண சுதந்தரம் அல்லவோ அளிக்கப் போகிறார்! அது தானே நீங்கள் எப்போதும் விரும்பி வந்திருப்பது? சம்பளம் வேறு பத்து டாலர்! உங்கள் முயற்சியில் நீங்கள் வெற்றி பெற்று விட்டீர்கள். ஃபிராங்க். தாம் எப்போதும் கொண்டு வந்திருப் பதையே அவரையும் கண்டு கொள்ளச் செய்து விட் டீர்கள். கட்டாயம் இந்த வேலையை நீங்கள் ஏற்றே

யாக வேண்டும்.''

'' அப்படியானுல் இந்தக் கோழிக் குஞ்சுகளை என்ன. செய்வது .?'' என்ற கேள்வியை ஃபிராங்க் எழுப்பினுன்.

'' அவற்றைப் பற்றி நீங்கள் கவலைப்படவே தேவையில்லை. இந்தப் பண்ணையை நம்மால் கை கழுவ இயலுமளவு இங்கேயே நான் தங்கி அவற்றைப் பார்த்துக் கொள்கிறேன். நீங்கள் கடை வேலைக்குத் திரும்பிச் செல்லுங்கள், அன்பரே. அங்கு தான் நீங்கள் பொருத்தமானவர். ''

ஆக, அவ்வாறு அது ஏற்பாடாயிற்று. வாட்டர் டவுனில் தன் பழைய உணவு விடுதிக்கு ஃபிராங்க் திரும்பினுன் ; வார இறுதியில் மனைவியைச் சென்று பார்ப்பதை வழக்கமாகக் கொண்டான். சுமார் ஓராண்டு காலம் ஜென்னியே கோழிப் பண்ணையைத் தனியாக நிர்வகித்து வந்தாள். அதன் பின் ஒரு அண்டை வீட்டுக்காரர் அதை வாடகைக்கு எடுத்துக் கொள்ள முன் வந்தார் ; கோழிகளுக்கு ஈடாக ஒரு தையல் இயந்திரத்தைத் தர அவர் இசைந்தார். அந்த இயந்திரத்தின் துணை கொண்டு நகரில் தன்னுல் குடும்பத்துக்குக் கொஞ்சம் கூடுதலான பணம் சம்பாதிக்க முடியும் என்பதை ஜென்னி கண்டாள். அது பற்றித் தன் மாமியாரைக் கலந்து பேசினுள் ; அந்த ஏற்பாட்டை ஒப்புக் கொண்டு கணவனேடு திரும்பச் சேருமாறு ஸ்ரீமதி வுல்வொர்த்தும் பலமாக சிபாரிசு செய்தாள்.

''தானுக இஷ்டப்பட்டு விவசாயத்துக்கு ஃபிராங்க் திரும்ப மாட்டான் என்பது திண்ணம்'' என்ருள் ஸ்ரீமதி வுல்வொர்த். '' இம்முறை அதில் ஈடுபடுமாறு அவனை வற்புறுத்தியதற்காக என்னை நானே நொந்து கொள்கிறேன். அடேயப்பா, அந்தக் கோழிக் குஞ்சுகளைத் தான் அவன் எவ்வளவு வெறுத்தான்! உணக்

கும் அவை பிடிக்கவில்லை என்பது தெளிவாகத் தெரிகிறது, பெண்ணே! ஜென்னி கோழிப் பண்ணை குறித்து நான் கூறியதை நீங்கள் கேட்காமல் போயிருக்கக் கூடாதா என்று இப்போது எனக்குத் தோன்றுகிறது."

"அது நல்லதென நினைத்துத் தானே நீங்கள் கூறினீர்கள், அம்மா" என்று மெல்லக் கூறினுள் ஜென்னி. "அப்போது நானும் அப்படித்தான் எண்ணினேன். எனினும்...கடையிலிருந்து விலகி வாழும் வரை .·.பிராங்க் சந்தோஷமாக இருக்க மாட்டார் என்பது எனக்கு உள்ளூரத் தெரிந்துதான் இருந்தது. அது ஒன்றில் தான் அவருக்கு எப்போதும் நாட்டமெல்லாம்."

" தெரியும், அது தெரியும் எனக்கு!" என்று கூறி ஸ்ரீமதி வுல்வொர்த் பெருமூச்சு விட்டாள். "அவனுடைய பிறவி இயல்பே அதுதான். அவனை மாற்ற முயற்சி செய்வது சரியல்ல. இன்னொரு முறை நாம் அவ்வாறு முயற்சி செய்யக் கூடாது, ஜென்னி. கூடவே கூடாது!"

"கூடாதுதான்!" என்று ஜென்னியும் ஆமோதித்தாள்.

அந்தச் சங்கல்பத்தினின்று அவ்விரு மாதரும் ஒரு காலும் பிறழவில்லை. போராட்டமும் ஏமாற்றமும் மண்டிய காலத்திலும் அதைப் பேணிப் பின்பற்றிப் பின் பெருவெற்றி கண்ட நாளிலும் தொடர்ந்தாள் ஜென்னி. ஸ்ரீமதி வுல்வொர்த்தோ போராட்டத்தைப் பார்க்கவில்லை; பின்னர் கிடைத்த வெற்றியைக் காணவும் அவளுக்குக் கொடுத்து வைக்கவில்லை. வாட்டர் டவுனில் ஒரு குடிலில் .·.பிராங்கும் ஜென்னியும் குடி புகுந்து அப்போது சில மாதங்களே ஆகியிருந்தன. ஸ்ரீமதி வுல்வொர்த் மரணப் படுக்கையில் கிடப்பதாக அவசரச் செய்தி வந்தது. இடையருத உழைப்பினுல்

நலிந்துபோன ஸ்ரீமதி ஃபானி மக்பிரயர் வுல்வொர்த் தனது நாற்பத்தேழாவது வயதில் இறந்தாள். 1878-ம் வருட வஸந்த காலத்தில் தன் முதல் பேரக் குழந்தை யான ஹெலெனு பிறப்பதைப் பார்க்கும் வரைகூட அவள் வாழவில்லை.

ஸ்ரீமதி வுல்வொர்த்தின் மரணத்தினுல் பண்ணை யில் பல மாறுதல்கள் நேர்ந்தன. தாய் இறந்து விட்டதையடுத்து, இனி தான் அங்கு தங்கப் போவதில்லை யெனத் தீர்மானமாகத் தெரிவித்தான், இளைய மகன் சார்லி. அண்ணனைப் போலவே அவனும் விவசா யத்தை மனமார வெறுத்தான். அண்ணனைப் போலவே நகரத்துக்குச் சென்று தன் அதிருஷ்டத் தைப் பரிசீலிக்க விழைந்தான். பண்ணையை விற்பது தரமென அவனுக்குத் தோன்றியது. ஃபிராங்க், ஜென்னியுடன் தந்தை சென்று வசிக்கலாமென அவன் நினைத்தான்.

ஆனுல் ஜான் வுல்வொர்த்தோ அவ்வாறு செய்ய முடியாதென ஆத்திரத்தோடு மறுத்தார். பிள்ளை களுக்குப் பிடிக்காவிடினும் விவசாயத்தை விரும்பினுர் அவர். அதுதான் தம் வீடு, அங்கேயே தங்குவேன் என்ருர், உறுதியாக.

அவரது கூற்றைப் பொறுமையோடு கேட்ட ஃபிராங்க் இறுதியில் ஒரு பரிகாரம் கூறினுன். மூர் கடையில் சார்லிக்கு ஏதாவதொரு வேலை வாங்கித் தர தன்னுல் இயலுமென அவன் எண்ணினுன். தந்தைக் காக வீட்டை நிர்வகிக்க தகுந்ததொரு ஸ்திரீயைத் தேடுவதெனத் தீர்மானித்தான். அவளுக்கும் சார்லி யின் ஸ்தானத்தில் வேலை செய்ய அமர்த்தப்படுபவ னுக்கும் ஊதியம் கொடுக்கத் தங்கள் சம்பாத்தியத் தில் ஒரு பகுதியை ஊருக்கு அனுப்ப வேண்டும் என் பது அவனது உத்தேசம்.

இந்த ஏற்பாடு மிகச் சீராகவே செயல்பட்டது.

வீட்டை நிர்வகிக்க வந்த பெண்மணியையே இறுதியில் ஜான் வுல்வொர்த் மணந்து கொண்டு, அந்தப் பண்ணையிலேயே அசாதாரண வயது வரை வாழ்ந்தார். பிற்காலத்தில் நகரில் இருந்த தன் பிள்ளைகளின் பெருமாளிகைகளுக்கு விஜயம் செய்ய அவர் இசைந்த போதிலும், ஒரு சில நாட்களுக்கு மேல் தங்கமாட்டார். வுல்வொர்த்துகளினுல் நகரில் எப்படி வாழ்க்கை நடத்தவியலும் என்பது இறுதி வரை அவருக்குப் புதிராகவே இருந்தது.

மூர் கடையில் வேலை பெற்ற சார்லி, மிகவும் நல்ல பெயர் எடுத்தான். கலைக் கண்ணோடு காட்சிப் பொருள்களை வைப்பதில் அண்ணனுக்கு இருந்த திறன் அவனிடம் இல்லை. ஆயினும் அண்ணனைவிட விற்பனையில் அவன் வல்லவன். ஆகவே அவ்விருவரையும் மூர் மிகவும் மதித்து வந்தார். வியாபாரம் படுத்ததால் சில சிப்பந்திகளை வீட்டுக்கனுப்ப நேர்ந்த சமயத்திலும் கூட அவர்களை விடாமல் வேலைக்கு வைத்துக் கொள்ளுமளவு அந்த மதிப்பு வளர்ந்தது.

# 6

**1878**-ம் வருடக் கோடை காலத்தில் வியாபாரம் படுமோசமாக இருந்தது. சுபிட்சப் பருவமொன்றைத் தொடர்ந்த பொருளாதார மந்தம், வெகுவாக வர்த்தகம் குறையச் செய்தது. நாடுநெடுகிலும் அவதிக்காளான வியாபாரிகளைப் போலவே வாட்டர்டவுன் வர்த்தகர்களும் தவித்தனர். எனவே, வரவரக் குறைந்த தம் வியாபாரத்தைக் கண்டு கலங்கிய மூர், ஊர் ஊராகச் சுற்றும் ஒரு விற்பனையாளனின் யோசனையொன்றுக்குச் செவி சாய்த்தார்.

வாடிக்கையாளர்களைக் கவர்ந்திழுப்பதற்காகச்

சில நகரங்களில் புதிய திட்டமொன்றைக் கடைக் காரர்கள் பரீட்சித்துப் பார்ப்பதாக அவன் தெரிவித் தான். குறைந்த விலையான ஐந்து சதத்துக்கு பண் டங்களை அளிக்கும் மலிவுப் பிரிவுதான் அப்புதிய ஏற் பாடு. அதனால் அதிக லாபம் கிடைக்காதெனினும் கடைக்கு அதிகமான பேர் வர வழி வகுக்கும் ; அவ் வாறு அவர்கள் உள்ளே வந்து விட்டால், அதிக விலை யுடைய பொருள்களை அவர்கள் வாங்கும்படிச் சிப்பந் திகள் தூண்டமுடியும் என்றான் அவன்.

உயர்தரப் பண்டங்களையே விற்பதாகப் பெருமை கொள்ளும்போக்கு உடையவராதலால் அத்திட்டம் மூரின் மனத்தைக் கவரவில்லை. ஆயினும் ஏதாவது செய்தாக வேண்டியிருந்தது. ஆகவே, கொள்முதல் செய்வதற்காகக் கோடைக் காலத்தில் நியூயார்க்குக் குச் சென்றிருந்தபோது ஐந்து சத விலையுடைய பண் டங்களை நூறு டாலர் மதிப்புக்கு வாங்கினார். அந்தப் பொருள்கள் வாட்டர் டவுனுக்கு வந்து சேர்ந்ததும் அவ்வளவையும் ஃபிராங்க் வுல்வொர்த்தினிடம் ஒப்ப டைத்தார்.

" இவை அனைத்தும் உன் பொறுப்பில் இருக்கும் " என்றார் அவர். " பிரத்யேக மேடையொன்றை இவற் றுக்காக நீ தயார் செய்வது நலமென நினைக்கிறேன். நம் வழக்கமான வாடிக்கையாளர்களுக்கு இவற்றைக் காணவே பிடிக்காது என்பதில் எனக்கு ஐயமில்லை. ஆகவே, கண்ணைப் பறிக்குமளவு நீ காட்சி ஜோடனை செய்யவேண்டாம். மலிவு விலையை விரும்பும் கிரா மாந்தர மக்களையே இவை கவருமென நாம் எதிர் பார்க்கலாம். இத்தகைய மலிவுரக வியாபாரத்தில் நாம் ஈடுபட நேருமென நான் ஒருபோதும் எதிர்பார்த் ததில்லை "—ஒரு பெருமூச்சுடன் அவர் பேச்சை முடித் தார்.

தனக்குத் தானே சிரித்துக் கொண்டான்

ஃபிராங்க். 'மலிவு ரகம்' என்று தாம் அழைத்த இந்த வியாபாரத்தை மூர் அறவே வெறுத்தார். அது தம் கடையில் இருப்பது அவருக்குக் கட்டோடு பிடிக்க வில்லை. ஃபிராங்குக்கோ அத்தகைய போக்கு விவேக மானதாகத் தோன்றவில்லை. கொஞ்சப் பணமே உள்ள ஏராள வாடிக்கையாளர்கள் ஆளுக்குச் சிறிதே செல விடினும் அது மற்ற வாடிக்கையாளர்கள் ஏராள மாகச் செலவழிப்பதற்குச் சமமாகி விடாதா ?

கைவசம் ஐந்து பென்னிகளையே வைத்துக் கொண்டு இதே கடைக்கு வந்தபோது தானும் சார்லி யும் 'மலிவுப் பேர'க்காரர்களாகவே இருந்ததாக அவன் எண்ணினான். "வாடிக்கையாளர் யாராயினும் அவர் வாடிக்கையாளரே" என்று அப்போது தான் கூறியதையும் நினைத்தான். அதே வார்த்தைகளை இப் போது திரும்பவும் சொன்னான். முடிவில், தன்பொறுப் பில்அதை மூர் விட்டுவிட்டபடியால் அந்த ஐந்து சதப் பிரிவை, கடை முழுவதும் எப்படி நடத்தப்பட வேண் டுமெனத் தான் நினைத்தானோ அதே ரீதியில் நடத்துவ தெனத் தீர்மானித்தான்.

வட்டாரச் சந்தை கூடும் வாரத்தில் அந்த மலிவுப் பேரப் பிரிவைத் தொடங்குவதென முடிவாயிற்று அதில் பண்டங்களைப் பார்வையாக வைப்பதற்காக, தொடக்க நாளுக்கு முந்திய இரவு முழுவதும் அவனும் சார்லியும் முனைந்து வேலை செய்தனர்.

நடுவில் இருந்த நடை பாதையில் நீளமான இரு மேஜைகளை அவர்கள் சேர்த்துப் போட்டனர். மேஜை களின் மேலும், பக்கவாட்டிலும் பிரகாசமான சிவப்புக் காலிகோத் துணியைவி ரித்துத் தொங்கவிட்டார்கள். அவ்வாறு மகிழ்ச்சி ஒளி பரப்பிய அவ்விரிப்பின் மீது ஒவ்வொன்றும் நன்கு கண்ணில் படும்படியாக நிறைய இடம்விட்டுப் பண்டங்களைச் சீராக வைத்தான் ஃபிராங்க். பேனா முனைகள், பென்ஸில்கள், சுத்காசி

கள், பித்தான் கொக்கிகள், கழுத்துப்பட்டைப் பித்தான்கள், தகரத் தட்டுகள், குவளைகள், காகிதக் கட்டுகள், சில சிவப்பு நிறத்துவாலைகள் போன்று பல வற்றை அவ்வாறு பரப்பி வைத்தான்.

இத்தகைய பலபட்டரையானதொரு பண்டக்குவியலைக் கவர்ச்சிகரமாக்குவது கடும் வேலையாக இருந்தது. போட்ட எழிலுடைய பட்டுக்களையும், பூப் பின்னல் போட்ட துணிகளையும் பார்வையாக வைத்துதான் ஃபிராங்க்குப் பழக்கமுண்டு. அன்றாட உபயோகத்துக் கான இந்தச் சாதாரண பண்டங்களோ அழகானவையல்ல. ஆயினும் தன்னால் இயன்றவரையிலும் முயற்சி செய்தான்; இறுதியில் அவ்வேலை முடிந்தபோது அந்த ஏற்பாடு அவனுக்கே திருப்தியளித்தது. 'எந்தப் பொருளாயினும் சரி, ஐந்தே சதம் தான்!' என்று அட்டையொன்றில் எழுதி, அதை அங்கே வைத்தான்.

மறுநாள் காலையில் கடை திறக்கப்பட்டபோது அந்த மேஜைக்குப் பின்னால் ஃபிராங்க் நின்றுகொண்டிருந்தான். இரண்டொருமணி நேரத்துக்கு அங்கு அவனுக்கு வேலையேதுமே இருக்கவில்லை. உள்ளே வந்த சில பெண்மணிகள் பிறமேஜைகளுக்குச் சென்று தங்களுக்கு வேண்டியதை வாங்கிக் கொண்டனர்; அவர்களெல்லாம் அந்த 'மலிவு பேர மேஜை'யை ஆவலுடன் நோக்கியதோடு சரி. மூர் முன்கூட்டிச் சொன்னது போலவே, அந்த மேஜையில் ஏதும் வாங்காமலேயேஅவர்கள் வெளியேறி விட்டனர்.

வெளியே, சந்தைக்காக வந்திருந்த விவசாயிகளும், அவர்களுடைய குடும்பத்தினரும் சதுக்கத்தை நிறைத்துக் கொண்டிருந்தனர். மலிவுப் பேரம் நடப்பதை ஜன்னலில் ஒரு அட்டையை வைப்பதன் மூலம் அறிவிக்க மூர் மட்டும் தன்னை அனுமதித்திருக்கக் கூடாதா என்று ஃபிராங்க் ஏங்கினான். உள்ளே அப்

படிப்பட்ட மேஜை உள்ளதை விவசாயிகள் எப்படி ஊகித்தறிய முடியும் என்பது அவனுக்குப் புரிய வில்லை.

ஆனால் அவர்கள் நண்பகல் நேரத்துக்குள் அதைக் கண்டு பிடிக்கத்தான் செய்தனர். காலிகோத் துணி யாலான உடை உடுத்திய மாதொருத்தி கடையினுள் தற்செயலாகப் புகுந்து, ஒரு தகரத் தட்டின் விலையை விசாரித்தாள்.

" ஐந்து சதம்தான், அம்மா " என்று மரியாதை யுடன் ஃபிராங்க் பதிலளித்தான். " இந்த மேஜையி லுள்ள மற்றப் பண்டங்களைப் போலவே தான் இதன் விலையும். தலா ஐந்து சதம்தான் எல்லாவற்றுக்கும் விலை. நன்றாகப் பார்த்து, எது வேண்டுமோ அதைப் பொறுக்கிக் கொள்ளுங்கள், அம்மணி. எதை எடுத்தா லும் ஐந்து சதம்தான் விலை."

அவளை வாங்க வற்புறுத்தும் முறையில் ஆசை காட்டுவதாக இருந்தது, அவனுடைய பேச்சு. தான் முதலாவது ஐந்து சத விற்பனையை நடத்துவதற்கு அவனுக்கு இருந்த துடிப்பின் விளைவே அது. ஆயி னும் கடையை எவ்விதம் நடத்த வேண்டுமென்று நினைத்தானோ அவ்வாறே அப்பிரிவை நடத்தவும் அவன் உறுதி பூண்டிருந்தான். தனக்கு இஷ்டப் பட்டதை வாங்கிக்கொள்ள வாடிக்கையாளருக்குச் சுதந்தரம் வழங்குவதே, கடை நடத்தும் முறை பற்றிய அவனுடைய கருத்து !

ஆகவே, மேற்கொண்டு ஏதும் பேசாமல் மேஜைக் குப் பின்னால் அவன் நின்றான். அது முழுவதையும் அந்த மாது சுற்றிப் பார்த்தாள் ; அங்கொன்றும் இங் கொன்றுமாகப் பண்டங்களை எடுத்துப் பார்த்து விட்டுத் திரும்பவும் வைத்தாள் ; அனைத்தையும் ஆர அமர ஆராய அவசியமான அவகாசத்தை எடுத்துக் கொண்டாள், கடைசியில் ஒரு நைந்த பணப்பையை

வெளியிலெடுத்து, அதிலிருந்த காசுகளை எண்ணிப் பார்த்தாள். பிறகு ஃபிராங்கினிடம் திரும்பி வந்தாள்.

" அந்த தகரத் தட்டை எடுத்துக் கொள்கிறேன், ஐயா. இதோ இந்தப் பென்ஸிலும் காகிதக் கட்டும் என் பட்டிக்கு வேண்டும். இவற்றிலும் இரண்டு கொடுங்கள்." உழைத்துக் காய்த்திருந்த அவளுடைய கரங்கள் அந்தச் சிவப்புத் துவாலைகளைப் பிரியமாகத் தடவிக் கொடுத்தன.

அவளிடமிருந்து பணத்தைப் பெற்றுக்கொண்டு, அந்தப் பண்டங்களைக் கட்டிக் கொடுத்தான் ஃபிராங்க். ஆனால் முற்றிலும் மூடி மறைக்கும் விதத்தில் சுற்றிக் கொடுத்துவிடவில்லை. பளபளத்த தகரத் தட்டும், சிவப்புத் துணியும் சதுக்கத்துக்கு அவள் திரும்பும்போது சற்றே வெளியில் தெரியும் வகையில் இருக்க வேண்டுமென அவன் நினைத்தான்.

ஆனால் அதற்கு அவ்வளவு அவசியமே இருக்கவில்லை. அவள் வெளியே சென்றதைத் தொடர்ந்து நடந்தது அனைத்தும் திறந்த கதவுவழியே அவனுக்கு நன்றாகத் தெரிந்தது. தன் சிநேகிதிகள் சிலரைச் சந்தித்ததும் அந்தச் சாமான்களை மூடியிருந்த காகிதத்தை அம்மாது பிரிக்கலானாள்.

" ஐந்து சதம்தான்—ஐந்தே சதம்தான்!" பரபரப்பு நிறைந்திருந்த அவள் குரல் அவன் காதில் விழுந்தது. " இந்த மாதிரிப் பண்டங்களை ஒரு மேஜை நிறைய உள்ளே வைத்திருக்கிறார்கள். நம்பினால் நம்புங்கள். நம்பாவிட்டால் போங்கள்—எல்லாவற்றின் விலையும் ஐந்து சதம்தான்!"

காட்டுத் தீ போல விரைவில் பரவியது அச்செய்தி. அதற்கு முன் ஒரு நாளும் மூர் அண்ட் ஸ்மித் கண்டிராத கூட்டம் நடுப்பகலுக்குள் மண்டி விட்டது. மலிவுப் பேர மேஜை தவிர மற்றது எதிலும் எவரும் சிரத்தை காட்டாதது கண்டு மூருக்கு ஏமாற்றம்தான்.

எனினும், கடை மூடும் சமயத்திற்குள் அந்த மேஜை முழுவதும் காலியாகிவிட்டது. புதிதாகப் பண்டங்களை அனுப்பும்படி தந்தி கொடுக்க ஃபிராங்க் செல்ல நேர்ந்தது. மறுநாள் காலையில் அந்தப் பண்டங்களைப் பெற்றுக் கொள்ள ரயில் நிலையத்துக்கும் செல்லும்படியாயிற்று. அப்பொருள்களை மேஜை மீது அவன் பரப்பியதும் முதல் நாளையும்விட அதிகக் கூட்டம் கூடிவிட்டது.

அந்தச் சந்தை வாரத்தில் அதிகப் பரபரப்பு விளைவித்தது, மூர் அண்ட் ஸ்மித் கடையின் அந்த 'ஐந்து சதப் பிரிவு' தான். முதல் நாளுக்குப் பின் கிராமாந்தர மக்கள் மட்டுமின்றி மற்றவர்களும் வாங்கத் தொடங்கி விட்டார்கள். அங்கு ஏதாவது வாங்கச் வேண்டுமென்று விவசாயிப் பெண்டிரிடையே முண்டியடித்துக் கொண்டு முன் வந்தனர், வாட்டர்டவுன் சீமாட்டிகள் சிலர். இந்த விளைவை ஒளிமறைவற்ற வெறுப்புடனேயே மூர் நோக்கினார்: மலிவான பண்டங்களால் கவர்ந்திழுக்கப்பட்ட புதிய வாடிக்கையாளர்கள் வேறெதையும் வாங்க முற்படவில்லை. அவருடைய வழக்கமான வியாபாரத்துக்குக் குந்தகமாக இருந்தது, அந்த மலிவுப் பிரிவு. இன்னும் வலிவுடனும் கூரிய முனையுடனும் இருப்பினும்கூட இருபத்தைந்து சத விலையுடைய குத்தூசிகளை நீதிபதியின் மனைவிக்கேகூட விற்பது எளிதாக இருக்கவில்லை. அதே மாதிரி ஊசிகள் ஐந்து சத விலைக்குக் கிடைப்பதாகக் கூறும் அட்டைகளைப் பார்த்தபின் அவற்றை ஏன் அவள் வாங்கப் போகிறாள் !

எனினும் வார இறுதியில் விற்பனைக் கணக்கைக் கூட்டிப் பார்த்தபோது மலிவுப்பிரிவினால் கணிசமான லாபம் கிட்டியுள்ளது என்பதை மூர் ஒப்புக் கொள்ளும்படியே இருந்தது. ஆனால் கடையில் நிரந்தரமானதோர் அம்சமாக அதை நீடிக்கலாமென அவன்

வொர்த் வற்புறுத்தியபோது அவர் மறுத்துவிட்டார்

"எனக்கு அது பிடிக்கவில்லை" என்று அவர் பொருமினர். "அதையொட்டிய எதுவுமே பிடித்த மாயில்லை. கடையின் உயர்தரத்தன்மையை அது கெடுத்து விடுகிறது. அதனல் லாபம் கிடைக்கும் என்பதை நான் மறுக்கவில்லை. ஆயினும் என்னுடைய கடைக்கு இதுபொருத்தமானதாக இல்லை."

"நீங்கள் கூறுவது சரியாக இருக்கலாம், ஐயா" என்று ஃபிராங்க் ஒப்புக் கொண்டான். "ஆனல் நான் என்ன நினைக்கிறேன், தெரியுமா ? நான் என்ன எண்ணுகிறேன் என்ருல்—ஹூம், இது பைத்தியக்கார யோசனை என்றே கருதுகிறேன்—ஐந்து சதமே விலையுடைய பண்டங்கள் மட்டிலும் கொண்ட கடையொன்றைத் தொடங்கினல் என்ன என்பதே என் யோசனை. அந்தக் கடை பூராவிலும் ஐந்து சதத்துக்குமேல் எப்பொருளுக்கும் விலை இருக்கக் கூடாது. சொந்தமாகக் கடை துவங்க என்னிடம் மட்டும் பணம் இருக்குமானல், அப்படிப்பட்ட கடையைத்தான் ஆரம்பிப்பேன்."

"ஐந்து சத விலைக் கடையா ?"—சாமர்த்தியம் தெரிந்த அந்த வியாபாரியின் கண்கள் சுருங்கின. தமக்கு முன் இருந்த கணக்கு விவரங்களை, ஒரேயொரு மலிவுப் பண்ட மேஜை மாத்திரமே இருந்த பிரிவின் லாபக்கணக்கை அவர் நோக்கினர்.

"அது புதிய யோசனைதான், ஃபிராங்க்" என்ருர், மெதுவாக. "நீ கூறுவது போல அது பைத்தியக்காரத்தனமாகத்தான் தொனிக்கிறது. ஆயினும் அது அப்படிப்பட்டதுதான என்பதை என்னல் திட்டமாகக் கூறமுடியவில்லை. அது சரி, நீ சொந்தத்தில் பணமேதும் வைத்திருக்கிருயா, என்ன ?"

"இல்லை. மிஸ்டர் மூர். அதனல்தான் அது பற்றி சிந்தித்துப் பயனில்லை. ஆயினும் அது வெற்றிதரும்

என்பதே என் கருத்து. நிச்சயம் வெற்றி தரும் என்பது எனக்குத் தெரியும்.''

'' பணம் இருந்தால் எங்கே தொடங்குவாய்? இந்த வாட்டர் டவுனிலா ?''

'' ஊஹூம், அப்படி நான் நினைக்கவில்லை. தொழிற்சாலைகள் போன்றவை உள்ள பெரிய நகரமாகத்தான் தேர்ந்தெடுத்துத் துவக்க வேண்டுமென எனக்குத் தோன்றுகிறது. உழைப்பாளி மக்கள் மலிவாகத்தான் வாங்கியாக வேண்டும். மலிவுக் கடையாகவே நான் வைப்பது இருக்கும். மலிவுப் பண்டங்களை நாடுவோரை முடிந்தவரையில் ஈர்ப்பதே என் விருப்பம்.''

'' நீ சொல்வது சரி தான் '' என்று கூறிய மூர், ஒரு காகிதத்தை இழுத்து வைத்துக் கொண்டு கணக்குப்போட ஆரம்பித்தார். '' கடையைத் தொடங்க உனக்குக் குறைந்த பட்சம் முன்னூறு டாலர்களாவது தேவையாக இருக்கும். உன் பணக்கார மாமனை மக்பிரயர் எப்படி ? அந்த அளவு பணத்தை அவர் உனக்குக் கடன் கொடுப்பாரா ?''

ஃபிராங்க் தலையை ஆட்டினான். ''அவர் கொடுக்க மாட்டாரென உறுதியாகக் கூறுவேன். ஆயினும் அவரை நான் கேட்டுப் பார்ப்பதால் பாதகமில்லை. என் யோசனையில் உருப்படியாக ஏதேனும் உண்டு என்று நீங்கள் நினைக்கிறீர்களா, மிஸ்டர் மூர் ? நானும் என் மனைவியும் இது பற்றிக் கலந்து பேசியிருக்கிறோம். அது பயனுள்ள யோசனையேயென அவள் என்னை நினைக்கத் தூண்டுகிறாள். ஆனால் என்னை ஊக்கி உற்சாகப்படுத்துவதே எப்போதும் அவளுடைய பழக்கம்—உங்களுக்குத்தான் மனைவிமாரின் போக்கு தெரியுமே ! ஆனால் நீங்கள் முற்றிலும் மாறுனவர். ஏனெனில் நீங்கள் ஒரு வியாபாரி. ஆகவே

உண்மையில் என்ன நினைக்கிறீர்கள் என்பதை நீங்கள் கூறவேண்டுமென விரும்புகிறேன்.''

“ உண்மையாகச் சொல்கிறேன், ஃபிராங்க், என்னுல் கூற இயலவில்லை. உயர்ந்த ரகப் பண்டங்கள் விற்பனையிலேயே என் அனுபவமெல்லாம். விலையைச் சற்றும் பொருட்படுத்தாத மக்களுக்கு உயர்ரகப் பொருள்களை விற்றே எனக்குப் பழக்கம். ஆனுல் இக் காலத்தில்தான் அத்தகைய மக்கள் அதிகம் பேர் இல்லையென்று தோன்றுகிறதே !'' வருத்தமுடன் அவர் தலையாட்டினுர். “குறைந்த விலையில் குறியாக இருப்போருக்கான மலிவுப் பண்டக்கடை—பணக் கஷ்டம் மிகுந்த இக்காலத்தில் இதுவே தேவைப்படுவது போலிருக்கிறது. நீ உத்தேசிக்கும் ஐந்து சத விலைக் கடை பெருவெற்றியாகக் கூடும், ஃபிராங்க் அது அப்படி ஆகாமற் போனுலும் போகலாம். எப்படி அதை நீ நோக்கிய போதிலும் சரியே, அது ஒருசூதாட்டம் போன்றதுதான். ஆகவே அதன் வெற்றி—தோல்வி குறித்து ஜோஸ்யம் கூற நான் விரும்பமாட்டேன். ''

அந்தப் பேச்சு அதோடு முடிந்தது என்பதைக் குறிக்கும் முகமாக மூர் எழுந்து நின்ருர். ஆனுல் படிக்கட்டுகளை நோக்கி ஃபிராங்க் போகத் தொடங்கிய போது விட்டேற்றியான முறையில் கூறினுர்: “எதற்கும் உன்னுடைய மாமனுடன் அது பற்றி நீ பேசிப் பார்க்கலாம், ஃபிராங்க். அதனுல் பாதகமேதும் விளையுமெனநான் நினைக்கவில்லை.''

அன்று மகிழ்ச்சிக்கடலில் மிதந்தவனுய் வீடு சென்ருன், ஃபிராங்க். வண்டிகளிலன்றி வேறு வகையில் வந்த வாடிக்கையாளர்களிடம் மூருக்கு ஒரு போதும் சிரத்தை ஏற்பட்டது கிடையாது. ஆயினும் வியாபாரத்தில் வெகு கெட்டிக்காரர். வண்டியற்றவர்களும் எங்காவது பண்டங்களை வாங்கித்தான் தீர வேண்டும்

என்பதை அறிந்திருந்தார். அவர் மனத்தை அந்த ஐந்து சத விற்பனைக்கடை யோசனை கவர்ந்து விட்டது—ஃபிராங்குக்கு வேண்டியிருந்த ஊக்கமனைத்தும் அதுவே.

காலங் கடத்தாமல் ஆல்பன் மாமனை அணுகிக் கடன் கோரினான். அவன் எதிர்பார்த்தது போலவே எவ்விதக் கடையிலும் பணம் போட அந்த விவசாயி கண்டிப்பாக மறுத்து விட்டார். அதிலும் குறிப்பாக யாரும் கேள்விப்பட்டிராத புதிய விதக் கடையில் முதலிட அவருக்கு மனமேயில்லை. நிலமெதையும் வாங்க ஃபிராங்க் விரும்பியிருந்தால் அது முற்றிலும் வேறு விஷயமாக அவருக்குப் பட்டிருக்கும். ஆனால் படுமுட்டாள்தனமான முயற்சியென தமக்குத் தோன்றிய அந்த விசித்திரக் கடையில் சுளை சுளையாக முன்னூறு டாலர்களை வீணாக்கத் தமக்கு விருப்பமில்லை என்று கூறி விட்டார் அவர்,

அதற்கு ஒரு வாரம் கழித்துத் தன் முதலாளியின் பேட்டியை மீண்டும் கோரினான் ஃபிராங்க். மாமனிடம் செய்த முயற்சி பலிக்காமற் போனதைத் தெரிவித்து விட்டு, தனக்குக் கடனாகப் பண்டங்களைத் தருமாறு முறையே தைரியமாகக் கேட்டான்.

"பண்டங்களைக் கொள்முதல் செய்யும் விஷயம் தான் எனக்குக் கவலையளிக்கிறது. உங்களுடைய மொத்த விற்பனைப் பிரிவு நான் தரும் கைச்சாற்றின் பேரில் பண்டங்களைக் கொடுக்குமானால் என்னால் கடையைத் தொடங்கிவிட முடியும். மேஜை முதலானவற்றுக்கும், அதிகமாக இல்லாமல் இருக்குமானால் வாடகைக்கும் கூடப் போதுமான அளவு பணத்தை நான் சேமித்து வைத்திருக்கிறேன். கடையை நான் கட்டுபடியாகச் செய்யுமளவு அவளும் குழந்தையும் காலந் தள்ள ஜென்னியின் உடைத் தயாரிப்புத்திறன் உதவி புரியும். ஆனால் பண்டங்களை வாங்குவதற்குத்

தேவையான முந்நூறு டாலர்களை மட்டும் என்னால் ஓரிடத்திலும் பெறவியலாது. அது விஷயத்தில் மாத்திரம் நீங்கள் கைகொடுப்பீர்களானால், மிஸ்டர் மூர்—''

வழக்கத்துக்கு மாறான புன்னகையொன்று மூரின் வரட்டு முகத்தில் மலர்ந்து மறைந்தது.

" அதைத்தான் எப்போதும் நான் சிந்தித்து வந்திருக்கிறேன் '' என்று கரகரத்த குரலில் அவர் கூறினார். "ஆயினும் முதலில் மக்பிரயரிடம் நீ முயன்று பார்ப்பதே தரமென நினைத்தேன். நல்லது, இளைஞனே. ஏதாவதொரு இடத்தைப் பிடித்து, கடைக்கான ஏற்பாடுகளைச் செய். அதைத் திறக்க நீ தயாரானதும் முன்னூறு டாலர் பெறுமான பண்டங்களை நாங்கள் உன்னை நம்பிக் கொடுப்போம்.''

# 7

அப்போது ஃபிராங்க் வுல்வொர்த்துக்கு இருபத்தேழு வயது; கலியாணமாகி, ஒரு குழந்தையும் இருந்தது. எட்டாவது வகுப்புடனேயே அவருடைய படிப்பு முடிந்து விட்டது. தாம் பிறந்த வட்டாரத்துக்கு வெளியே ஒரு நாளும் அவர் சென்றதில்லை. வாரம் பத்து டாலர் தான் அதுகாறும் அவர் உயர்ந்தபட்சமாகப் பெற்றிருந்த ஊதியம். ஜவுளிக் கடைச் சிப்பந்தியாக ஐந்து வருடம் அனுபவம் அடைந்திருந்தார். கையில் 25 டாலர் ரொக்கத்துடனும், மூளையில் புதியதொரு யோசனையுடனும் சொந்தக் கடை நடத்துவதென்னும் தம் பிள்ளைப் பிராயக் கனவை நிறைவேற்றப் புகுந்தார் அவர்.

அதற்காக அவர் தேர்ந்தெடுத்த இடம் நியூயார்க் ராஜ்யத்தைச் சேர்ந்த யூடிகா ஆகும். வாட்டர்டவுனைப் போல் ஐந்து மடங்கு பெரிதாக இருந்த தொழில்

நகரம் அது. பின்னல் துணியாலான உள்ளங்கிகளும் பருத்தி ஜவுளிகளும் அங்கு தயாராகி வந்தன. அவற்றை நெய்த ஆலைகளில் ஊதியவிகிதம் குறைவு. ஆகவே, கொஞ்சப் பணத்தைக் கொண்டு நிறையப் பொருள்களை வாங்க வேண்டிய நிர்ப்பந்தம் அந்த நகரவாசிகளுக்கு இருந்தது. தம்முடைய ஐந்து சத விலைக் கடைக்கு அதுவே சிறந்த இடமென ஃபிராங்க் எண்ணியதில் வியப்பென்ன ?

1879 ஜனவரி இறுதியில் அந்நகருக்கு அவர் போய்ச் சேர்ந்தார். தம்முடைய ஜமுக்காளப் பையை ரயில் நிலையத்திலேயே வைத்துவிட்டு, தமக்கு வாடகை கட்டி வரக் கூடிய காலிக் கட்டிடத்தைத் தேடப் புகுந்தார்.

அந்தத் தேடுபடலம் அவருடைய உற்சாகத்தை வளரச் செய்வதாக இருந்தது, பஜார்களில் இருந்த கடைகளுக்கு அவரால் அசாத்யமான அளவு உயர் வாடகைகள் கேட்கப்பட்டன. பனியிலும் சேற்றிலும் நாள் முழுவதும் அலைந்து திரிந்தார் ; காலிக்கட்டிடங்களை ஒவ்வொன்ருகப் பார்த்து, வாடகையை விசாரித்தார் ; அவற்றின் சொந்தக்காரர்கள் கூறிய தொகையைக் கேட்டதும் மனம் சோர்ந்து மேற்கொண்டு நடந்தார். நல்ல இடத்தில் கடை அமைவது முக்கியமென அவருக்குப் பட்டது. ஆனால் அத்தகைய இடமின்றியேதான் தொடக்கம் செய்ய வேண்டும் என்பது அவருக்கு விரைவில் விளங்கி விட்டது.

கடைசியில், முன்பு சக்கிலியர் கடையாகவிருந்த காலி அறையொன்றை அவர் கண்டு பிடித்தார். மிகவும் சிறியதாக அது இருந்தது ; பதின்மூன்று அடி அகலமும், இருபது அடி நீளமுமே உடையதாக இருந்தது. அசிங்கம் பிடித்த ஒதுப்புறமான தெருவொன்றில் தான் அமைந்திருந்தது அந்த இடம்;அக்கம் பக்கத்திலும்கடைகள் இல்லை. ஆயினும் நகரிலேயே நடமாட்

டம் மிகுந்த பகுதியான ஜெனெஸீக்கு அருகில் இருந்தது அது.

அவர் நாடியது அதையல்ல; இருப்பினும் அதைக் கொண்டே சமாளிக்கலாமென நினைத்தார். வாடகை நியாயமானதாகவே தோன்றியது; முப்பத்தைந்து டாலர்தான். அனைத்துக்கும் மேலாக, கடை தொடங்கும்வரை முதல் மாத வாடகைக்குக் காத்திருக்கக் கட்டிடச் சொந்தக்காரர் சம்மதித்தார்.

அந்த நல்ல செய்தியுடன் வாட்டர்டவுனுக்கு ஃபிராங்க் விரைந்தார். கடைக்கு இடம் கிடைத்து விட்டது அவருக்கு. இனி அவருக்குத் தேவையான பண்டங்களைத் தர மூர் உத்தரவிடவேண்டியதுதான் பாக்கி.

அந்தப் பொருள்களைப் பொறுக்குவதில் அவ்விருவரும் மிகுந்த அவகாசம் செலவழித்தார்கள். ஐந்து சத விலையுடைய பண்டங்களை வாங்க வருவோரில் பெருவாரியினர் பெண்டிரே என்பதை ஃபிராங்க் கவனித்திருந்தார். எனவே, முடிந்த மட்டிலும் மாதர் மனத்தைக் கவர அவர் திட்டமிட்டார். கலயங்கள், தட்டுகள், மாவுச் சல்லடைகள், அடுப்பு மூடிகளைத் தூக்குவதற்கான துரட்டிகள், உணவு வகைகளை வெட்டும் கத்திகள் முதலியவற்றுக்கே அவர் முதலிடம் தந்தார். அவற்றோடு, அதிகமாக விற்பனையாகிய சிவப்புத் துவாலைகளையும் பொறுக்கினார். அப்புறம், பாலருக்காக ஏதாவது பொருள்கள் இருப்பது அவசியமாயிற்றே!—காகிதக் கத்தைகள், பென்ஸில்கள், மசிக்கூடுகள் முதலியன அந்த ரகத்தில் சேர்ந்தன.

விளையாட்டுச் சாமான்களை அவர் சேர்க்கவில்லை. முற்றிலும் அன்றாட அவசியப் பண்டங்களே முதல் ஜாபிதாவில் இடம் பெற்றன. விலை மட்டும் மலிவாக இருக்குமானால் ஏழைகளும்கூடச் சிறிய ஆடம்பரப்

பொருள்களை வாங்குவர் என்பது ஃபிராங்க்குக்கு இப்போதும் தெரிந்திருக்கவில்லை. அதைப் பின்னர் தான் கண்டுபிடித்து மிகுந்த பயன் அடைந்தார்.

கடை லாபம் தரத் தொடங்கும்வரை தம் குடும்பத்தை யூடிகாவுக்குக் கொண்டு செல்வது பற்றி அவரால் நினைக்கக் கூடவில்லை. தன்னையும் குழந்தையையும் சம்ரட்சிக்கப் போதிய வருவாயை ஆடைத் தயாரிப்பு மூலம் ஜென்னி ஈட்டி வந்தாள். ஆகவே அவளை வாட்டர் டவுன் குடிலிலேயே விட்டுவிட்டு யூடிகாவுக்கு ஃபிராங்க் திரும்பினார். அங்கே குறைந்த கட்டணமுடைய உணவு விடுதியொன்றில் குடிபுகுந்தார். பிறகு அமர்க்களமாகக் கடையைத் திறக்க ஆயத்தம் செய்யலானார்.

முதலில் அதைப் பூராவாகக் கழுவிச் சுத்தம் செய்தார் ; அழுக்கேறி மங்கிக் கிடந்த சுவர்களைக் காரமான ஸோப்பையும், சலவைக் காரத்தையும் போட்டு நன்றாகத் தேய்த்துத் துப்புரவாக்கினார். புதிதாக வெள்ளையடிக்கப்பட்டதும் அந்த அறை பெரிதாகவும், பிரகாசமுடையதாகவும் பொலிந்தது. பைன் மரப் பலகைகளை வாங்கி, உள்ளூர்த் தச்சனுக்குத் தாமே உதவிசெய்து, புதிதாக மேஜைகள் செய்தார். அவற்றை மூடுவதற்காக ஐந்து கஜம் ‘ கேம்பிரிக் ’ துணியை வாங்கியதுதான் அவர் புரிந்த ஒரே ஆடம்பரச் செலவு. சிவப்புதான் அவரது அதிருஷ்ட நிறம் ; ஆகவே, அது தேடித்தரக் கூடிய அதிருஷ்டம் அனைத்தும் தம் புதிய முயற்சியில் தேவையெனக் கருதினார்.

அச்சிட்ட துண்டுப் பிரசுரங்களுக்கு அச்சமூட்டுமளவு செலவாகியது. ஆயினும் அதைப் பொருட்படுத்தாமல், புதிய கடை பற்றி ஊர்மக்களுக்குத் தக்கவாறு தெரியப்படுத்த திடவுறுதி பூண்டார். அந்தப் பிரசுரங்களைக் கதவிடுக்குகளின் வழியாக ஒவ்வொரு

வீட்டினுள்ளும் தள்ள ஒரு சின்னப் பையனை அமர்த்திக் கொண்டார். கடை முகப்பை அடைத்துக் கொண்ட பெரியதொரு பெயர்ப் பலகையை மூன்று டாலருக்கு ஒரு ஓவியர் எழுதித் தந்தார். ' மகத்தான ஐந்து சதப் பண்டக் கடை ' என்பதாக ஓரொரு அடி உயரமிருந்த எழுத்துக்களில் அந்தப் பலகை பிரகடனம் செய்தது. அத்தகைய பலகை மக்கள் கண்ணில் படாமல் இருந்துவிட முடியுமா.?

பிப்ரவரிமாத பிற்பகுதியில் ஒரு சனிக்கிழமையிரவு கடை திறக்கப்பட்டது. ஆலைச் சிப்பந்திகள் அன்று தான் வாரச் சம்பளம் வாங்குவர் ; ஆகவே, அன்றிரவு தான் கடைகளுக்குச் செல்வர். ஒரு வீதிக்கு அப்பால் இருந்த ஜெனெஸீ வழியே அவர்கள் வெள்ளமெனப் பாய்ந்தனர். அமைதியாக இருந்த சிறு சந்தான ப்ளீக்கர் தெருவுக்கு அவர்களில் அதிகம் பேர் வரவில்லை. எனினும் அந்த முதல் இரவிலேயே 9 டாலர் பெறுமான பண்டங்களை ஃபிராங்க் விற்றுவிட்டார். இரண்டு மணி நேர வியாபாரத்தில் அது அற்பத் தொகை அல்லவே ! அடுத்த திங்கள்கிழமைதான் முழு நேரமும் விற்பனை நடக்கக் கூடிய நாள். அதுதான் கடையின் விதியைத் தீர்மானிக்க வேண்டுமெனத் தெளிந்தார்.

அந்தத் திங்களன்று நடந்த விற்பனை மிகமிகத் திருப்தியூட்டுவதாகவே இருந்தது. ஏறக்குறைய 50 டாலர் மதிப்புடைய பண்டங்கள் அன்று விற்பனை ஆயின. ஃபிராங்க்குக்கு ஏற்பட்ட மகிழ்ச்சியில் ஒரு சிப்பந்தியை அமர்த்திக் கொண்டதுடன் பாங்கியிலும் கணக்குத் தொடங்கி விட்டார். தொடர்ந்து நன்றாக வியாபாரம் நடக்கவே, கடனை கழிக்கும் பொருட்டு ஒரு ' செக் ' குடன் மேற்கொண்டு பண்டங்களை அனுப்பிவைப்பதற்கான பட்டியலொன்றையும் மூருக்கு அவர் அனுப்பினார். ஐந்து சத விலைக் கடை

உண்மையில் வெற்றி பெற்று விட்டதாகவே தோன்றியது.

அவ்வாறு சில வாரங்கள் சென்றன. பின்னர் சிறுகச் சிறுக வியாபாரம் குறையலாயிற்று. முதலில் வந்து போனவர்கள் மறுபடி வரவில்லை. புதிதாக வந்த வாடிக்கையாளர்களின் தொகையும் வரவரக் குறைந்து தேய்ந்தது.

மே மாத இறுதியில் ஓரிரவு கடை மூடியதும் கணக்குப் புத்தகங்களை வெகு நேரம் பரிசீலித்தார், ஃபிராங்க். கைப்புண்ணுக்குக் கண்ணாடி தேவையா என்று தம்மைத் தாமே கேட்டுக் கொண்டார். என்ன தான் வெற்றி வாய்ப்புடன் ஆரம்பித்த போதிலும் அக்கடை தோல்வியே என்பதைத் தெளிவாகக் கண்டார்.

ஏன்? எதனால் அது? யோசனை என்னவோ நல்லதுதானே?—அது குறித்து எப்போதும் போலவே அவருக்கு ஐயமேதும் இருக்கவில்லை. ஆனால் எங்கோ ஓரிடத்தில், ஒரு விஷயத்தில் தாம் பிசகு புரிந்திருக்க வேண்டுமென அவருக்குத் தோன்றியது. எங்கே? எவ்வகையில்?—அதைத்தான் தாம் கண்டு பிடித்தாக வேண்டுமெனத் தேர்ந்தார்.

கடை அமைந்திருந்த இடம் பிரதிகூலமானது என்பதை அவர் அறிந்திருந்தார். ஆயினும் உண்மையான பிரச்னை பண்டங்களைப் பொறுத்ததே என்பதை ஊகித்தார். ஐந்து சத விலைக்கு விற்கக் கூடிய பண்டரகங்கள் அதிகம் இருக்கவில்லை. இருந்தவையும் தரமான பொருள்கள் அல்ல. ஆனால் அந்த விலைக்கு அவை எப்படி உயர்தரமாக இருக்க முடியும்? தாம் விற்ற தகரப் பாத்திரங்கள் எல்லாம் மயிரளவு மெல்லியவை, காகிதக்கத்தைகள் அனைத்தும் கரடுமுரடானவை என்பதை மற்றவர் சொல்லஅவசியமில்லை.

'மலிவு விலையை நாடுவோருக்கு மட்ட ரகப் பண்

டங்கள்'—மூர் இவ்வாறு கூறியபோது ஃபிராங்கும் ஒப்புக் கொண்டார். ஐந்து சத விலைக்கடை தொடங் கப்பட முழு முதல் காரணமே அதுதான். ஆனால் அது தவறானதாயின் என்ன செய்வது? மலிவு விலையில் வேண்டுவோருக்கு நல்ல பண்டங்களைக் கொடுக்க லாமா? ஆஹா! நல்ல யோசனைதான், அசல் யோசனையைவிடத் தரமானதுதான் அது! ஆயினும் அது சாத்தியமான காரியமா? அதை எப்படிச் சாதிப்பது?

ஒரே ஒரு வழியில்தான் அதைச் செய்ய முடியும். ஐந்து சத விலை வரம்பைக் கைவிடுவதன் மூலம்தான் அது இயலும். இல்லாவிடில்—ஆம்; ஏன் அப்படிச் செய்யலாகாது?—அவரிடம் பரபரப்பு பெருகியது, ஐந்து சத விலைக் கடையன்றி ஐந்து சதமும் பத்து சதமும் விலைகளுடைய கடையை நடத்தினால் என்ன? பத்து சத விலைக்கு திடமான தட்டுகளையும், அடுப்பு மூடிகளைத் தூக்குவதற்கு வளையாத துரட்டிகளையும் வாடிக்கையாளருக்குக் கொடுக்க இயலுமே! அவை போல. ஐந்து சதவிலையோடு தாம் நிறுத்திக் கொண்ட போது நினைத்தே பார்க்காத மற்றும் பற்பல புதிய பண்டங்களையும் தம்மால் தரவியலும் என்பது அவ ருக்குத் தெளிவாயிற்று. ஆகவே ஐந்து சதமும் பத்து சதமும் விலைகளுடைய கடையே தமது பிரச்னைக்குப் பரிகாரமாகும் அவர் முடிவு கட்டினார்.

பல்வேறு நோக்குகளிலிருந்தும் அந்த யோசனையை அவர் ஆராய்ந்தார். எவ்வகையிலும் அதில் குறையெதையும் அவரால் காணக் கூடவில்லை. அதுவே உகந்த பரிகாரமென அவர் உறுதியாகக் கருதினார்; ஐயமேதுமே அவருக்கு இருக்கவில்லை, அந்த புதிய யோசனையை எப்படிச் செயல்படுத்துவது என் பதே அப்போது தாம் சிந்திக்க வேண்டியதெனத் தேர்ந்தார். அவ்வூருக்கே பத்து சதப் பண்டங்களைத்

தருவித்து விடுவதா, இல்லாவிடில் புதியதொரு நகரில் முற்றிலும் புதிதாகக் கடை ஆரம்பிப்பதா என்பதே அவரை எதிர்ப்பட்ட கேள்வி.

புதிய நகரத்தில் தொடங்குவதையே அவர் பெரிதும் விரும்பினார். எப்படியும் அப்போது இருந்ததை விடப் பெரிய கடை அதற்குத் தேவை; அத்தகைய கடைகளுக்கோ யூடிகாவில் வாடகை மிகுதி. மேலும், யூடிகாவினாலும், அதன் மக்களாலும் அவரது உற்சாகம் வறண்டிருந்தது. அங்கு வானளாவ உயர்ந்த அவரது மனக்கோட்டை முற்றிலும் தகர்ந்துவிடவில்லையா? எனவே அந்த நகரத்தைத் துறந்து விட்டுப் புதிய ஊரில் புதிதாகக் கடை ஆரம்பிப்பதே ஆறுதல் தருமென அவருக்குத் தோன்றியது.

உணவு விடுதியில் தம்மோடு தங்கியிருந்த ஒருவருடன் நடத்திய சம்பாஷணை அப்போது அவருக்கு ஞாபகம் வந்தது. பென்ஸில்வேனியா ராஜ்யத்தைச் சேர்ந்த லங்காஸ்டரிலிருந்து வந்தவர் அந்த இளைஞர். யூடிகாவினால் ஒரு நாளும் ஆக முடியாத அளவு நல்ல வியாபாரம் லங்காஸ்டரில் ஆகுமென்றார் அவர். அங்கே நெசவாலைகள் மட்டுமின்றி இரும்பு, உருக்கு உற்பத்திச்சாலைகளும், கடிகாரத் தொழிற்சாலையொன்றும், கால்நடைக் கூடங்களும் உண்டென்று அவர் உரைத்தார். யார்க் ராஜ்ய விவசாயிகளைவிட அந்நகருக்குப் பண்டங்கள் வாங்க வரும் விவசாயிகள் நல்ல நிலைமையில் உள்ளவர்கள் என்றார். ஆனால் சிக்கனக்காரர்களான அந்தப் பென்ஸில்வேனியா டச்சுக்காரர்கள் தங்கள் பணத்துக்குத் தகுந்த தரமான பொருள்களை எதிர்பார்ப்பவர்கள் என்றும், மட்ட ரகப் பண்டங்களை அவர்கள் தலையில் கட்டுவது இயலாத காரியம் என்றும் அவர் கூறினார்.

அந்த மட்டிலும் நல்லதேயென்று இப்போது ஃபிராங்க் வுல்வொர்த்துக்குத் தோன்றியது. யாருக்

கும் இனி மட்டரகப் பண்டங்களை விற்பதில்லை என்றும், எல்லாப் பொருள்களும் உயர்தரமானவையாகவே இருக்க வேண்டும் என்றும் தீர்மானித்தார். ஐந்து சதத்துக்கு விற்பது லாபகரமாயில்லாத பண்டங்களுக்குப் பத்து சதமென விலை குறிப்பது என்றும், அந்த இரண்டு விலைகளில் ஏதாயினும் நல்ல பண்டங்களையே விற்பது என்றும் அவர் முடிவு செய்தார்.

'' மலிவு விலை வேண்டுவோருக்கு நல்ல ரகப் பண்டங்கள் ''—ஆம், அது தான் சரி !-ஆயினும் ' மலிவு விலையை விரும்புவோர் ' என்னும் வாசகத்தில் ஏதோ ஈனம் தொனிப்பதாக எப்போதுமே அவருக்குப் பட்டதுண்டு. மூலைக் கடைச் சிப்பந்தியின் வெறுப்புக்கு இலக்காகித் தானும் சார்லியும் வாதைப்பட்டதெல்லாம் அப்போது அவரது நினைவுக்கு வந்தது. தம்மிடம் பணத்தைக் கொடுத்துப் பண்டங்கள் வாங்குவோரை எதற்காக ஒரு வியாபாரி வெறுத்து இகழ வேண்டும் ? வாடிக்கையாளர் யாராயினும் வாடிக்கையாளரே. ஆகவே ' மலிவு விலை விரும்பி ' என்று யாருமே கிடையாது. யாருக்கு எதை விற்றபோதிலும் அது வியாபாரமே. கடைக்காரர் பிழைப்பது அதனால் தான். ஆகவே அந்தப் பதங்களை இனிப் பயன்படுத்துவதில்லையென அவர் நிச்சயித்தார்.

மனத்திலிருந்து பளு இறங்கியவராய் வீட்டுக்குப் படுக்கச் சென்றார். மறுநாள் சிப்பந்தியினிடம் கடையை ஒப்படைத்துவிட்டு லங்காஸ்டருக்கு ரயிலேறினார். நாள் முழுவதும் பிரயாணம் செய்து அந்தச் சனிக்கிழமையன்று மாலையில் அங்கு போய்ச் சேர்ந்தார். அங்கு வியாபாரம் உச்சத்தை எட்டும் நேரம் அது. கடைகளில் எல்லாம் வாடிக்கையாளர்கள் நிறைந்திருந்தனர். பாதையோரங்களில் குழுமியிருந்த மக்கள் வயிறார உண்டு வளமுடன் வாழ்வோராகக் காணப்பட்டனர். துப்புரவாகவும், நிறைந்த வெளிச்

சமூடனும் தென்பட்ட தெருக்களும், சீராக இலங்கிய கடைகளும் அவருடைய சிந்தையை மகிழ்வித்தன. தாம் தேடிய இடம் அதுவேயெனத் தேர்ந்தார்.

ஐம்பது சதம் வாடகை வாங்கிய ஒட்டலொன்றில் அன்றிரவைக் கழித்துவிட்டு, மறுநாள் கடைக்குத் தக்கதோர் இடத்தைத் தேடப் புறப்பட்டார். அதிகச் சிரமமின்றியே ஒரு இடம் அவருக்குக் கிட்டி விட்டது. வடக்கு குவின் வீதியில் 170 என்று இலக்கமிட்ட நல்லதோர் மூலை ஸ்தலம் அது. யூடிகாவில் அவர் அப்போது கொடுத்துவந்த அதேவாடகைதான் அதற்கும் கேட்கப் பட்டது. முன்பணம் கொடுத்துவிட்டு, உடனேயே ரயிலேறினார். கையிருப்பில் இருந்த பண்டங்களுக்குப் பட்டியல் தயாரிக்கும் வரை தான் யூடிகாவில் அவர் தங்கினார். பின்னர் வாட்டர் டவுனுக்குச்சென்றார். அவர் திடீரென தெரிவிக்கும் வரையில் அவருடைய புதிய திட்டம்பற்றி மூருக்கோ, ஜென்னிக்கோ ஏதுமே தெரியாது.

மூரின் மனத்தை மாற்றி இசையச் செய்வது கடினமாக இருந்தது. யூடிகாவில் கடை நடத்தும் முயற்சி தோற்று விட்டதால் அங்கு விற்காமல் தேங்கியிருந்த பண்டங்களில் பெருமளவுக்கு ஃபிராங்க் அவருக்குப் பணம் கொடுக்க வேண்டியிருந்தது. இப்போதோ இன்னும் அதிகத் தொலைவில், பென்ஸில்வேனியாவில் புதிய கடையொன்றைத் திறக்க மேற்கொண்டு கடன் கேட்டார்—யூடிகாவில் தோல்வியுற்றபின் அங்கு மட்டும் வெற்றி கிடைக்குமென்று ஃபிராங்க் நினைப்பதேன்—என்று மூர் வினவினார்.

தம்முடைய கருத்துக்களையெல்லாம் பொறுமையாக ஃபிராங்க் எடுத்துரைத்தார். யூடிகா முயற்சியில் தாம் பிசகுகள் புரிந்துவிட்டதாகவும், அவற்றிலிருந்து பல படிப்பினைகளை அறிந்துகொண்டுள்ளதாகவும் கூறினார். அதே தவறுகளை இனிமேல் தாம் புரியப்போவ

தில்லை என்றார். பத்து சதம் விலையுடைய பண்டங்களையும் விற்பது என்னும் புதிய திட்டத்தின் பயனாக இனி தோல்விக்கே இடமில்லை என்றும் குறிப்பிட்டார்.

அது குறித்து அவர் காட்டிய உறுதி இறுதியில் அவருடைய ஆதரவாளரான மூரின் மனத்தை மாற்றி விட்டது. மேலும் முன்னூறு டாலர் மதிப்புடைய பொருள்களைக் கடனாகத்தர அவர் சம்மதித்தார்.

"ஆனால் ஒன்றை மறவாதே: இதுவே கடைசி முறை" என்று அவர் எச்சரித்தார். "நீ பாடுபட்டு வேலை செய்பவன். அதனால் உன்னை எனக்குப் பிடிக்கிறது ஃபிராங்க் எப்போது வேண்டுமாயினும் உனக்குப் பழைய வேலையைக் கொடுக்க நான் தயார். ஆனால் உன்னுடைய புதிய திட்டங்களில் நான் பணயம் வைக்கும் கடைசிப் பணம் இதுவே."

"இனி மறுமுறையும் உங்கள் உதவியை நான் கோரமாட்டேன்" என்று ஃபிராங்க் வாக்களித்தார். "இம்முறையும் நான் தோற்றால் இம்முயற்சியைக் கைவிட்டு விடுகிறேன். ஆனால் நான் தோற்கமாட்டேன் என்பது திண்ணம்."

ஜென்னியின் மனத்தை மாற்ற முயற்சி யேதும் தேவையிருக்கவில்லை. அவள் தம்மிடம் வைத்திருந்த தளராத நம்பிக்கை ஃபிராங்குக்கு இதமாகவும் இன்பமாகவும் இருந்தது.

"உங்கள் முயற்சி வெற்றி பெறப்போவது உறுதி ஃபிராங்க்" என்றாள் அவள். "அது குறித்து நீங்கள் மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கப் புகுவது மெத்தச் சரியே. ஆயினும் ஒரேயொரு விஷயம்" அவளுடைய இனிய நீலக் கண்கள் அன்பு மேலிட அவரை நோக்கின. "இம்முறை உங்களோடு நானும் வரவிரும்புகிறேன், அன்பரே. நாம் அதிககாலம் பிரிந்து வாழ்ந்து விட்டோம். கோழிப்பண்ணையில் நான் தங்க நேர்ந்த அந்த முடிவிலா வருடத்திலும், சென்ற சில மாதங்களிலும் நான் தனிமையால் மிகவும் வாடிவிட்டேன்.

மேலும் இப்போது நமது குழந்தை ஹெலெனு வேறு இருக்கிருள். கவனித்தீர்களா, நீங்கள் உள்ளே நுழைந்தபோது அவளால் இலகுவில் அடையாளம் கண்டுகொள்ளக்கூட முடியவில்லை. குடும்பம் என்ருல் கூடிவாழவேண்டும், ஃபிராங்க். எங்களையும் உங்களோடு லங்காஸ்டருக்கு அழைத்துச் செல்ல மாட்டீர்களா ?''

''நீ வர விரும்பினுல் அப்படியே செய்யலாம், ஜென்னி'' என்று தயக்க முடன் அவர் பதிலளித்தார். ''ஆனுல் அங்கு வாழ்க்கை கடுஞ்சோதனையாகவே இருக்குமென அஞ்சுகிறேன். குறைந்த வாடகைக்குக் கிடைக்கும் வசதியற்ற அறைகளில்தான் நம்மால் வசிக்க இயலும். ஆயினும் நானும் தனிமையில் தானே தவித்திருக்கிறேன், என் அன்பே ! என்ருல் உனக்கு அளிக்கக்கூடியதுடன் நீ திருப்தியடைய முடியுமானுல்—''

''எந்தக் கஷ்டமாயினும் நான் சகித்துக்கொள்வேன்'' என்று உற்சாகமுடன் அவள் பதிலளித்தாள். ''நாம் சேர்ந்திருந்தால் போதும், எதையுமே நான் பொருட்படுத்தமாட்டேன்.''

''ஆண்டவன் உனக்கு அருள் பாலிப்பாராக!''— அவளை இழுத்து அணைத்துக்கொண்டார் ஃபிராங்க். ''என்னை மணந்துகொண்டதிலிருந்து நீ எவ்வளவோ கஷ்டங்களை அனுபவித்துவிட்டாய், ஜென்னி. ஒரு போதும் ஒரு வார்த்தைகூடக் குறை கூறியதில்லை நீ. ஆனுல் இப்போது அந்தச் சோதனைக் காலத்தின் கட்டம் முடிந்துவிட்டது. என் அன்பே, அது எனக்குத் தெரியும். என்னுடைய உள்ளுணர்வு அவ்விதம் கூறுகிறது. லங்காஸ்டர் நம் வாழ்க்கையிலேயே திருப்பமாக அமையப்போகிறது. ஆல்பன் மாமா கூறுவது போல; வாழ்க்கை வசதிகளை அளிப்பதில் வல்லவனல்ல நான். ஆயினும் உனக்கு உரியவற்றை இனி

நான் பெற்றுத் தரத்தான் போகிறேன். எனக்கு மட்டும்...''

''உங்களுக்கு மட்டும் சொந்தத்தில் கடை இருக்கும்போது என்றுதானே கூறவந்தீர்கள் ?'' என்று சொல்லி அவரை அவள் சீண்டப் புகுந்தாள். ''அப்படித்தான் முன்பு நீங்கள் கூறுவது வழக்கம். ஆனால் இனியும் அவ்வாறு கூறவில்லாது. முடியுமா சொல்லுங்கள். இப்போதுதான் உங்களுக்குச் சொந்தத்தில் கடை ஏற்பட்டுவிட்டதே! இல்லை, யூடிகாவிலுள்ள கடையை நான் குறிப்பிடவில்லை, லங்காஸ்டரில் ஏற்படவிருக்கும் நமது புதிய கடையைத்தான் சொல்கிறேன், அதுதான் நமக்குச் செல்வம் தேடித்தரப் போகிறது. அதற்கு என்ன பெயரிடவிருக்கிறீர்கள், ஃபிராங்க் ?''

''அது 'வுல்வொர்த்தின் ஐந்து சத, பத்து சதக் கடை' என்று அழைக்கப்படும்''- பெருமையுடன் ஃபிராங்க் கூறினார். ''நீ தமாஷ் செய்யலாம் ஜென்னி; ஆனால் நான் அதை வேடிக்கையாக நினைக்கவில்லை— அந்தக் கடைதான் நம்மைச் செல்வராக்கப் போகிறது என்பது உறுதி.''

# 8

உலகிலேயே வெற்றிகரமாக அமைந்த முதலாவது ஐந்து—பத்து சத விலைக்கடை, 1879, ஜூன் 21-ம் தேதியன்று திறக்கப்பட்டது. சில வாரங்கள் கழித்து சூரியன் சுடரொளி வீசிய ஒரு ஞாயிறன்று பிற்பகலில் தம் தம்பியைச் சந்தித்து அழைத்துவருவதற்காக ரயில் நிலையத்துக்கு வண்டியில் சென்றார். அந்தக் கடையின் சொந்தக்காரரான ஃபிராங்க் வுல்வொர்த்.

''இதோ இந்த வழியாக வா'' என்று அவர் வழி

காட்டினார், “குதிரை வண்டியொன்று கொண்டுவந்திருக்கிறேன்.”

சந்தோஷத்தினால் சீட்டியடித்தார் சார்லி வுல்வொர்த். “சொந்த வண்டியா என்ன? ஏதேது, வெகு வேகமாக முன்னேறுகிறாய் போலிருக்கிறதே அண்ணா!”

“ஊஹூம், வாடகை வண்டிதான்!”— அந்த வண்டியில் இருவரும் ஏறுகையில் அண்ணன் கூறினார்.” ஆனால் கூடிய சீக்கிரத்தில் குதிரையொன்று வாங்குவது பற்றிச் சிந்தித்துத்தான் வருகிறேன், வீட்டிலிருந்து கடை மிகத் தொலைவில் இருக்கிறது. காலையில் முன்னேரத்திலேயே நான் கடைக்குச் சென்று வியாபாரத்தைத் தொடங்குவது நல்லதில்லையா?”

“அப்படியானால் ஒரு வீட்டையும் வாங்கிவிட்டாய் என்று கூறு”—தம்பி ஆச்சரியத்தோடு கேட்டார்.

“இன்னும் இல்லை. வாடகை வீட்டில் தான் வசிக்கிறோம். சென்ற வாரம் தான் அதில் நாங்கள் குடிபுகுந்தோம். நமக்கு ஏற்றதாக இருந்தால் அதையே வாங்கக்கூடும். இல்லாவிடில், இன்னும் சற்றுப் பெரிய வீடாகப் பார்க்கலாம்.”

அலட்சிய தோரணையில் ஃபிராங்க் பேச முயன்ற போதிலும் அதில் பெருமைத்தொனி புகுவதை அவரால் தடுக்கக்கூடவில்லை. “முதலில் நீ நம் கடையைப் பார்க்கவேண்டுமென்றே விரும்புகிறேன், சார்லி. ஆனால் ஜென்னியோ சாப்பாட்டை முடிப்பதற்காக உன்னை நேராக வீட்டுக்கு அழைத்துவரச் சொல்லியிருக்கிறாள். ஆகவே சாப்பாட்டுக்குப் பின்பே கடைக்குச் செல்வோம்.”

“கடையைப் பார்க்கவேண்டும் என்பதுதான் என் ஆசையும்” என்று சார்லி பதிலளித்தாள். “உன் கடிதத்தை மூரிடம் காட்டினேன். அதை அவரால் எளி

தில் நம்பமுடியவில்லை. முதல் நாளன்றே ஏறக்குறைய 130 டாலர்களுக்கு வியாபாரம்! அத்தனையும் அரைக் காசும் கால்காசும்! உண்மையில் அதை நீ மிகைப் படுத்திக் கூறிவிடவில்லையே, ஃபிராங்க்?"

"இல்லவேயில்லை. சொல்லப்போனால் அதைவிட அதிக அளவிலேயே பின்னர் வியாபாரம் நடந்திருக் கிறது. சென்ற சனிக்கிழமையன்று மட்டிலும் இரு நூறு டாலர் தேறியது. அதைப்பற்றி என்ன சொல் வாயோ நீ? நான் கூறுகிறேன் கேள், இம்முறை நான் சரியான வழியிலேயே செல்கிறேன். பத்து சத விலை தான் இந்தப் பெருமாறுதலுக்குக் காரணம்."

"ஆனால் வெகு விரைவில் அல்லவோ அது நேர்ந்து விட்டது!" சார்லி ஆச்சரியத்தால் கூவினார். "பார்த் தால் ஏதோ ஜால வித்தை மாதிரியல்லவா தோன்று கின்றது!"

"வேகமாக நடந்திருக்கிறது என்பது வாஸ் தவமே, ஆனால் சுலபமாக நடந்தேறிவிடவில்லை, சார்லி. என் வாழ்க்கையிலேயே இவ்வளவு கஷ்டப் பட்டு நான் உழைத்ததில்லை. இந்த அளவு கணக்கை யும் நான் போட்டது கிடையாது, செலவையும் குறைந்த மட்டத்தில் வைத்திருக்கிறேன். சுற்றித் தருவதற்காகப் பழைய காகிதத்தை வாங்குவதன் மூலம் பவுண்டுக்கு ஆறு சதம் நான் மிச்சம் பிடிக் கிறேன், தெரியுமா? சிப்பந்திச் சம்பளத்தையும் பொறுத்து ஒரு விஷயத்தைக் கண்டு பிடித்துள்ளேன்.

"விற்பனைக்கு இளம் பெண்களைப் பயன்படுத்து வதாக எழுதியிருந்தாயே, அவர்களுக்குச் சம்பளம் குறைவு போலிருக்கிறது?"

'ஆமாம்' என்னும் பாவனையில் ஃபிராங்க் தலை யாட்டினார். "என்னுடையது போன்ற கடைக்கு அனுபவமுள்ள ஆண் சிப்பந்திகள் தேவையில்லை. முன்னதாக எங்கும் வேலை செய்திராத நாணயமான

நல்ல பெண்களே போதும். அரைச் சம்பளத்திற்கு அவர்கள் வேலை செய்கிறார்கள். அப்படியும்கூட, எங்காவது வீட்டில் வேலை செய்வதைவிட அவர்களுக்கு அதிக ஊதியம் கிடைக்கிறது. மேலும் கடை வேலையும் அவர்களுக்குப் பிடித்தமாயிருக்கிறது. ஆகவே என்னால் சமாளிக்க முடியாத அளவு விண்ணப்பங்கள் வந்து குவிகின்றன. இதோ நம் வீடு வந்துவிட்டது. ஜன்னல் வழியாக ஹெலெனா பார்க்கிறாள், கவனி!"

தன் மைத்துனரை அன்புடன் வரவேற்றாள் ஜென்னி. "மேஜை மீது சாப்பாடு தயாராக இருக்கிறது. சாப்பிடும்போது கடை பற்றிய பேச்சே கூடாது, ஞாபகமிருக்கட்டும்! வாட்டர்டவுனைப் பற்றியும், அங்கு ஏற்பட்டுள்ள புதுமைகளைப் பற்றியும் சகல விவரங்களையும் கேட்கவே நான் ஆசைப்படுகிறேன். தான் எவ்வளவு சமர்த்தாகச் சாப்பிடுகிறேன் என்பதை சித்தப்பா சார்லிக்குக் காட்ட ஹெலெனா வேறு ஆசைப்படுகிறாள். சாப்பிட்டு முடித்தானதும் கடை பற்றி எவ்வளவு பேச வேண்டுமோ அவ்வளவையும் ஆசைதீரப் பேசிக்கொள்ளுங்கள்."

"சாப்பாடு முடிந்ததும் சார்லியைக் கடைக்கு அழைத்துச் சென்று காட்டலாமென நினைத்தேன்" மேஜை முன் அமர்ந்த போது ஃப்பிராங்க் கூறினார். "தனியாக விடப்படுவது பற்றி உனக்கு ஆட்சேபம் இல்லையானால் அழைத்துப் போகிறேன்."

"ஆட்சேபமில்லையா!"—அவரைக் கிண்டல் செய்தாள் ஜென்னி. "இங்கு பெரும்பாலான இரவுகளை நான் தனிமையிலேயே கழிக்க நேர்கிறது, சார்லி. கடையிலிருந்து வர ஃப்பிராங்குக்கு மனமே இருப்பதில்லை. ஹெலெனா பிறந்ததும், அவளைப் பற்றியன்றி வேறெதையுமே இனித் தம்மால் சிந்திக்கமுடி

டது; வேறு எதைப் பற்றியும் நினைப்பதே கிடையாது ”

ஃபிராங்க் அவளைப் பார்த்துச் சிரித்தார். நீ சொல்வது உண்மை தான், அன்பே. நம்முடைய இந்தக் குழந்தை நாம் கடைசிக் காலத்தில் ஏழைகள் விடுதியில் உழலாமல் தவிர்க்கப் போகிறது, பார்த்துக் கொண்டே இரு. பொறித்த பன்றியிறைச்சியை இன்னும் கொஞ்சம் போடட்டுமா, சார்லி?”

சாப்பாடு முடிந்ததும் சார்லியை அழைத்துக் கொண்டு வெளியே சென்றார் ஃபிராங்க். வாசலில் வாடகைக்குதிரை இன்னமும் கட்டப்பட்டு இருந்தது.

“இதை லாயத்துக்கு ஓட்டிப் போய் ஒப்படைத்துவிட்டுச் செல்வோம்” என்று ஃபிராங்க் கூறினார். “அங்கிருந்து கடை சமீபத்தில் தான் இருக்கிறது. இந்தக் கடுமையான இரவில் வீட்டுக்குத் திரும்ப நடப்பதில் உனக்குக் கஷ்டமொன்றும் இல்லையே? இரவிலும் இந்த வண்டியை நான் வைத்துக் கொள்வதானால் அதிகப்படியாக ஐம்பது சதம் வாடகை வசூலிப்பார்கள்.”

சார்லி சிரித்தார். “ரயில் நிலயத்திலிருந்தே நான் நடந்து வந்திருக்க முடியும், அண்ணா. பகட்டுக்காகத்தான் வண்டியை நீ அமர்த்தினாய் என்பேன்.”

“அப்படியும் இருக்கலாம்” என்று குறுநகையுடன் ஃபிராங்க் பதிலளித்தார். “அம்மா எப்போதுமே என்னிடம் கொஞ்சம் டம்பம் உண்டெனக் கூறி வந்தது உனக்கு நினைவில்லையா? அவள் மட்டும் இன்று நம்மிடை இருக்க முடியுமானால் ! அவளுக்கு கடையைக் காட்ட நான் ஆசைப்படுகிறேன், தெரியுமா?”

“ஆம், அதை நீ அவளுக்குக் காட்டக் கொடுத்து வைத்திருக்கவேண்டும் என்பதே என் ஆசையும்”— சற்றுநேரம் சார்லி பேசாமல் இருந்தார். பிறகு சிரித்தவாறு தொடர்ந்தார் : “ஆனால் உண்மையில் அதை

யார் பார்க்கவேண்டும் தெரியுமா? ஆல்பன் மாமா தான். அன்ெருரு நாள் அவர் வாட்டர் டவுனுக்கு வந்திருந்தார். அப்போது உன் கடிதத்தை அவரிடம் கொடுத்தேன். அதுவரை அவரைப் போலப் பிரமித்து மலைத்தவரை நான் பார்த்ததேயில்லை !"

ஃபிராங்கும் நகைத்தார்—" பண்ணையிலிருந்து நான் புறப்பட்டது நல்லதற்கே என்பதை அவர் ஒப்புக்கொள்ளச் செய்ய எதனுலும் இயலாது என்று எண்ணுகிறேன். ஆமாம்; அவர் என்னதான் சொன்ஞர்?"

" அதிகமாக ஒன்றும் கூறிவிடவில்லை, ஒரு கணம் பளிச்சிட்டு மறுகணம் மறைந்துவிடும் மின்னலாக அது ஆகிவிடக்கூடாது என்றே தாம் வேண்டுவதாகக் கூறிஞர். என்ன, இதுதான் குதிரை லாயமா?"

' ஆமாம், இந்தத் திருப்பத்தைக் கடந்தால் கடை வந்துவிடும்".

குதிரையை அங்கு விட்டுவிட்டு, மீதமிருந்த சிறிது தூரத்தை அவர்கள் நடந்து கடந்தனர்.

மூலைக் கட்டிடமொன்றில் கீழ்ப்பகுதியில் பாதியளவு பரந்திருந்தது கடை. குவீன் வீதியை நோக்கிஞற்போல் இரண்டு பெரிய ஜன்னல்கள் இருந்தன; முனைக்கு அப்பால் காலியாக இருந்த செங்கற் சுவரில் ' வுல் வொர்த்தின் ஐந்து சத, பத்து சதக் கடை ' என்று கொட்டை எழுத்துக்களில் தீட்டப்பட்டிருந்தது. ஜன்னல்களுக்கு மேல் இருந்த முகப்புப் பகுதியிலும் அவ்வாறே எழுதப்பட்டிருந்தது. கதவுக்கு மேலும் ' மகத்தான ஐந்து சதக்கடை ' என்பதாக மற்ெருரு வாசகம் பொறிக்கப்பட்டிருந்தது—இந்தக் கடைசி விலாசம் யூடிகாக் கடையிலிருந்துவந்ததாகும். அதற்காக மூன்று டாலர்களைச் சுளைசுளையாகக் கொடுத்திருந்தார், ஃபிராங்க் வுல்வொர்த். ஆகவே அதை வீணடிக்க அவர் விரும்பவில்லை !

" இது எந்த மாதிரிக் கடை என்பதை மக்கள் நன்ருக அறியும்படித் தான் செய்திருக்கிருய் " என்ருர் சார்லி.

" இப்படி நான் செய்தேயாக வேண்டும் "—சாலியைத் தேடியவாறு ஃபிராங்க் பதிலளித்தார். " பத்திரிகைகள் வாயிலாகவோ, துண்டுப் பிரசுரங்கள் மூலமோ விளம்பரப்படுத்த எனக்குக் கட்டாது, சார்லி; யூடிகாவில் நான் புரிந்த பிசகுகளில் அது ஒன்று. கால்துட்டும் அரைத்துட்டுமாகவே லாபம் வருகையில் டாலர் கணக்கில் விளம்பரம் செய்ய இயலுமா? தன்னைத்தானே தான் இக்கடை விளம்பரப்படுத்திக் கொள்ளவேண்டும். முகப்பில் பிரகாசமான சிவப்பு வர்ணம் பூசுவதுபற்றிச் சிந்தித்து வருகிறேன். அப்போது இன்னும் பளிச்செனத் தெரியும் அல்லவா?

சார்லியை அவர் உள்ளே அழைத்துச் சென்று, ஒரு எண்ணெய் விளக்கை ஏற்றிஞர்.

" அதன் வெளிச்சத்தைக் கொண்டே எல்லாவற்றையும் நீ சரிவரப் பார்த்துவிடமுடியும் என்றே நம்புகிறேன். நிலக்கரி எண்ணெயை வீணுக உபயோகிப்பதால் என்ன பிரயோஜனம்? இருப்பினும் என்னிடம் ஏராளமான விளக்குகள் இருக்கத்தான் இருக்கின்றன. இரவு நேரங்களில் திறந்து வைத்திருக்கும்போது இக்கடை பிரமாத சுடர்விட்டுத்தான் பிரகாசிக்கிறது. இன்னொரு விஷயத்தையும் நான் கண்டுபிடித்துள்ளேன். கடை ஒளியும், களையும் மிகுந்து காணப்பட்டால் மக்கள் அதிக அளவில் வருவர், பண்டங்களும் இன்னும் பொலிவு பெறும் என்பதுதான் அது. சரி, கடைக்கு வந்துவிட்டோம்; இப்போது இதுபற்றி நீ என்ன நினைக்கிருய்? சொல்லு, சார்லி'.

" முதலில் எல்லாவற்றையும் நன்ருகப் பார்த்து

விடுகிறேனே" என்று கூறி ஒவ்வொரு மேஜையாக சார்லி பார்க்கலானார்.

இறுதியில் கல்லாவுக்குத் திரும்பிய போது, "பிர மாதமாகத்தான் தோன்றுகிறது எனக்கு. சரி, இப் போதே நம் விவகாரம் பற்றிப் பேச விரும்புகிறாயா என்ன, ஃபிராங்க் ?"

"அதற்கு நீ தயார் என்றால் எனக்குச் சம்மதம் தான்" என்று பதிலளித்தவராய் சார்லியை ஒரு நாற் காலியில் உட்காரச் சாடை காட்டினார் ஃபிராங்க். "எதிலும் உன்னை அவசரபடுத்திச் சிக்கவைக்க நான் விரும்பவில்லை, சார்லி: மூர் அண்டு ஸ்மித் கடையில் நீ நல்ல வேலையில் இருக்கிறாய். இப்போது அவர்கள் என்ன சம்பளம் கொடுக்கிறார்கள் ? வாரம் எட்டு டாலர் தானே ? அந்த அளவு என்றால் தரவியலாது. ஆனால் என்னோடு நீ சேர்வதனால் மூர் கடையில் எக்காலத்தி லும் உனக்குக் கிடைக்கக் கூடியதைவிட அதிகமாகச் சம்பாதிக்கச் சந்தர்ப்பம் இருக்கிறது. சந்தர்ப்பம் என்று தான் சொன்னேன் என்பதை நீ கவனிக்க வேண்டும்: வியாபாரத்தில் எதுவுமே நிச்சயமல்ல. ஆகவே தான் நீயே சிந்தித்துத் தீர்மானிக்கவேண்டு மென்று விரும்புகிறேன்."

சார்லி தலையாட்டினார். "ஹாரிஸ்பார்க்கில் ஒரு கடை திறப்பது பற்றி நீ ஆலோசித்து வருகிறாய். உன் சார்பில் அதை நான் நடத்த வேண்டுமென நீ ஆசைப்படுகிறாய், அதுதானே உன் மனத்தில் இருப் பது ?"

"ஆமாம், அதுவேதான். அங்கே மலிவாக ஒரு இடம் எனக்குக் கிடைத்திருக்கிறது: அது அப்படி யொன்றும் நல்ல இடமல்ல, அறையும் சிறியதுதான். ஆனால் வாடகையோ மிகமிகச் சொற்பம். உனக்கே வாரம் ஏழு டாலர் சம்பளம் தர என்றால் இயலும்—

லாபம் பெருகத் தொடங்கியதும் அதிகம் தருகிறேன். என்ன சொல்கிருய், சார்லி ?"

தம்பி தயங்கவேயில்லை, சிறிதும். " நான் நஷ்ட மடையும்படி இதில் ஒன்றுமில்லை " என்ருர், உற்சா கத்துடன். " அந்த முயற்சி தோற்ருல் வேறெந்தக் கடையிலாவது நான் வேலை பார்த்துக் கொண்டுவிட முடியும். ஜெஃப்பர்ஸன் வட்டத்திலிருந்து நான் வெளியே வருவது இதுதான் முதல் முறை. பென் ஸில்வேனியாவைப் பார்க்கப் பரவசமாகவே இருக்கி றது எனக்கு, இங்கு சிறிது காலமாவது தங்குவதில் எனக்குச் சந்தோஷமே. "

ஆக இவ்வாறு அது ஏற்பாடாயிற்று இரண்டு வாரம் கழித்து, பென்ஸில்வேனியா ராஜ்யத்தையே சேர்ந்த ஹாரிஸ்பார்க்கில் சிறியதொரு கடையை சார் லஸ் வுல்வொர்த் திறந்தார். அதை வைத்துக் கொண்டு எட்டு மாத காலம் அவர் திண்டாடிய பின் அதை மூட ஃபிராங்க் முடிவு செய்தார். ஏப்ரல் மாதத் தில் மறுபடி யார்க்கில் அவர் முயற்சி செய்து பார்த் தார். அந்தக் கடையும் மூன்று மாத காலம்தான் நீடித் தது. 1870-ம் வருட வேனிற்காலத்திற்குள் லங்காஸ் டருக்கு சார்லி திரும்பி வந்துவிட்டார்.

அவரை அன்புடனேயே வரவேற்ருர் ஃபிராங்க். " உன்னை நீயே குறை கூறிக்கொண்டு கலங்காதே, சார்லி"—கடையில் மீண்டும் கலந்து பேசத் தொடங் கியதுமே அவர் கூறிஞர். " எல்லாம் என் தவறு தான். அதுபற்றியே நான் சிந்தித்து வருகி றேன். ஹாரிஸ்பார்க்கிலும், யார்க்கிலும் நாம் தோற் றதற்குக் காரணம் என்ன தெரியுமா ? யூடிகாவில் என் முயற்சி பலிக்காமற் போனதற்குக் காரணமாயிருந்த அதே விஷயம் தான்—நல்லதல்லாத தெருவொன்றில் சின்னஞ்சிறு கடையை வைத்தோம். அதில் பண்டங் களைக் கண்டபடிக்கு விற்ருேம். பண்டங்களைப் பார்

லையாக வைப்பதற்கு இடம் இருக்கவில்லை. அவ்வாறு செய்வதில் பயனே கிடையாது. யூடிகாவில் அதை நான்கண்டுகொண்டேன். ஆயினும் அதேதபிசகை மறுபடியும் நான் புரிந்தேன். ஒரு முறைஅல்ல, இரு முறை !"

தொங்கிப் போயிருந்த சார்லியின் முகம் பிரகாசம் அடைந்தது. " நான்தான் குளறுபடி செய்திருக்க வேண்டுமெனக் கலங்கி கொண்டிருந்தேன், ஃபிராங்க். என்ளுல் முடிந்த மட்டும் முயன்றுதான் பார்த்தேன்."

" உன்னைவிட என்னுலும் அதிகம் செய்திருக்க முடியாது" என்று அவருடைய தமையனுர் கூறினுர். " யூடிகாவில் முயன்றும் முறியடிக்கப்படவில்லையா நான் ? இது முற்றிலும் புதிய விதமான வியாபாரமாக இருப்பதுதான் பிரச்னை, சார்லி" சிந்தனையில் தோய்ந்தவராய்த் தொடர்ந்தார்:- " பழங்கால ஜவுளிக் கடையைப் போல ஐந்து சத—பத்து சதக் கடையை நடத்த முடியாது. அது முற்றிலும் வேறுனது. முன்மாதிரி எதுவுமே கிடையாது. நாம் யாரைப் போல் இருக்கிறோம் என்றுல்—மேற்கு நோக்கிச் செல்லும் குடியேற்றக்காரர்களைத்தான் உனக்குத் தெரியுமே ? யார்க் ராஜ்யத்தில் போலவே கான்ஸாஸிலும் சாகுபடி செய்வது சாத்தியமல்ல என்பதை அவர்கள் காண்கிறுர்கள். அவர்கள் என்ன பெயரிட்டுத் தங்களை அழைத்துக் கொள்கிறுர்கள் என்பதை நீ அறிவாயா ?"

"வழி வகுப்பவர்கள் என்பதைத் தானே நீ கூறுகிறுய் ?"

" ஆம், அதேதான். நாமும் அவ்வாறே வழி வகுப்பவர்கள்தான், சார்லி. புதிய துறையில் நாம் புகுந்துள்ளோம். எது சரியான பாதை அல்லது தவறுனது என்பதைக் கூற நமக்கு யாருமில்லை. இப்படியும் அப்

[illegible]

நாம் கண்டாக வேண்டும்: தவருன திசையில் செல்வோமாஞல், திரும்பி வந்து, தொடங்கிய இடத்திலிருந்தே, மறுபடி ஆரம்பிக்க வேண்டும் ; அவ்வளவு தான். ''

'' அடேயப்பா, அவ்வளவையும் ஆராய்ந்தறிந்து முடிவு கட்டி விட்டாய் போலிருக்கிறதே, நீ ஃபிராங்க்! ஹூம், ஹாரிஸ்பார்க்கும், யார்க்கும் பலிக்காமற் போய் விட்டன. இனி லங்காஸ்டரிலுள்ள ஒரே கடையுடன் நிறுத்திக் கொள்வதுதான் உன் உத்தேசமா ?''

ஃபிராங்க் தலையசைத்து மறுத்தார். "மேலும் பல கடைகளைத் திறக்க வேண்டும் என்பதே இன்னமும் என் கருத்து. எத்தனைக்கெத்தனை கிளைகள் இருக்கின்றனவோ, அவ்வளவுக்கவ்வளவு அதிகமாகப் பண்டங்களை நாம் வாங்கவியலும். அப்படிப் பெருமளவில் நாம் வாங்கும்போது கழிவுத் தொகையும் அதிகமாகக் கிடைக்கிறது. ஐந்து சத, பத்து சதக் கடைகளை சங்கிலித் தொடர்போல் தொடங்க வேண்டும் என்பதே என் திட்டம், சார்லி. அதுதான் நாம் வேண்டுவது ; நாம் சாதிக்கப் போவதும் அதுவே. ''

'' திரும்பத் திரும்ப ' நாம் ' என்கிருய் நீ '' என்பதை சார்லி நினைவூட்டினுர். "ஆனுல் உண்மை முதலாளி என்னவோ நீ தான், ஃபிராங்க். நான் உன்னிடம் சம்பளத்துக்கு வேலை செய்பவனே, இப்போதோ அந்த வேலையும் கூட இல்லை. ''

" இல்லை, அப்படி ஒன்றுமில்லை.'' அன்புடன் அவரது தோளைத் தட்டினுர். ஃபிராங்க். "நீ விரும்பினுல் இதில் நீ என் கூட்டாளியாகலாம். உன்னிடம் பணமே இல்லை என்பது எனக்குத் தெரியும். ஆனுல் உன் மூளையையே மூலதனமாகப் போடலாம். இப்போது அதுதான் நான் சொல்ல வந்தது. இந்தக் கோடைக் காலத்தில் பெரும்பகுதியைப் பல இடங்களைப் பார்ப்பதில் நான் கழிக்கப் போகிறேன். மந்

ஒரு கடைக்குச் சிறந்த இடத்தைக் கண்டு பிடிக்கும் வரை நான் சுற்றியலேய உத்தேசிக்கிறேன். இனித் தவறுகளுக்கே இடமளிக்கப் போவதில்லை! அந்த இடத்தை நான் கண்டு பிடித்ததும் அங்கு அமைய விருக்கும் கடையை நீதான் நிர்வகிக்கப் போகிறாய். அதுவரையில் இங்கேயே நீ எனக்கு உதவி புரியலாம். வாரம் எட்டு டாலர் சம்பளம் தருகிறேன், சரிதானே ?''

'' எனக்குச் சம்மதம்தான் '' என்று முகம் மலரச் சிரித்தார் சார்லி. '' முன்பு ஒரு பேர்வழியைப் பற்றிப் பேசுவாயே, ஞாபகம் இருக்கிறதா, ஃபிராங்க் ? அந்த நெப்போலியன் போனபார்ட்டைத் தான் குறிப்பிடுகிறேன். தாம் பெரிய மனிதரானவுடனேயே தம் சகோதரர்களைத் தக்க ஸ்தானங்களில் அமர்த்தத் தொடங்கிவிட்டார் அவர். அவ்வாறே அவருடைய அடிச்சுவடுகளை நீயும் பின்பற்றுவது போலத் தோன்றுகிறது.''

'' ஆனால் கடைசியில் அவரது வாழ்க்கை சிறைச்சாலையில் அல்லவா முடிந்தது ?''—ஃபிராங்கும் உற்சாகம் துள்ளப் பதிலளித்தார். '' அந்த அளவுக்கு அவருடைய சுவடுகளைப் பின்பற்ற நான் இஷ்டப்படவில்லை. ஆயினும் அவரைப் பொறுத்த சில விஷயங்கள் எனக்கு மெத்தப் பிடிக்கத்தான் செய்தன, சார்லி. உறவினர்களைக் கவனித்துக் கொண்டதும் அவற்றிலொன்று. ஆக, எல்லாம் முடிவாகிவிட்டது, இல்லையா ? நீ இங்கேயே வேலை செய்யவேண்டும் ; அதன் பயனாக வெளியூர்களுக்குச் சென்று பார்க்க எனக்கு வாய்ப்புக் கிட்டவேண்டும். சரி தானே ?!'

லங்காஸ்டர் கடையின் வெற்றிப் படலம் தொடர்ந்தது. அது ஏற்பட்டு ஓராண்டாகிவிட்டது. அது நிலையான வெற்றி என்பது குறித்து ஐயம் எதற்குமே இடமிருக்கவில்லை. வாடிக்கையாளர்களுக்குப்

புதுமையான பண்டங்களைக் கண்டுபிடித்துத் தரு வது ஒன்றுதான் பிரச்னையாக இருந்தது.

அத்தியாவசியப் பொருள்களை மட்டுமே விற்பது என்னும் கொள்கையை வுல்வொர்த் கைவிட்டு வந் தார். பம்பரங்களும் ரப்பர் பந்துகளும் விரைவில் விற்பனையானது, குழந்தைகளின் விளையாடடுப் பண் டங்களைப் பொறுத்துள்ள வியாபாரத் தோதுக்களை அவர் உணரச் செய்தது. அலங்கார வேலைப்பாடு செய்த சீப்புகளும், கேச. நாடாக்களும் கணிசமாக விற்றன.

அத்தகைய ஆடம்பரப் பொருள்களை ஒருவரே பல முறை வாங்கப் புகுந்தது தான் அனைத்திலும் விசே ஷம். சுத்தியலொன்றை ஒரு பெண்மணி தன் வாழ்க் கையிலேயே ஒரு முறைதான் வாங்கக்கூடும். ஆனுல் அவளே தன் பெண்ணுக்காகச் சிவப்பு நாடாவை ஒரு வாரமும், நீல நாடாவை அடுத்த வாரமும் வாங்கு வாள். அதே மாதிரித்தான் பந்துகளும், கோலிகளும். அடிக்கடி காணுமற்போய் திரும்பத் திரும்ப வாங்கப் பட வகை செய்தன. வருடக் கடைசிக்குள் அப்படிப் பட்ட 'ஆடம்பரப் பண்டங்கள்' விற்பனையே அதிக மாகிவிட்டது. எனவே, புதிய பொருள்கள் குறித்துக் குறியாக இருக்கத் தொடங்கினுர் ஃபிராங்க்.

இப்புதிய வியாபாரத்தில் புதியதொரு கோணத்தை அவர் கவனிக்கச் செய்தார், தம்பி சார் லஸ். அவர்களுடைய லங்காஸ்டர் நகர வாடிக்கை யாளர்களில் பெரும்பாலோர் பாலரே. அதற்கான காரணம் தெளிவாகத் தெரிந்தது. ஒவ்வொருவர் தேவையும் முறையாகக் கவனிக்கப்பட்டது. எவரும் எதையும் வாங்கும்படி வற்புறுத்தப்படவில்லை. ஐந்து சதமே வைத்திருக்கும் கூச்சம் மிக்க குழந்தை, இஷ் டப்படுமளவு அந்தப் பிரிவில் தங்கித் திரிய முடிந்தது. எல்லாப் பண்டங்களும் எடுப்பாக வைக்கப்பட்டிருந்

தன; சந்தேகப்பட்டு விசாரிக்கத் தேவையே இருக்க வில்லை. வாங்கத் தயாரானதும், பெரியவர்களைப் போலவே அவனும் மரியாதையுடன் கவனித்துக் கொள்ளப்பட்டான். வுல்வொர்த் கடையில் பிரமுகர் என்று எந்த வாடிக்கையாளரும் கருதப்படவில்லை. எல்லா வாடிக்கைக்காரர்களும் சமமான முக்கியத் துவம் உடையவர்களே; அனைவரும் சமமாகவே நடத்தப்பட்டனர். லங்காஸ்டர் நகர பாலருக்கு இது மெத்தப் பிடித்திருந்தது; எனவே தங்கள் சில்லறைக் காசுகளை அக்கடையில் செலவிட்டு தங்கள் பிரியத்தை நிரூபித்தனர்.

தம் கடைசிப் பிரயாணத்தை முடித்துக் கொண்டு 1880-ம் வருட இலையுதிர்கால இறுதியில் ஃபிராங்க் திரும்பி வந்தார். வட கிழக்கு பென்ஸில்வேனியாவில் இருந்த நிலக்கரிச் சுரங்கப் பகுதியான ஸ்க்ரான்டனைத் தேர்ந்தெடுத்திருந்தார் அவர்.

அங்கே பென் அவென்யூவில் அவர் பொறுக்கிய இடம், லங்காஸ்டர் கடையைப் போல் இரு மடங்கு பெரிதாக இருந்தது. நீண்ட காலக் குத்தகைப் பத்தி ரம் எழுதிக் கொடுத்ததன் மூலம் அதற்கான வாட கையை அவரால் வெகுவாகக் குறைக்க முடிந்தது.

திறப்பு விழாவுக்காக சார்லஸுடன் அங்கு சென்றபோது, “தோற்றால் திரும்புவதில்லை என்ற திடசங்கல்பத்துடன் செல்கிறோம். வெற்றியோ, தோல்வியோ இரண்டு வருட காலம் நாம் தொடர்ந்து நடத்தியே யாகவேண்டும்” என்று ஃபிராங்க் எச்சரித் தார். “நீ என்ன நினைக்கிறாய், சார்லி? உன்னால் வெற்றியைச் சாதிக்கமுடியுமென எண்ணுகிறாயா?”

“முடியும் என்பதே என் திட நம்பிக்கை” என்று உறுதியுடன் பதிலளித்தார் சார்லஸ். “இந்த ஊர் எனக்குப் பிடித்திருக்கிறது, ஃபிராங்க். இதுகாறும் நான் பார்த்துள்ள எந்த இடத்தையும்விடப் பிடித்

துள்ளது இது. இங்கு நான் வெற்றிபெற இயலு மென்றே எனக்குத் தோன்றுகிறது."

" அவ்வாறு நீ சாதிப்பது தான் உனக்கு நல்லது" என்று தமையனர் பதிலளித்தார். " திடீரெனத் தெரிவித்து உன்னை ஆச்சரியத்தில் ஆழ்த்த வேண்டும் என்பதற்காக ஒரு விஷயத்தை மூடிவைத்திருந்தேன்; அதை இப்போது சொல்லிவிடுவதே நலம்; இந்தக் கடையில் உனக்கும் கூட்டு உண்டு, சார்லி. உனக்கு பாதிப் பங்கு அளிக்கிறேன். உம், பேசாது நான் கூறுவதைக் கேள். இதை நீ உழைத்துத்தான் சம்பாதித்திருக்கிருய். ஹாரிஸ்பர்க்கிலும், யார்க்கிலும் நீ பட்ட சிரமம், எடுத்துக்கொண்ட முயற்சி எனக்குத் தெரியாதா ? மேலும், அந்தச் சங்கடத்தில் உன்னைச் சிக்க வைத்ததற்காக என்னை ஒரு போதும் நீ குறை கூற வில்லை. இங்கோ முற்றிலும் மாருக இருக்கப் போகிறது. முன்பு இல்லாத அநுகூலங்கள் அனைத்தையும் இங்கு காண்பாய். வெற்றியைச் சாதிக்க இயலுமென்று கூறுகிருய். மெத்தச் சரி, அதைச் சாதித்து முடி, பார்க்கலாம், என் கூட்டாளியே !"

# 9

லெங்காஸ்டருக்கு குடிபெயர்ந்தபின் ஆறு வருடங்கள் கழித்து 1885-ல் விடுமுறையைக்கழிப்பதற்காகத் தங்கள் பழைய பண்ணைக்குத் திரும்பி வந்தனர், வுல்வொர்த் குடும்பத்தினர். அங்கு அதற்குமுன் அவர்கள் அபூர்வமாகவே சென்றிருந்தனர் ; அதிக நாள் தங்கியதுமில்லை. வியாபாரத்தில் வெகுவாக ஆழ்ந்திருந்தபடியால் ஃபிராங்க் வுல்வொர்த்திஞல் அடிக்கடி விடுமுறை பெற இயலாமற் போய்விட்டது. ஆகவே, தன் கடைசிப் பேத்தியை அதுவரை ஜான் வுல்

வொர்த் காணுமலே இருந்து வந்தார்; ஹெலெனுவுக்குத் தங்கையான அவள்பெயர் எட்னு.

அவர்கள் அனைவரும் ரயில் வண்டியிலிருந்து இறங்கிய காட்சி, தம் ஸர்ரே வண்டியுடன் காத்திருந்த கிழவனுர் ஜானின் மனத்தை வெகுவாகக் கவர்ந்துவிட்டது. அப்படிப்பட்ட கவர்ச்சிகரமான காட்சியாகத்தான் இருந்தது அதுவும்.

நைல் நதியின் பச்சை வர்ணத்தில் பளபளத்த பட்டாடையைப் புது மோஸ்தரில் அணிந்திருந்தாள் ஜென்னி; புஸ்ஸென்று உப்பியிருந்த அவ்வுடையின் முன்புறத்தில் பால்வர்ணப் பின்னல் துணி, அருவி கொட்டுவதுபோல அசைந்தாடியது. தூக்கி முடித்திருந்த அவளது கேசச் சுருள்களின் உச்சியில் சிறியதொரு இத்தாலிய வைக்கோல் தொப்பி ஒயிலாக அமர்ந்திருந்தது; அதன் பின்புறத்தில் வெல்வெட் துணியினுலான இரு நாடாக்கள் மிதந்தாடின. அவளுடைய இரு கைகளையும் நாஸுக்கான கன்றுத்தோல் கையுறைகள் அலங்கரித்தன. சிறிய வெள்ளைக் குடையொன்றையும் ஏந்திவந்தாள் அவள். ரோஜா வர்ணத்தில் மினுமினுத்த சிறுமிகளும் அவ்வாறே ஸ்விஸ் வெள்ளைப் பின்னல் துணியாலான உடைகளைத் தரித்திருந்தனர். அகலமான நாடாக் கச்சைகளும், பூச்சரங்கள் பொலிந்த சிறு தொப்பிகளும் அவர்களுடைய அழகுக்கு அணி செய்தன.

ஃபிராங்க்வுல்வொர்த்தேகூட நேர்த்தியாக ஆடை உடுத்தும் வியாபாரிக்கு இலக்கணமாக விளங்கினுர். நீண்டிருந்த அவருடைய ஆல்பர்ட் இளவரசர் பாணியிலான கோட்டு, மிக உயர்ந்தரகக் கறுப்புத் துணியால் தயாரிக்கப்பட்டிருந்தது. மார்பகத்தை மூடியிருந்த விரைப்பான சட்டையை ஏராளப் புள்ளிகள் போட்ட ஸாடின் துணியாலான ஆஸ்காட் ரகக் கழுத்துச் சுருக்கொன்று கிட்டத்தட்ட மறைத்திருந்தது.

கஞ்சி போட்டு மொடமொடப்பாயிருந்த கழுத்துப் பட்டி, காதளவு நிமிர்ந்து நின்றது. கீழ்நோக்கி முறுக் கப்பட்ட மீசையைவளமாக வளர்த்திருந்தார் அவர்; அதன் முனைகளைக் கவனமுடன் திருகி விட்டிருந்தார். தலையையோ உயர்ந்திருந்ததொரு டெர்பிக் குல்லாய் அலங்கரித்தது.

அவர்கள் ரயில் வண்டியிலிருந்து இறங்கியதும், அங்கு வேலையற்றுத் திரிந்த சோம்பேரிகள் குழுமி விட்டனர். தாங்கள் எழுப்பிய பரபரப்பு கண்டு ஃபிராங் குக்குத் திருப்தி என்பது தெளிவாகத் தெரிந்தது. அவ்விடத்தில் பரம ஏழையாகக் காலந்தள்ளியவர் அவர். அந்த வுல்வொர்த் பையன் அவ்வளவு தூரம் வாழ்க்கையில் முன்னேறுவானென வாட்டர் டவுன் வாசி எவரும் கனவுகூடக் கண்டதேயில்லை. ஆகவே அவர்கள் நினைப்பு எவ்வளவு தவருனது என்பதைக் காட்டுவதில் அவருக்குத் திருப்தி எற்பட்டதில் வியப் பென்ன ?

தம் மகனின் மனத்தில் ஓடிய எண்ணங்களை ஜான் வுல்வொர்த் ஊகித்துணர்ந்துவிட்டார். "இந்த நகரத் தில் எங்காவது தங்கிச் செல்ல விரும்புகிருயா?" என்று தம் ஸர்ரே வண்டியில் அவர்களை ஏற்றிவிடுகையில் அவர் வினவிஞர். "மூர் கடையிலோ. புஷ்னெல் கடை யிலோ உள்ளவர்களைப் பார்த்துக் குசலம் விசாரிக்க நீ ஆசைப்படக் கூடுமென நினைத்தேன்."

"இன்று வேண்டாம், அப்பா" என்று ஃபிராங்க் பதிலளித்தார். "நாளை இங்கு வந்து பழைய நண்பர் களைத் தேடிப்பிடித்துப் பார்க்கிறேன். வண்டியைச் சதுக்கத்தின் வழியாக ஓட்டுங்கள், போதும். நம் பழைய நகரம் இப்போது எப்படி இருக்கிறது என்ப தைப் பார்க்க விரும்புகிறேன்."

"அப்படியே நீ எப்படிக் காட்சியளிக்கிருய் என் பதை இந்நகரவாசிகள் காணச் சந்தர்ப்பம் அளிக்க

வேண்டும் என்பது உன் ஆசை போலிருக்கிறது" என்று கூறிச் சிரித்தார் கிழவனார். "சரி, ஃபிராங்கி, உன் இஷ்டம் போலவே செய்வோம் பிற்பாடு நிறைய அவகாசம் இருக்கும். ஆனால் நாளை நீ இங்கு வருவதற்கு இயலாது. குடும்பம் முழுவதும் மீண்டும் சந்திப்பதைக் கொண்டாட நம் அனைவரையும் நாளை தம் வீட்டுக்கு அழைத்திருக்கிறார், உன் மாமன் ஆல்பன்."

"ஓ, அப்படியா ?" என்று சிரித்தார் ஃபிராங்க். "நான் என் முதல் கடையைத் தொடங்க விரும்பிய போது அவரிடம் சிறிய தொகை கடன் கோரினேன்; அப்போது என்னைப் பார்க்கவே அவர் அவ்வளவாக இஷ்டப்படவில்லையே !"

"இதோ பார், ஃபிராங்கி, அதையெல்லாம் எண்ணி அவரிடம் விரோதம் பாராட்டாதே!" என்று கண்டித்தார் தந்தை. "இப்போதெல்லாம் உன்னைப்பற்றி அவருக்கு மிகப் பெருமை. தன் மகனான எட்வினை உன்னுடன் சேர்த்துவிடவே இப்போது அவருக்கு உத்தேசமென நினைக்கிறேன். அதைப் பற்றி உன் கருத்து என்ன ?"

" எட்வினால் கொஞ்சம் பணம் போட முடியும் என்றால் எனக்குச் சம்மதமே. ஏற்கெனவேயே ட்ரென்டன் கடையில் ஆனி நாக்ஸ் அத்தையின் மகனான ஸீமூருக்கு இடமளித்திருக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியும். எல்லாக் கடைகளையும் என்னால் தனித்து நடத்திவிட முடியாது. எனக்கு நிர்வாகிகள் தேவை. அவர்கள் மூலதனமும் சிறிது இருக்குமானால் அந்த அளவுக்குக் கடையில் இன்னும் கடுமையாக உழைப்பர். ஸீமூரைப்போலவே எட்வினும் நன்கு வேலை செய்வான் என்றே நினைக்கிறேன். ஆல்பன் மாமாவுடன் அதுபற்றிப் பேசுகிறேன்."

"அப்படியே செய். அது இருக்கட்டும், இப்போது

உனக்கு மொத்தம் எவ்வளவு கடைகள் இருக்கின்றன, மகனே ?"

"நான்கு" என்று ஃபிராங்க் பதிலளித்தார். 'ஸ்க்ராண்டனில் உள்ள கடையைக் கணக்கில் சேர்க்காமலேயே சொல்கிறேன். அதில் என்னுடைய பாதிப் பங்கை தான் வாங்கிவிட்டதாக சார்லி உங்களுக்கு எழுதினன், இல்லையா? அதை வாங்குமளவுக்கு முதல் வருஷத்திலேயே அவனுக்கு லாபம் கிடைத்துவிட்டது. மேலும், அந்த நகரமும் அவனுக்குப் பிடித்திருக்கிறது, அங்கிருந்து இனி ஒருநாளும்தான் கிளம்பப் போவதில்லை என்கிருன் "

"ஆம், அவ்வூரின் பேரில் ஒரே மோகம் சார்லிக்கு. அங்கு ஒரு முறை வந்துபோகுமாறு என்னையும் உன் சிற்றன்னையையும் அவன் அழைத்திருக்கிருன். ஆனல் நான் போவது சந்தேகமே. பண்ணையை விட்டுக் கிளம்ப எனக்குப் பிடிப்பதேயில்லை...ஆமாம், லங்காஸ்டர் தவிர வேறு எங்கெந்த இடங்களில் உன் கடைகள் உள்ளனவென்று சொன்னுய்?"

"பென்ஸில்வேனியாவிலுள்ள ரீடிங்கில் ஒரு கடை இருக்கிறது. ஹாரிஸ்பர்க்கில் புதிதாகப் பெரிய கடையொன்று திறந்திருக்கிறேன். நியூஜெர்ஸியைச்சேர்ந்த ட்ரெண்டனில் இன்னொன்று உள்ளது. ஆனல் இவையெல்லாம் வெறும் ஆரம்பம்தான், அப்பா. அடுத்த வருடம்—"

திடீரெனத் தம் பேச்சை நிறுத்திக்கொண்டார் அவர். பின்னல் உட்கார்ந்திருந்த ஜென்னி தன் குடையினல் அவரைச் சுருக்கெனக் குத்தியதே அதற்குக் காரணம்.

"எப்போதும் கடைபற்றித்தானு பேச்சு !" என்று அவள் கடிந்துகொண்டாள். "விடுமுறைக்காக நாம் இப்போது வந்திருக்கிறோம், நினைவிருக்கட்டும். பார்த்தீர்களா, குழந்தைகளே, இதோ கிரேட் பெண்டினுள்

நாம் நுழைந்து கொண்டிருக்கிறோம். அந்தப் பள்ளிக் கூடத்தில்தான் உங்கள் அப்பா படித்தார். அதோ அந்த மெதடிஸ்ட் ஆலயத்தில்தான் அவர் கான கோஷ்டியில் சேர்ந்து பாடினர். அதைப்பற்றி யெல் லாம் உங்களுடைய புதல்விகளுக்குச் சொல்லுங்கள், ஃபிராங்க்.''

அந்தச் சிறுமிகள் கலகலவென்று நகைத்தனர். ஏனெனில், இசையில் அவர்களுடைய தந்தைக்குப் பிரியம் உண்டெனினும் எந்தப் பாட்டும் அவர் நினை வில் நிலைக்காது என்பது எல்லோரும் அறிந்த விஷயம். அவருக்கே அது நன்கு தெரியும். ஈஸ்டர் துதிப் பாட லைப் பாடுகையில் கானகோஷ்டியைத்தாம் பிசகு புரிய வைத்த வேடிக்கையான விவரத்தை உடனே கூறலா ஞர் அவர்.

ஆல்பன் மாமனின் வீட்டில் நடந்த குடும்ப மறு சந்திப்புக் கொண்டாட்டம் இரண்டு தினங்கள் நீடித் தது. அருகிலும் தொலைவிலும் இருந்த உறவினர் அனைவரும் அதில் கலந்து கொண்டனர். ஆகவே, வாட்டர் டவுனுக்குத் தம் வண்டியில் தனியாக விஜ யம் செய்ய வாரக் கடைசியில்தான் ஃபிராங்குக்கு அவகாசம் கிடைத்தது.

நீதிமன்றத்தைச் சுற்றியுள்ள வேலியில் தம் குதிரையை அவர் கட்டிக்கொண்டிருந்தபோது நேசக் குரலொன்று தம்மை அழைப்பது அவர் காதில் விழுந் தது. அங்கே மரத்தடியில் இருந்த பெஞ்சியொன்றில், மூலைக் கடையில் அவரது முதல் சிநேகிதையாகிய ஸ்ரீமதி கூன்ஸ் உட்கார்ந்திருந்தாள். குலுக்குவதற்குக் கையை நீட்டிய வண்ணம் அவளை நோக்கி அவர் விரைந்தார்.

“சாப்பாட்டு நேரத்தில் மீதிப் பொழுதைப் போக்குவதற்காக இந்த மரநிழலில் வந்து உட்கார்ந் தேன்'' என்றாள் அவள். “சற்று இங்கே அமர்ந்து

பேசுங்கள், ஃபிராங்க், அப்புறம் என்னோடு நீங்கள் கடைக்கு வருவீர்களென எதிர்பார்க்கிறேன். மூரைச் சந்திக்க நீங்கள் விரும்புகிறீர்கள், இல்லையா ?"

"ஆமாம், மிகவும் விரும்புகிறேன்" என்று ஃபிராங்க பதிலளித்தார். "அவர் இப்போது எப்படி இருக்கிறார், ஸ்ரீமதி கூன்ஸ்? சமீபத்தில் அவ்வளவு சௌக்கியமாக அவர் காணப்படவில்லை என்று என் தந்தை சொன்னாரே ?"

"உடல் நலத்துக்கு ஒன்றும் குறைவில்லை, மனக் கவலைதான் மிக அதிகம். கடை வெகு வேகமாகச் சரிந்து வருகிறது; ஃபிராங்க். ஸ்மித் பிரித்துக் கொண்டு வெளியேறி மேற்கே போய்விட்டார் என்பதைக் கேள்விப்பட்டீர்கள் அல்லவா ? எங்களுடையதைப் போன்ற கடையினால் இனி வாட்டர்டவுனில் தரிக்க முடியாது என்கிறார் அவர். ஆயினும் எப்படியோஅதைத் தொடர்ந்து நடத்த மூர் போராடுகிறார். இதைச் சொல்ல எனக்கு மனமில்லைதான், ஃபிராங்க். ஆனாலும் வாட்டர்டவுனில் எல்லோருக்கும் தெரிந்த விஷயம் இது: எந்த நிமிஷத்திலும் மூலைக்கடை திவாலாகிவிடக் கூடும். என்ன, இப்போது நிலவரம் தெரிந்துவிட்டதா ?"

"தெரிந்து விட்டது" என்று ஃபிராங்க் திரும்பச் சொன்னார். "அவருக்குச் சந்தர்ப்பம் சரியாக இல்லை என்று கேள்விப்பட்டேன். ஆனால் இவ்வளவு மோசமாக இருக்கும் என்பது தெரியாது. என்னால் அவருக்கு உதவமுடியாதா என்று ஏங்குகிறேன். என்னிடம் மட்டும் உபரியாகக் கொஞ்சம் பணம் இருக்குமானால் ?—ஆனால் ஏதும் இல்லையே, என்ன செய்வேன் ? புதிதாக இன்னும் சில கடைகளைத் திறக்க உத்தேசித்திருக்கிறேன். அவற்றுக்கு நான் அனுப்பச் சொல்லியுள்ள பண்டங்கள், நான் திரட்டக்கூடிய பணம் முழுவதையும் உறிஞ்சிவிடும். இருப்பினும்—"

சிறிதுநேரம் மௌனமாகச் சிந்தனை வசப்பட்டிருந்தார் அவர்.

அப்போது அவரது கரத்தை மெல்லப் பிடித்தாள் ஸ்ரீமதி கூன்ஸ். "அதைப்பற்றிக் கலங்காதீர்கள், ஃபிராங்க். உங்களால் முடிந்தால் கட்டாயம் உதவி செய்வீர்கள். அது எங்கள் எல்லோருக்கும் தெரியும். அது சரி, இப்போது உங்கள் குடும்பத்தைப் பற்றிச் சொல்லுங்கள். நீங்கள் இங்கு வந்த நாளன்று ஜென்னியையும் உங்கள் குழந்தைகளையும் ஒரு கணம் பார்க்க எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. எப்போது என்னைப் பார்க்க அவர்களை அழைத்து வரப் போகிறீர்கள் ?"

நீதிமன்றக் கடிகாரம் ஒரு மணி அடிக்கும் வரையில் அவர்கள் பேசிக்கொண்டிருந்தனர். பின்னர், வேலைக்குத் திரும்புவதற்காக ஸ்ரீமதி கூன்ஸ் எழுந்தாள். அவளோடு ஃபிராங்கும் புறப்பட்டு, சதுக்கத்தைக் கடந்தார்.

கடையின் பிற்பகுதியில் இருந்த பழைய காரியாலய அறையிலேயே இன்னமும் மூர் இருக்கக் கண்டார் அவர். உடல் ஒடுங்கி நலிந்தவராக மூர் காணப்பட்டார். அப்போது அவருக்கு நடுத்தர வயது தானெனினும் அதற்குள்ளாகவே கிழவனைப்போல் கூனல் விழுந்துவிட்டது. ஆயினும் ஃபிராங்கைப் பார்த்ததும் அவரது முகம் பிரகாசம் அடைந்தது.

"உட்கார், ஃபிராங்க், உட்கார். என்னைப் பார்க்க எப்போது வரப்போகிறாய் என்று காத்துக்கொண்டிருந்தேன். உம், செல்வச் செழிப்பு உடையவனாகத்தான் நீ தோற்றமளிக்கிறாய்."

"எல்லாம் வெறும் வெளிப்பகட்டுதான், மிஸ்டர் மூர்" என்று சிரித்தவாறு ஃபிராங்க் கூறினார். "எப்போதுமே அதில் நான் மிகுந்த கெட்டிக்காரன் என்பதுதான் உங்களுக்குத் தெரியுமே! கடன் தேவை

யற்றவன் போலத் தென்பட்டால்தான் சுலுவாகக் கடன் கிடைக்கும் என்பதை நீங்கள்தானே எனக்குச் சொன்னீர்கள் ? பண்டத் தயாரிப்பாளர்களைப் பார்க்கப்போகும்போது அதை நான் மறப்பதேயில்லை. உங்களிடமிருந்து நான் எவ்வளவோ கற்றுக்கொண்டிருக்கிறேன், ஐயா.''

''நீ அப்படிக் கூறுவது உன் நல்ல மனத்தைத் தான் காட்டுகிறது. ஆனால் நான் அறிந்துள்ளவை அனைத்தும் வழக்கொழிந்தவை என்றே எண்ணுகிறேன், ஃபிராங்க்'' என்று ஆயாசத்துடன் கூறினார் மூர். ''எப்படியும் அந்த ஞானத்தினால் எனக்கு இப்போது பயனேதும் காணோம்.''

ஃபிராங்க் தயங்கினார். எப்போதுமே தன்மான உணர்ச்சி மிகுந்தவராக இருந்துவந்திருந்தவர் மூர். ஆகவே முன்பு தன் சிப்பந்தியாக இருந்த தம்மிடம் தன் தோல்வியை ஒப்புக்கொள்ள நேர்வது அவர் மனத்தைப் புண்படுத்தும் என்பதை உணர்ந்தார். வார்த்தைகளாக அந்த மனக்கசப்பு வெளிவருமுன் விரைந்து குறுக்கிட்டார். ''நான் ஒரு யோசனைகூறப் போகிறேன், மிஸ்டர் மூர்'' என்றார், சடுதியில். ''நீங்கள் விரும்பினால் அதை நிராகரித்துவிடலாம். ஆனால் அதை நீங்கள் சிந்தித்துப் பார்க்கவாவது வேண்டும் என்பதே என் அவா...... உங்கள் மூலைக்கடையை ஐந்து சத—பத்து சதப் பண்டக்கடையாக மாற்றினால் என்ன ? சற்றுப் பொறுமையோடு நீங்கள் கேட்க வேண்டும்...உயர்தரப் பொருள்களை மட்டுமே விற்குமிடமாக உங்கள் கடையை நடத்துவதில் நீங்கள் பெருமை கண்டவர் என்பதை நான் அறிவேன். ஆனால் நீங்கள் அறிவுறுத்தும் பட்சத்தில் மலிவு விலைப் பண்டங்களைக் கூடத் தரமானவையாகத் தரலாம். அப்படித்தான் நான் செய்கிறேன். நீங்கள் விற்கும் லியான்ஸ் வெல்வெட் துணியைப் போலவே

பத்து சதத்துக்கு நான் விற்கும் முட்டை மத்தும் சரி யான மதிப்புடையதே ஆகும். உங்களால் இதை நம்ப முடியவில்லை அல்லவா ?''

''நம்பாமல் என்ன ? நல்ல முட்டை மத்துக்கு பத்து சதம் நல்ல விலைதான். ஆனால் நான் ஒருபோ தும் இரும்புச் சாமான்களை விற்றதே கிடையாது என்பது தான் உனக்குத் தெரியுமே !''

''தெரியும் தான். ஆயினும் அதனதன் ரகத்தில் நல்ல பண்டம் எதுவும் தரமானதேயாகும் என்பதைத் தான் உங்களுக்கு விளக்க முயற்சி செய்கிறேன். தயா ரிப்பதற்கு நிறையச் செலவு ஆனதாலேயே உயர்விலை நிர்ணயிக்கப்பட்டவையான உயர்தரப் பண்டங்க ளையே நீங்கள் எப்போதும் விற்றுவந்திருக்கிறீர்கள். இப்போது அடக்கச் செலவு அதிகமாகாத நல்ல சாமான்களை நீங்கள் விற்கத் தொடங்கும் பட்சத்தில் —தரமான பண்டங்களையேதான் தொடர்ந்து விற்ப வர் ஆவீர்கள், இல்லையா ? அதனால் உங்கள் உயர் நிலையிலிருந்து நீங்கள் இறங்கியவராக மாட்டீர்கள், மிஸ்டர் மூர். அதே தரமான பண்ட விற்பனையைத் தான் தொடர்ந்து செய்வீர்கள்; புதிய துறையில் அந்த வியாபாரம் நடக்கும் என்பதுதான் வித்தியாச மாக இருக்கும்.''

குழம்பியவராகக் காணப்பட்டார் மூர். ''அதை அந்த நோக்கிலிருந்து நான் ஒருபோதும் ஆராயப் புகுந்ததில்லை; ஃபிராங்க். ஆயினும் நீ சொல்வது சரி தான். சரி, நீ இப்போது என்ன செய்யவேண்டும் என்று விரும்புகிறாய் ? இந்த மூலைக்கடையை வாங்கி, ஐந்து சத—பத்து சதக் கடையாக மாற்ற வேண்டும் என்பதைத் தானே ?''

''நானல்ல, நீங்கள் தான் அவ்விதம் செய்யவேண் டுமென ஆசைப்படுகிறேன். ஒன்றுமே எனக்கு வேண் டாம், லாபத்தில் கூட எனக்குப் பங்கு தேவையில்லை

மூரின் ஐந்து சத—பத்து சதக் கடையாகத்தான் இது இருக்குமே தவிர, வுல்வொர்த் கடையாக இராது. இப்போதுள்ள நிலையில் வாட்டர்டவுன் அதற்கு சாலச் சிறந்தது.உங்களிடம் ஏற்கெனவேயே கட்டிடம் இருக்கிறது, நிறைந்த நற்பெயரும் உண்டு. இப்போது கையிருப்பிலுள்ள பண்டங்களை விற்றுவிட்டு, ஐந்து சதமும் பத்து சதமுமே விலையுடைய நல்ல பொருள்களை வைத்து முற்றிலும் புதிய கடை தொடங்குவது உங்களுக்குச் சுளுவாகவே இருக்கும்."

ஏதோ சொல்ல மூர் வாயெடுத்தார். ஆனால் அதற்கு இடங்கொடாமல் ஃபிராங்க் வேகமாகத் தொடர்ந்தார்: "அந்த ஐந்து சத—பத்து சதப் பண்டங்களை எங்கே வாங்குவது என்றுதானே கேட்கப் போகிறீர்கள்? ஏன், என்னிடம்தான் வாங்குங்களேன், மிஸ்டர் மூர். உங்களுக்குத் தேவையானவை அனைத்தையும் என்னால் தரவியலும். அவற்றுக்கு எவ்வளவு நாள் கழித்து வேண்டுமாயினும் நீங்கள் பணம் கொடுக்கலாம்."

இவ்வாறு கூறி முடித்தபின் பதிலை எதிர்பார்த்து ஃபிராங்க் காத்திருந்தார். ஆனால் அந்த பதில் வருவதாயில்லை. எனவே, ஒரு நிமிஷம் கழித்துக் கூச்சப் பட்டவாறு கூறினார்: "உங்களுக்கு இந்த ஏற்பாடு பிடிக்காமல் இருந்தாலும் இருக்கலாம். என்னிடம் உபரியாகப் பணம் இருக்குமானால் நான் கூறும் ஏற்பாடு வேறு விதமாக இருக்கும். ஆனால் நானோ பல பண்டங்களை வாங்குவதற்கான ஒப்பந்தங்களில் சிக்கிக்கொண்டிருக்கிறேன். ஆகவே—"

"எனக்கு நன்றாகத் தெரிகிறது" என்று மெதுவாகப் பேசத் தொடங்கினார் மூர். "அதாவது, நான் புதிய தொழில் தொடங்க நீ எனக்கு உதார் கொடுக்க முன் வருகிறாய். சுருக்கமாக அதுதான் நீ கூறுவது இல்லையா?"

'ஆம்' என்று ஃபிராங்க் தலையாட்டினார். "நீங்கள் எனக்குச் செய்த உபகாரத்தை நான் உங்களுக்குத் திருப்பிச் செலுத்த நீங்கள் அனுமதிக்க வேண்டும் என்பதே என் ஆசை. உங்களுக்கு மட்டும் என்னிடம் நம்பிக்கை இல்லாதிருக்குமானால் நான் தலையெடுத்தே இருக்கமுடியாது. இப்போது என் முறை. இது நீங்கள் எதிர்பார்த்தேயிராத ஏற்பாடு என்பதை நானறிவேன். சிறிதாவது ஆலோசியாமல் இதை நீங்கள் நிராகரித்துவிடக் கூடாது என்பதே நான் வேண்டுவது. அப்படிச் செய்துவிட மாட்டீர்களே ?"

கடையை நோட்டம் விட்டார் மூர். நடைபாதைகளெல்லாம் காலியாகக் கிடந்தன. வேலையற்றிருந்த சிப்பந்திகள் மேஜைகளுக்குப்பின் கொட்டாவி விட்டுக் கொண்டிருந்தார்கள். ஏற்கெனவேயே படுத்திருந்த வியாபாரம் மேன்மேலும் மோசமாகிக் கொண்டிருந்தது. அவருடைய மாஜிச் சிப்பந்தியான ஃபிராங்க் பரிவு மிக்கவராதலால் அதையெல்லாம் சுட்டிக் காட்டவில்லையாயினும் அவருக்குக் கண் இல்லையா என்ன ? பழைய ரீதியில் மூலைக்கடை வெகுநாள் நீடிக்க முடியாது என்பது அவருக்குப் புலனாகித்தான் இருக்க வேண்டும். எனவேதான் பரிவுடனும் மரியாதையுடனும் இங்கிதமான முறையிலும் ஒரு மார்க்கத்தைக் காட்டுகிறார் என்பதை மூர் உணர்ந்து கொண்டார்.

அந்த கட்டத்தில் தம் இருக்கையை விட்டு ஃபிராங்க் எழுந்தார். "இன்னும் சிலதினங்களுக்கு எங்கள் பண்ணையில் தங்கியிருப்பேன், மிஸ்டர் மூர். நீங்கள் ஒரு முடிவு செய்தானதும் எனக்குத் தெரியப்படுத்துவீர்கள் அல்லவா ?"

அவரோடு மூரும் எழுந்தார். சரிந்திருந்த அவரது தோள்கள் நிமிர்ந்தன. அவரது முகத்தில் கோடிட்டிருந்த களைப்பைக் களைந்தது வழக்கமற்றதொரு புன்னகை. இப்போதே "அதை முடிவு கட்டிவிடலா

மென நினைக்கிறேன். ஆனால் எதில் நீ என்னை ஈடுபடுத்தப்போகிறாயோ அதைநானறியேன். வியாபாரம்பற்றி நான் உனக்கு ஏதோ சொல்லிக் கொடுத்ததாகக் கூறினாய். இந்தத் துறைபற்றி நீ தான் எனக்குக் கற்றுக் கொடுத்தாக வேண்டும். அதை மட்டும் நீ செய்தால், உன்னுடைய ஆலோசனையும் புத்திமதியும் எனக்குக் கிடைக்குமானால்—" நெடு மூச்சு விட்டுத் தொடர்ந்தார் அவர். "நீ கூறும் ஏற்பாட்டை நான் நன்றியுடன் ஏற்கத் தயார்."

"நீங்கள் எனக்கு நன்றியேதும் செலுத்த அவசியமே இல்லையே!" என்று ஃபிராங்க் ஆட்சேபித்தார். "நீங்கள் எனக்குச் செய்திருப்பதற்குச் சமமே ஆகாது, நான் உங்களுக்குச் செய்யப் போகும் உதவி. ஐந்து சத, பத்து சதப் பண்டங்கள் விலையாகக்கூடும் என்பதை நீங்கள் அறிந்திருக்கவில்லை. அதை அனுபவத்தினால் அறிந்திருப்பவன் நான், அவ்வளவே. இந்த முடிவு செய்ததற்காக நீங்கள் ஒருநாளும் வருந்தமாட்டீர்கள், மிஸ்டர் மூர்."

அவ்வாறு வருந்த வில்லியம் மூருக்கு ஒரு போதும் சந்தர்ப்பம் நேரவில்லை. திருத்தியமைக்கப்பட்ட மூலைக் கடை தொடக்கத்திலிருந்தே வெற்றி தந்தது; பிரம்மாண்ட வுல்வொர்த் சங்கிலித் தொடர் ஸ்தாபனத்துடன் இணைக்கப்படுமளவு முற்றிலும் அவருடைய கடையாகவே பல வருடங்களுக்கு அது நீடித்தது. ஃபிராங்க் கூறிய ஏற்பாட்டின்படிப் பெறப்பட்ட பண்டங்கள் அவரைப் பணக்காரராக்கின. வியாபாரத்திலிருந்து விலகியபின் தன் ஓய்வுக்காலத்தை வாட்டர்டவுனில் செல்வமும் மரியாதையும் மிக்க பிரஜைகளில் ஒருவராக அவர் கழித்தார்—அவருடைய 'உயர்தர'க் கொள்கைக்கு ஒருகாலும் இழுக்கு நேரவில்லை.

# 10

ஃபிராங்க் வுல்வொர்த்துடன் தொடர்புகொண்டதன் பயனாகப் பெருலாபம் அடைந்த பல ஆரம்ப காலக் கூட்டாளிகளில் ஒருவரே மூர். சங்கலித்தொடர் படரப்படர, தாம் நம்பக்கூடிய நிர்வாகிகளாகப் பெற நண்பர்களைச் சலித்தெடுத்தார் ஃபிராங்க். அவரது நம்பிக்கையைப் பெற்றவர்கள் பின்னர் ஸ்தாபனத்திலும் பங்குகளைப் பரிசாகப் பெற்றார்கள். ஒரு சிலர் அப்பரீட்சையில் தேறவில்லை. தேறியவர்களோ, தாங்கள் கனவு கூடக் கண்டிருக்கமுடியாத வளமையை எய்தினார்கள்.

அவர்களில், ஃபிராங்கின் தம்பியான சார்லி ஒருவர்; அத்தை மகன் ஸீமூர் நாக்ஸ் இன்னொருவர்; ஆல்பன் மாமனின் மகனான எட்வின் மற்றொருவர். புஷ்னெல் கடையில் ஃபிராங்கின் நிலவரைச் சகாவாக இருந்த ஹாரி மூடி, மூலைக்கடைத் தோழியான ஸ்ரீமதி கூன்ஸ்—இந்தப் பழைய சகாக்களுக்கு அந்தப் பெரும் ஸ்தாபனத்தில் தகுந்த இடங்கள் கிடைத்தன. வியாபாரம் வெகுவாக விஸ்தரிக்கவும், புஷ்னெல் கடையில் தம் ஸ்தாபனத்தைப் பெற்ற கார்ஸன் ஸி. பெக்கை உறுதுணையாகக் கொண்டார் ஃபிராங் வுல்வொர்த்.

முதலில் தோல்வி தந்த யூடிகாவில் புதிதாகத் திறக்கப்பட்ட கிளையை வெற்றிகரமாக்கியதன் மூலம் ஃபிராங்கின் பிரியத்தைப் பெற்றார் பெக். பண்டங்களைக் கொள்முதல் செய்ய நியூயார்க்கில் காரியாலயமொன்றைத் திறக்க நேர்ந்தபோது அங்கே தம் உதவியாளராக பெக்கை ஃபிராங்க் அமர்த்தினார். அவருடைய யோசனையின் பேரில் தான் வுல்வொர்த் கடைகளில் மிட்டாய்கள் விற்பனை ஆரம்பித்தது—பின்னர் அனைத்திலும் அதிக வியாபாரம் நடந்த துறைகளில் ஒன்றாகியது அது. புதிய திட்டமெதையும் பற்றி

முதன் முதலில் அவருடன்தான் ஃபிராங்க் கலந்து பேசலானார்.

"ஐரோப்பாவுக்குப் போய்வர உத்தேசிக்கிறேன்" என்று ஒரு நாள் பெக்கிடம் அவர் கூறினார். "திரும்பி வர இரண்டு மாதமாகும். அதுவரை உங்களால் இங்கு கடைகளை நிர்வகிக்க இயலுமா ?"

நம்பிக்கையோடு தலையாட்டினார் பெக். "சாமான்கள் வாங்குவதற்குத்தானே செல்கிறீர்கள்? அயல்நாட்டுப் பண்ட உற்பத்தியாளர்களுடன் நேரிடையாகவே வியாபாரம் செய்ய விரும்புவதாகத்தான் நீங்கள் எப்போதுமே கூறிவந்திருக்கிறீர்களே ! அது நல்ல யோசனைதான். ஆமாம், என்னென்ன வாங்குவதாக உத்தேசம் ?"

"விளையாட்டுப் பொருள்களை நிச்சயமாக வாங்கப் போகிறேன். அவற்றில் நல்ல ரகங்கள் அனைத்தும் ஜெர்மனியில்தான் தயாராகின்றன. அடக்கவிலையோடு இறக்குமதியாளர்கள் தங்கள் லாபத்தைச் சேர்த்துவிடுவதால் அவை நமக்குக் கட்டுபடியாகாமற் போய்விடுகின்றன. சில நல்ல விளையாட்டுப் பண்டங்களை மட்டும் நான் பெற முடியுமானால் ?—விளையாடுவதற்கான சின்னஞ்சிறிய தேநீர்க் கோப்பைகளையும் வாங்கப் போகிறேன் !"

பெக் சிரித்தார். "உங்களுக்குப் பிறந்திருப்பது பெண் குழந்தையாதலால் சிறுமிகளைப்பற்றியே தான் எப்போதும் நினைக்கிறீர்கள் ! மற்றும் பலருக்கு ஆண் குழந்தைகளும் உண்டு என்பதை மறந்துவிட்டீர்களே !"

"பையன்களுக்கு வேண்டிய பண்டங்களையும் வாங்கிவருவேன், கவலைப்படாதீர். எல்லாக் குழந்தைகளுக்குமான கிறிஸ்துமஸ் மர ஜோடனைப் பொருள்களையும் கொள்முதல் செய்வேன். அப்புறம், அவர்களுடைய தாய்மாருக்குத் தேவையான கண்ணாடிப் பாத்

திரங்கள், தகப்பன்மாருக்கு அவசியமான நிஜார் நாடாக்கள்—இவை போல இன்னும் எவ்வளவோ பொருள்கள் இருக்கின்றன. அங்கே உள்ளவற்றை யெல்லாம் பார்த்துப் பரிசீலித்து, முடிந்தவற்றை வாங்கப் போகிறேன். ஆனால் எனக்கு அங்கு புழங்கும் மொழி தெரியாததலால் எப்படிப் பேரம் செய்யப் போகிறேனே, அதுதான் விளங்கவில்லை.''

''அதைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம்; நிச்சயம் நன்ருகப் பேரம் செய்வீர்கள். சாமான்களை வாங்கவே அங்கு நீங்கள் செல்கிறீர்கள். எந்த பாஷையாயினும் பணம் பேசும்'' என்று பெக் அவருக்கு உறுதி கூறினர்.

1890-ல் இங்கிலாந்து, ஃபிரான்ஸ், ஜெர்மனி, ஆஸ்திரியா ஆகிய நாடுகளில் நான்கு மாதகாலம் ஃபிராங்க் கழித்தார். முற்றிலும் வியாபாரம் மட்டுமே நோக்கமாகவுடைய சுற்றுப் பிரயாணமல்ல அது. பல இடங்களையும் காட்சிகளையும் கண்டு களிக்கவும் சிறிது பொழுதைச் செலவிட்டார். குறிப்பாக, தமது பாலப் பருவ ஆதர்சபுருஷரான நெப்போலியன் போனபார்ட் சம்பந்தப்பட்ட ஸ்தலங்களைச் சுற்றிப் பார்த்தார். அத்தகைய ஓய்வு வேளைகளில் அவற்றை அனுபவித்து மகிழத் தம்முடன் ஜென்னியும் குழந்தைகளும் இல்லையேயென அவர் வருந்தினர். அதை ஈடுசெய்யப் பிற்காலத்தில் பலமுறை தம் குடும்பத்தினரை ஐரோப்பாவுக்கு அழைத்துச் சென்று ஆனந்தமாகச் சுற்றுப் பிரயாணங்கள் செய்தார்.

ஆனல் அவருடைய அந்த முதலாவது ஐரோப்பிய விஜயத்தில் ஆனந்தப் பொழுதுபோக்குக்கு அதிக அவகாசம் இருக்கவில்லை. ஏனெனில், ஒவ்வொரு உற்பத்திஸ்தலமாக அவர் சென்று பார்க்க நேர்ந்தது. கையில் ரொக்கம் இருந்தபடியால் நிறைய லாபம் தரக்கூடிய வகையில் பேரங்களை முடிப்பது அவருக்

குச் சுளுவாக இருந்தது. ஏராளப் பணத்தைச் செல விட்டுப் பல ஆண்டுகளுக்கு முன்கூட்டியே ஒப்பந்தங் கள் செய்து கொண்டார்.

குழந்தைகளுக்கு விலையுயர்ந்த விளையாட்டுச் சாமான்களுடனும், ஜென்னிக்குப் பாரிஸ் நகரப் பட்டா டைகளுடனும் அவர் ஊர் திரும்பினார். பரபரப்பூட்டும் எத்தனையெத்தனையோ புதுப் புது யோசனைகள் நிறைந்தவராயும், பணத்தையெல்லாம் பல்வேறுபுதுப் பண்டங்களில் முடக்கியவராயும் அவர் வீட்டுக்கு வந் தார்.

" நம் கடைகளுக்கெல்லாம் கண்டு மிஞ்சுமளவு ஏராளப் பண்டங்கள் வர நான் ஏற்பாடு செய்து விட் டதுதான் ஒரே பிரச்னை' என்று பெக்கினிடம் அவர் கூறினார். " ஆயினும் அதற்கும் வகை செய்துவிடத் தான் போகிறேன். நினைத்தால் வேடிக்கையாக இருக் கிறது. சொந்தத்தில் ஒரேயொரு கடை இருந்தால் போதுமென முன்பெல்லாம் நான் நினைத்தேன். இப் போதோ இருபது கடைகள் இருந்தபோதிலும் எனக் குத் திருப்தியில்லை. எதற்காக இருபதோடு நான் நிறுத்திக் கொள்ள வேண்டும்? இப்போது எனக்கு இருக்கும் உற்சாகத்தில் நூறு ஊர்களிலும் நகரங்களி லுமாவது வுல்வொர்த் கடைகளை நிறுவிவிட்டுத்தான் நிறுத்துவேன் போல் தோன்றுகிறது. "

" நூறு ஊர்களிலும் நகரங்களிலும் " என்று அவர் அன்று கூறினார். அவர் குறிப்பிட்ட 'நகரங் களிலும்' என்ற அந்தக் கடைசிப் பதம் பெக்கைப் பிர மிக்க வைத்தது. ஏனெனில் அதுகாறும் பெரிய பட்ட ணங்களை ஜாக்கிரதையாகத் தவிர்த்து வந்தார் ஃபிராங்க். அதற்கு அவருக்குத் தகுந்த காரணங்கள்; இருந்ததோ இல்லையோ, அவ்வாறே அவர்நினைத்தார். நகரங்களில் நிலவும் உயர் வாடகைகள், சம்பள விகி தங்கள், போட்டா போட்டி முதலிய சிரமங்களெல்

லாம் அவரைத் தயங்க வைத்தன. ஆனால் அந்த முதல் ஐரோப்பிய விஜயத்தையடுத்து அந்தத் தயக்கம் முழுவதும் தீர்ந்துவிட்டது.

" ஆம், நகரங்களிலும் என்றுதான் சொன்னேன்" பெக்கின் பிரமிப்பைக் கண்டு மகிழ்ந்தவராய் ஃபிராங்க் திரும்பக் கூறினார். " பெரிய நகரங்களில் அந்நியர்கள் அதிகம், பெக். இப்போது நானும்கூட அயல் நாட்டானின் உணர்ச்சியுடனேயே திரும்பி வந்துள்ளேன். அந்த உணர்வு எப்படிப்பட்டது என்பதை நன்கறிந்திருக்கிறேன். பாரிஸில் க்ஷவர ஸோப்பை வாங்க நான் முயற்சி செய்ததை நீங்கள் பார்த்திருக்க வேண்டுமே! என்னை ஏதோ மடையன் போல அந்தக் கடைச் சிப்பந்தி நினைத்து நடந்தான்; உண்மையில் நானும் மடத்தனமாக நடப்பதாகவே நினைத்தேன். ஃபிரெஞ்சு மொழியில் அதற்கு என்ன பெயர் என்பது எனக்கு எப்படித் தெரியும்? இப்போது வுல்வொர்த் கடையொன்றில் நுழைவேனுயின் அந்தப் பெயர் தெரிந்திருப்பது அவசியமேயில்லை; மேஜையிலிருந்த அதை எடுத்துக் காட்டினால் போதும். நான் சொல்வது புரிகிறதல்லவா?"

" புரிகிறது! அபாரமான யோசனைதான் அது!" என்று பரபரப்புடன் கூவினார் பெக். " ஏன் முன்னமேயே நாம் அதைச் சிந்தியாதிருந்தோமோ, அது தான் எனக்கு விளங்கவில்லை."

' ஏன் முன்னமேயே சிந்திக்கவில்லை?"—அதன் பின் அவர்கள் அடிக்கடி ஒருவரையொருவர் அவ்வாறு கேட்க வேண்டி வந்தது. ஏனெனில், அமெரிக்காவில் பெருமளவில் குடியேற்றம் நடந்த சமயம் அது. முன்னிலும் சீரான வாழ்க்கையைத் தேடி ஐரிஷ்காரர்களும் ஜெர்மானியரும், போலிஷ்காரர்களும் இத்தாலியர்களும் அந்தச் சுதந்தர நாட்டில் அலையலையாகக் குடியேறி வந்தனர். அவர்களுக்கு விடுதிகள் கட்டித் தரு

வதற்காகக் கன்ட்ராக்டர்கள் அல்லும் பகலும் ஓயாமல் உழைத்தனர். முடிந்த இடங்களிலெல்லாம் அவர்களுக்கு வேலை கிடைத்தது ; பெரும்பாலும் பகல் நேர வேலைதான். ஊதியம் வெகு மட்டு. அவர்களுடைய குடும்பங்களோ பெரியவை.

அத்தகையவர்கள் வுல்வொர்த் கடைகளின் வாடிக்கையாளர்களாகியதில் ஆச்சரியமென்ன? போர்வையால் மூடி மறைத்துக் கொண்ட வெளிநாட்டுக்காரி எவளும் அக்கடைகளில் நுழைந்து பண்டங்கள் வாங்கக் கூச்சப்படத் தேவையிருக்கவில்லை. திறந்த மேஜைகளில் அந்தச் சாமான்கள் பரப்பி வைக்கப்பட்டிருந்தன. வறுக்கும் தட்டுக்கான ஆங்கிலப் பெயர் அவளுக்குத் தெரியாவிட்டால் என்ன ? பார்த்தவுடனேயே அதை அவளால் இனம் கண்டு கொள்ள முடியாதா ! கணக்கிடுவதில் சங்கடமே தராதவையான ஐந்து சதக் காசையோ, பத்து சத நாணயத்தையோ கொடுத்தால் போதும், அக்கணமே அது அவளுக்குக் கிடைத்துவிடும் !

" அவர்களெல்லாம் இங்கேயே குடித்தனம் வைத்து வருகிறார்கள். ஆகவே எல்லாவிதப் பண்டங்களும் அவர்களுக்குத் தேவையாகவிருக்கும் " என்று கார்ஸன் பெக் கூறினார். " தங்கள் படுக்கைகளைத் தவிர வேறெதையும் அவர்கள் கூட எடுத்து வருவதாகத் தோன்றவில்லை. உண்மையாகவே சொல்கிறேன், மிஸ்டர் வுல்வொர்த், நீங்கள் இம்முறை பெரும் புதையலைத் தான் கண்டெடுத்திருக்கிறீர்கள் !—ஆமாம், இந்த நியூயார்க்கிலும் கடை திறக்கப் போகிறீர்களா, என்ன ?"

" இல்லை, ப்ரூக்லினில்தான் தொடங்கப் போகிறேன் " என்று சட்டெனப் பதிலளித்தார் ஃபிராங்க். அது கேட்டு பெக் சிரித்தார். அப்போது நியூயார்க்கும் ப்ரூக்லினும் தனித்தனி நகரங்களாக இருந்தன.

இரண்டுக்குமிடை கடும்போட்டி நிலவியது. நியூயார்க்கில்தான் வுல்வொர்த்தின் கடை இருந்ததெனினும் ப்ரூக்லினில் தான் அவர் வசித்து வந்தார். அதற்குச் சில ஆண்டுகளுக்கு முன் அவரும் ஜென்னியும் லங்காஸ்டரிலிருந்து கிளம்பி அங்கு குடிபுகுந்திருந்தனர்; அவர்களுடைய வருமானம் உயர உயர, ஒவ்வொரு வீடாக மாறி வசித்தனர். லங்காஸ்டரில் பிறந்தவளேயாயினும் அவர்களுடைய மூன்ருவது பெண்ணுன ஜெஸ்ஸி மே சிறு குழந்தையாக அங்கு வந்தவளாதலால் ப்ரூக்லினையே சொந்த ஊராகக் கருதிஞள். தங்களைப் ப்ரூக்லின் வாசிகள் என்று கூறிக் கொள்வதில் அவளுடைய பெற்ருேரும் பெருமை கண்டனர்.

அங்கு வுல்வொர்த்தின் முதல் கடைக்கான இடம் தேர்ந்தெடுக்கப்பட்டதும் திறப்பு விழாவுக்கு விரிவான திட்டங்கள் தீட்டப்பட்டன. பிரசித்தமான சிவப்பு முகப்பில் பொன்னெழுத்துக்களில் பெயர் எழுதப்பட்ட முதல் கடை அதுதான்; பின்னர் விரைவில் எல்லாக் கிளைகளுக்கும் அதுவே சீரான முகப்பு ஜோடனையாகியது. ஆனல் பெரும்கட்டணத்தில் அதுதான் முதல் வுல்வொர்த் கடை என்பதில்லை. எதிர்பாராத்தவக்கங்களின் விளைவாக அந்த கௌரவத்தை வாஷிங்டனுக்கு ப்ரூக்லின் விட்டுக் கொடுக்க நேர்ந்து விட்டது. அந்த இரு பெருநகரக் கடைகளும் பிரமாத வெற்றி பெற்றன; அதன் பயனுக, தேசத்தின் எல்லாப் பெரு நகரங்களிலும் கிளைகள் அமைக்க முன் மாதிரியாகின.

பத்தொன்பதாவது நூற்ருண்டு முடிவடைந்து, இருபதாவது நூற்ருண்டு உதயமாகியது. அமெரிக்காவில் வியாபாரம் மாறி மாறிக் குன்றியும் ஓங்கியும் வந்தது. ஆனுல் அத்தனை மாற்றங்களுக்கிடையிலும் வுல்வொர்த் கடைகளின் விற்பனை மட்டிலும் சீராக அதிகரித்துக் கொண்டே இருந்தது. சுபிட்சமான

காலத்தில் வுல்வொர்த் கடைகளின் வாடிக்கையாளர்களில் அதிகப் பேரிடம் அதிகப் பணம் இருந்தது, செலவிட தாழ்வுற்ற காலத்திலும் தவிப்புற்ற மக்கள் அனைவரும் வுல்வொர்த் வாடிக்கையாளர்களாகி விட்டனர் !

ஆயினும் நாடு நெடுகிலும் முளைத்த ' ஐந்து சத— பத்து சதக் கடைகள் ' அனைத்துமே வுல்வொர்த் கிளைகளல்ல. அந்த ரகக் கடைகள் குறித்து உரிமைப்பதிவு எதையும் வுல்வொர்த் செய்து விடவில்லை. ஆகவே, அவர் காட்டிய வழியை மற்ற வியாபாரிகள் பின்பற்றலாயினர். அவ்வாறு அவருடன் போட்டியிட்டவர்களில் சிலர் அவருடைய பழைய நண்பர்களே. ஃபிராங்கின் தம்பியான சார்லி சொந்தத்தில் சிறியதொரு கடைத் தொடரை அமைத்தார் ; அந்தச் சங்கிலியின் தலைமையகம் ஸ்க்ரான்டனில் இருந்தது. அவ்வாறே அவருடைய உறவினரும், ஆரம்ப காலக் கூட்டாளியுமான ஸீமூர் நாக்ஸும் ஒரு தொடரை நிறுவினார். பின்னர் இவ்விரு தொடர்களும் வுல்வொர்த் ஸ்தாபனத்துடன் இணைந்து விட்டன.

போட்டியிட்ட மற்றவர்களெல்லாம் வேறு மனிதர்கள். மத்தியக் கிழக்குப் பகுதியில் மக்ரோரியும், பென்ஸில்வேனியாவில் க்ரெஸ்ஜும், தெற்குப் பிரதேசத்தில் க்ரெஸ்ஸீம், மற்றும் சிலரும் இவ்வாறு 'ஐந்து சத— பத்து சத'க் கடைத் தொடர்களைத் தொடங்கினர். அவர்களில் ஒருவர், ஐந்து சதத்திலிருந்து ஒரு டாலர் வரையிலுள்ள பண்டங்களை வைத்து ஒரு மாறுதலைச் செய்தார். இதன் மூலம் பல்வேறு ரகப் பொருள்களை அவரால் விற்க இயன்றது. வுல்வொர்த்தேகூட விலை வரம்பைப் பத்து சதத்துக்கு மேல் உயர்த்துவது பற்றிச் சில முறை சிந்தித்தார். எனினும் இறுதியில் அப்படிச் செய்யலாகாதென்றே தீர்மானித்தார். ஆனால் அவருடைய வாரிசுகள் அவர் இறந்தபின் சில

வருடங்கள் கழித்து அம்மாறுதலைச் செய்தனர். அவர் வாழ்ந்தவரையில் உயர்ந்தபட்ச விலை பத்து சதமாகவே மாருமல் நீடித்தது.

இருபதாவது நூற்றுண்டின் ஆரம்ப வருடங்களில் வுல்வொர்த் ஸ்தாபனம் அபார வளர்ச்சி அடைந்தது. 1905-க்குள் 120 கிளைகள் ஏற்பட்டுவிட்டன. 1909-ல் இங்கிலாந்தின் மீதும் வுல்வொர்த் படையெடுத்து 'மூன்று பென்னி—ஆறு பென்னி' கடைகளை அமைத்துவிட்டார். அங்கு மூன்ருண்டுகளில் 28 கடைகள் இயங்கலாயின. ஜெர்மனியிலும் சில கிளைகள் திறக்கப்பட்டன. அவையனைத்தும் நன்கு தொழிற்பட்டு, தாய் ஸ்தாபனத்துக்கு ஏராளமாக புது லாபம் தேடித் தந்தன.

ஒரே மனிதரால் நிர்வகிக்கமுடியாத அளவுக்குப் பெருத்துப் படர்ந்துவிட்டது, அந்த வியாபார சாம்ராஜ்யம். எனவே, ஃபிராங்க் வுல்வொர்த்தைத் தலைவராகக்கொண்ட கூட்டு ஸ்தாபனமாக 1901-ல் அது திருத்தியமைக்கப்பட்டது. ஒரு காலத்தில் இரவு முழுதும் பென்னிகளை அவர் கணக்கிட்டு வந்த நிலை நீங்கி, பல லட்சக்கணக்கான டாலர்களைக் கணக்கிடப் பெரியதொரு கணக்காயர் பட்டாளமே ஏற்பட்டுவிட்டது.

ஆம், சொந்தக்கடை பற்றிக் கனவு கண்ட ஏழை விவசாயிச் சிறுவன் அம்மாதிரி ஒரு நாள் தான் விரிந்த அளவில் வியாபாரம் நடத்தக்கூடுமெனப் பகற்கனவு கூடக் காணுத போதினும் அது உண்மையே. அதன் பயனுக லட்சாதிபதியாகிய ஃபிராங்க் வுல்வொர்த் விரைவில் கோடீச்வரருமாகிவிட்டார். வாழ்நாள் முழுவதும் சிக்கனமாகவே காலந்தள்ளியவர் அவர். அவ்வாறே அவரது மனைவி ஜென்னியும் கடுஞ்சிக்கனத்தைக் கடைப்பிடித்தவள். அவர் சம்பாதித்த லாபம் பூராவும் மீண்டும் வியாபாரத்திலேயே போடப்பட்டு

வந்தது. அந்த அவசியம் நீங்கி, கவலையற்றுக் காலங் கழிக்கும் நிலையை அவர் இப்போது எய்திவிட்டார்· லட்சாதிபதிக்கேற்ற முறையில் வாழத் தருணம் வந்து விட்டதெனத் தீர்மானித்தார்.

ப்ருக்லினில் அவர்கள் வசித்த வீடு ஜென்னிக்குச் சௌகரியமாகவே இருந்தது: ஆனால் அவர்களுக்குரிய வாறு நேர்த்தி மிக்கதாக இல்லையென ஃபிராங்க் கருதினார். அவளுக்காக ஐந்தாவது அவென்யூவில் ஒரு மாளிகையையும், லாங் தீவிலுள்ள க்ளென்கோவில் ஒரு பண்ணையையும் வாங்கினார் சில வருடங்களுக்குப் பின் அந்த க்ளென் கோவில் இருந்த வீடு தீக்கிரையானதும், ஐரோப்பாவில் தாம் கண்டிருந்த அரண்மனைகளையும்விடச் சிறப்பான வகையில் வெள்ளைச் சலவைக்கற்களால் புதியதொரு மாளிகையைக் கட்டிக் கொடுத்தார்.

வின்ஃபீல்ட் ஹால் என்று பெயரிடப்பட்ட அது சக்கரவர்த்தி நெப்போலியனையேகூடச் சந்தோஷப் படுத்தியிருக்கும்; உண்மையில் அந்தச் சக்கரவர்த்திக்கு உகந்த முறையிலேயே அது அமைந்தது. அதில் வுல்வொர்த்தின் படுக்கையறை மன்னருடையதே போன்று அலங்கரிக்கப்பட்டது; நெப்போலியனுடையதைப் போலவே சிவப்பு வெல்வெட் அஸ்மானகிரியுடன் பொலிந்தது. அங்கு போடப்பட்ட அவருடைய பெரிய கட்டில்; அந்த வெல்வெட் துணியில் பொன் ஜரிகையினால் பின்னப்பட்ட மகுடம்கூட அந்த மாமன்னருடையதையே பிரதிபலித்தது. தங்கள் அரசருக்கு ஃபிரெஞ்சு மக்கள் அளித்திருந்த சலவைக்கல் தளவரிசை, தொட்டிகள், கட்டித்தங்கத்தாலான குழாய்கள், கண்ணாடி பதிக்கப்பட்ட சுவர்கள் ஆகியவை அவருடைய ஸ்நான அறையிலும் அதே அச்சாக அமைந்தன.

ஆகவே, அவருடைய சகாக்கள் அவரை 'வியாபார

உலக நெபோலியன்' என்று அழைக்கத் தொடங்கினர். அந்த போனபார்ட் காலத்தில் அறியப்படாதிருந்த நவீன வசதிகளைத் தம் மாளிகையில் இந்த நவீன நெப்போலியன் பொருத்த இயன்றதொன்றே வித்யா சம். சலவைக்கற்களாலான பெரிய படிக்கட்டுகளோடு தாமே ஏறி இறங்கும் சாதனங்களையும் மறைவிடங் களில்அவர் அமைத்தார். ஒரு காலத்தில் மன்னர்களுக் கும் கூடக் கிட்டியிராத அளவு வசதியை நீராவிச் சூடும், மின்சார விளக்குகளும் அளித்தன. லட்சம் டாலர்களுக்கு வாங்கப்பட்ட இசைக்கருவியை இசைக்க அந்த மாளிகையிலேயே ஒரு வல்லுனர் வசித்த போதி லும் அதைத் தாமே இயக்கக்கூடிய ஏற்பாடுகளும் அதில் பொருந்தியிருந்தன. எனவே, இஷ்டப்பட்டால் இசை வல்லுனரை அனுப்பிவிட்டு, பயிற்சியற்ற விரல் களைக் கொண்டே இனிய இசை பொழியச் செய்யும் பகுதிகளை இயக்க இயன்றது, வுல்வொர்த்திறல்.

ஐந்தாவது அவென்யூவில் இருந்த மாளிகை அள வில் சிறியதாயினும் வின்ஃபீல்ட் ஹாலைப்போலவே ஆடம்பரம் மிகுந்ததாக விளங்கியது. இரண்டிலும் அதி நேர்த்தியான விதானச் சிலைகளும், நெய்வண்ண ஓவி யங்களும், கீழ்த்திசைக் கம்பளங்களும், கனமான வெள்ளித்தட்டுகளும் நிறைந்திருந்தன. வண்டிகள், குதிரைகளைத் தவிர வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட மோட்டார்க்காரொன்றும், இருந்தது. அதற்காக ஒரு ஃபிரெஞ்சு நாட்டு மோட்டாரோட்டியும் அமர்த்தப்பட்டிருந்தார். கம்பளித்தோல்கள், நகை கள், விருந்துகள், நடனங்கள், வெளிநாடுகளுக்கு அடிக்கடி பிரயாணங்கள் போன்று பணத்தாலாகக் கூடியது அனைத்தையும் தம் மனைவியையும் புதல்வி களையும் மகிழ்விப்பதற்காக அவர் அளித்தார்

ஆனால் இந்தப் புதிய படாடோபங்களைப் பொறுத்து ஜென்னி நடந்துகொண்ட முறை அவருக்கு

ஏமாற்றம் அளிப்பதாகவே இருந்தது. எப்போதும் கூச்சமும் அடக்கமும் மிகுந்தவளான அவள், தன் எளிய ருசிகளையும் பழங்கால முறைகளையுமே பின் பற்றி வந்தாள். தன்பொருட்டு தன் கணவர் குவித்த ஆடம்பரப் பரிசுகளுக்காக அவள் நன்றியுடையவளாக இருந்தபோதிலும் தன் வாழ்நாளுக்குப் போதிய ஆடையணிகள் ஏற்கெனவேயே தன்னிடம் உள்ளன, மேற்கொண்டு எதுவும் தேவையில்லையென மிருது வாக ஆட்சேபிக்கவும் தவரவில்லை. வருடங்கள் செல்லச் செல்ல, பரபரப்பு மிக்க நியூயார்க் வாழ்க்கையினின்று அவள் மேன்மேலும் ஒதுங்கலானாள். அழைப்புகளைத் தட்டிக்கழித்துவிட்டுத் தன் க்ளென்கோவ் வீட்டி லேயே பெரும்பொழுதைச் செலவிட்டாள்; அங்கு, தாழ்வாரத்தில் தனிமையாகத் தன் நாற்காலியில் அமர்ந்து ஆடுவதிலேயே இன்பம் கண்டாள்.

அவளுடைய குமாரிகளோ முற்றிலும் மாறாக இருந்தனர். தங்கள் வசமிருந்த பெருஞ்செல்வம் அவர்களை அகமகிழச் செய்தது. அழகும், நல்ல பழக் கங்களும் நிரம்பப் படைத்திருந்த அவர்கள் தங்களை விரும்பி வரவேற்ற நியூயார்க் நகர உயர்க்குழுவில் ஊறித்திளைத்தனர். அவர்களை மணக்கப் பலபேர் முன்வந்தது இயற்கையே. அம்மங்கையர் யாவரும் இறுதியில் நல்லபடி அமைந்தவையெனக் கருதப்பட்ட திருமணங்களையே புரிந்துகொண்டனர்.

ஹெலெனாவின் திருமணத்தையொட்டிய அரிய வரவேற்பு உபசாரம் ஐந்தாவது அவென்யூ மாளிகை யில்தான் நடந்தது. சார்லஸ் மக்கான் என்னும் வாலிப வக்கீலை அவள் மணந்தாள். மூன்றாண்டுகள் கழித்து, பங்குத் தரகரான ஃப்ராங்கிலின் லாஸ்ஹட்டனை எட்னா கலியாணம் செய்துகொண்டாள். கடைசிக் குமாரியான ஜெஸ்ஸிதான் இறுதியாக மணந்தவள்;

அவளது கரம் பற்றியவர் ஜேம்ஸ் பால் டொனுஹூ என்னும் ஐரிஷ் மரபு வழிவந்த அமெரிக்கர்.

அந்த மூன்று புதல்வியருக்கும் குழந்தைகள் பிறந்தன. அந்தப் பேரக் குழந்தைகளிடம் கொள்ளை ஆசை, ஃபிராங்க் வுல்வொர்த்துக்கு. அவை கேட்டதையெல்லாம் வாங்கிக் கொடுத்து இன்பம் கண்டார் அவர்.

# 11.

**1913**-ம் வருடம், ஏப்ரல் 24-ம் தேதி அன்று பிற்பகல் முதற்கொண்டே நியூயார்க் நகரமன்ற மைதானம் நிரம்பிக் கொண்டிருந்தது. பொழுது சாய்வதற்குள் அது பூரணமாக நிறைந்துவிட்டது அதைச் சுற்றிலுமுள்ள நடை பாதைகளிலும் வீதிகளிலும் கூட்டம் பெருகியபடியால் வண்டிப் போக்குவரத்துக்கு சிரமமாகிவிட்டது.

ஆதவன் மங்கி மறைந்து அஸ்தமனம் சூழ்ந்தது. மக்கள் அனைவரின் தலைகளும் ஒரே திசையில் திரும்பி நோக்கின. அங்கே, பிராட்வே, பார்க் பிளேஸ் முனையில் கருமையான படலமொன்று கருத்துவந்த வானத்திடையே புடைத்தெழும்பி நின்றது.

நகரமன்ற வட்டார ஊழியர்கள் அந்த கரும்படலத்தைக் கிட்டத்தட்ட இரண்டு வருடமாகக் கவனித்து வந்திருந்தார்கள். முதலில் வெறும் உருக்கு உத்தரக்கூடாக அது இருந்தது. பிறகு ஒவ்வொரு நாளும் வேலை முடிந்து தாங்கள் வீடு திரும்பும்போது அது சிறிது சிறிதாக உயர்ந்து வந்ததை அவர்கள் கவனித்தார்கள். மேன்மேலும் உயர்ந்து வானளாவ வளர்ந்தது அது; மனிதன் அதுகாறும் கட்டத் துணியாத உயரத்துக்கு ஓங்கியது.

“ ஊஹூம், இதனால் நிலைத்து நிற்கமுடியாது ”

என்று முற்றும் தெரிந்தவர்களைப் போல் முன்கூட்டிக் கூறினர் அவர்கள். எ∴குக்கூடு எழும்பி நிற்பதில் விந்தையில்லை. ஆனால் அதே போல் கற்கட்டிடத்தால் முடியுமா ? இந்தக் கூட்டில் கல்லையும் மண்ணையும் இட்டு நிரப்ப அவர்கள் முயற்சி செய்யுமளவு பொறுத்திருந்து பாருங்கள். இத்தனை கனத்தையும் தாங்கக்கூடிய அளவு உறுதியாக அஸ்திவாரம் அமைக்கவே முடியாது. அப்புறம் காற்றுத்தான் சும்மா விட்டுவிடுமா ? விசையாக வீசினால் போதும், இவ்வளவும் பொலபொலவென்று உதிர்ந்து விடும். தான் தகர்வதோடு இந்தப் பகுதி பூராவையும் புதைத்தும்விடும், பார்த்துக்கொண்டே இருங்கள், இம்மாதிரி நடக்கிறதா இல்லையா என்று !

இத்தகைய ஐயங்கள் பொது மக்களிடையே மட்டும்தான் நிலவின என்பதில்லை, எஞ்சினீர்களும் கட்டிடக் கலைஞர்களும் கூடத் தலையாட்டினார்கள், நடக்காத காரியமென நிச்சயமாகக் கூறினார்கள்.

அல்லது, அப்படியே நடக்கக்கூடிய காரியமாயினும்கூடச் செய்யத் தகாததொன்று என்றார்கள். அதற்கு முன்பே, இதுவரை உலகிலேயே உயர்ந்த கட்டிடம் அதே நியூயார்க்கில் தான் இருந்தது; விண் முட்ட விம்மி நின்ற மெட்ரோபாலிடன் டவர்தான் அது. கட்டப்பட்ட காலத்தில் அதுவும் அதேமாதிரியான துக்கிரி ஜோஸ்யங்களை எழுப்பியது, ஆயினும் அன்றளவும் அது வலுவாகவும் பத்திரமாகவும் நிலைத்து நின்று, நியூயார்க்கின் அடிவானத்துக்கு அழகு கூட்டிக் கொண்டிருந்தது. அதை மிஞ்ச முயற்சி செய்வானேன் ? உலகிலேயே உயரமான அதையும்விட உயரமான கட்டிடத்தை நிர்மாணிக்கும்படி கூற சுத்தப் பைத்தியக்காரனன்றி வேறு எவரே ஏவுவார் ?

அதை ஏவியது ∴பிராங்க் வுல்வொர்த்தான். அவ

ரைப் போய் யாராவது கிறுக்கரெனக் கூறமுடியுமா ? உச்சியைத் தொடுவதில் புதியதொரு உச்சத்தை எட்டிய ஸிங்கர் கட்டிடமானது, ஸிங்கர் தையல் இயந்திரக் கம்பெனிக்குப் பல லட்சம் டாலர் பெறுமான இலவச விளம்பரத்தைத் தேடித் தந்தது. பின்னர் அதை விட உயரமாக எழும்பிய மெட்ரோபாலிடன் டவரோ, மெட்ரோபாலிடன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியின் பெயரை சித்திரத் தபால் கார்டுகளின் மூலம் உலகெல்லாம் பரப்பியது. அவை இரண்டையும்விட உயரமாக வுல்வொர்த் கட்டிடமொன்று எழுப்பினால் நியூயார்க் நகரப் பிரஜை எவருமோ, வெளியிலிருந்து வருபவர் யாருமோ அதைக் கவனிக்காமல் இருக்கமுடியாது. அப்படிப்பட்ட கட்டிடத்தைக்கட்டி அனைவரது கவனத்தையும் கவருவதுதான் அவரது நோக்கம். அந்த நோக்கத்தை நிறைவேற்றித்தான் தீர்த்தார் அவர்.

ஆம், அக்கட்டிடத்தை அவர் கட்டி முடிக்கத்தான் செய்தார், அது முற்றிலும் அவருடைய சொந்தக் கட்டிடமே; வேறு யாருக்கும் அதில் பங்கு கிடையாது. ஏனெனில் கம்பெனியின் பணத்தை அப்படிப்பட்டதொரு கட்டிடத்தை நிர்மாணிக்கச் செலவழிப்பதற்கு மற்ற டைரக்டர்கள் இசையவில்லை. "அப்படியானால் சரி; என் சொந்தப் பணத்தையே செலவிட்டுக் கட்டுகிறேன் !" என்று உற்சாகமுடன் கூறினார் ஃபிராங்க். மொத்தம் செலவான 1 கோடி 35 லட்சம் டாலர்கள் முற்றிலும் அவருடைய சொந்தப் பணமே. ஆக, உலகிலேயே உயரமானதும் அழகு மிகுந்ததுமான காரியாலயக் கட்டிடமாகிய அது ஃபிராங்கின் பரிபூரண உடைமையாகியது.

பூமியினுள் 120 அடி உயரத் தூண்கள் செலுத்தப்பட்ட நாளிலிருந்து கணக்கிட்டால் அதைக் கட்டி முடிக்க மூன்று வருடம் பிடித்தது. அந்த வேலை தான் அன்று முடிவுற்றிருந்தது. சிறியதான தம்மு

முடைய முதல் கடையை 'விமரிசையான முறை யில் திறக்க எவ்வளவு கவனமாக ஃபிராங்க் திட்ட மிட்டாரோ அதே அளவு பிரயாசையைத் தம் சாதனை களின் சிகரமான அந்தக் கட்டிடத்தின் திறப்பு விழாவையொட்டியும் அவர் எடுத்துக்கொண்டார்.

ஏழரை மணிக்கு அது நடைபெறுவதென நேரம் குறிக்கப்பட்டிருந்தது, வானளாவி நின்ற அந்தக் கட்டிடத்தில் அந்த நிமிஷம் வரையில் ஒரு சிறுபொறி கூட வெளிச்சமில்லை. சரியாக ஏழரை மணிக்கு வாஷிங்டனில் ஜனாதிபதி வுட்ரோ வில்ஸன் ஒரு பித் தானை அழுத்தினார். அவ்வளவுதான், குப்பென ஒளி வீசத் தொடங்கின, பிரகாசம் மிகுந்த மின்சார விளக் குகள்; ஆயிரக்கணக்கான ஜன்னல்கள் வழியே அவை ஒளி வெள்ளத்தைப் பாய்ச்ச ஆரம்பித்தன; அனைத் துக்கும் மேலாவிருந்த முகப்புப் பகுதியோ மணி முடியே போலத் தகதகத்தது. பிரம்மாண்டமான வெண்கலக் கதவுகளுக்குப் பின்னால் நிறுத்திவைக்கப் பட்டிருந்த வாத்திய கோஷ்டியொன்று தேசீய கீதத்தை முழக்க முற்பட்டது.

அந்த அசையொலி சிறுகச் சிறுக உச்ச நிலைக்கு உயருகையில் அங்கு கூடியிருந்த மாபெரும் கூட்டம் மலைத்துப் பிரமித்து நின்றது. மேலே மேலே உயர்ந்து சென்று சுற்றியிருந்த நட்சத்திரங்களைப் போல் சுடர்விட்டுப் பிரகாசித்த அந்த விளக்குகளை அண்ணாந்து பார்த்துப் பார்த்துக் கழுத்துவலி கண் டது அனைவருக்கும். அவர்களில் பெரும்பாலோர் அதுபோன்ற அழகியதொரு காட்சியை அதுவரை கண்டதேயில்லை. அந்த அமுத ஒளியில் வெண்ணி றம் பெற்றன, அக்கட்டிடத்தின் சுவர்களெல்லாம்; அவற்றில் செய்யப்பட்டிருந்த சிற்ப சித்திரப் வேலைப் பாடுகளோ, பால்நுரை போன்று நுண்ணியவை யாய்த் துலங்கின. ஏராளமான எஃகையும் கற்களையும்

விழுங்கி எழும்பியிருந்த போதிலும் அந்த வஸந்தத் தென்றலில் பஞ்சுத்துகள் போல் மெள்ளக் கிளம்பி மிதக்கக்கூடுமெனத் தோன்றுமளவு இலேசாகவும் காற்ரோட்டமுடையதாகவும் அன்று காணப்பட்டது அது.

அன்று இரவு முழுவதும் அந்த விளக்குகள் எரிந்தன. அந்த இரவு பூராவும் புதுப்புது மக்கள் அங்கு கூடிக் குவிந்து, அந்தக் கட்டிடத்தைக் கண்ணுற்று அதிசயித்தனர். ஆனால் உண்மையிலேயே மகத்தான திறப்பு விழா அந்தக் கட்டிடத்தினுள்ளே தான் நடந்தது; ஃபிராங்க் வுல்வொர்த்தின் அழைப்புப் பெற்று வந்திருந்தவர்கள்; அங்கிருந்த மாபெரும் மேஜையைச் சுற்றிக் குழுமினர்.

தங்களை ஃபிராங்கின் நண்பர்களெனக் கூறிக் கொள்வதில் பெருமைகண்ட அத்தனை வியாபார உலகப் பிரமுகர்களும், வட்டித் தொழில் வல்லவர்களும், அரசியல் தலைவர்களும் அங்கே திரண்டிருந்தனர். கட்டிடக் கலைஞரான காஸ் கில்பெர்ட் வந்திருந்தார்; நிர்மாண நிபுணரான லூயி ஹாரோவிட்ஸ் வந்திருந்தார்: அவர்களோடு அக்கட்டிடத்தை நிறுவுவதில் ஒத்துழைத்த அவர்களுடைய உதவியாளர்களும் வந்திருந்தனர். அவர்களுடைய நெருக்கமான நண்பர்களாகிய மற்ற அதிதிகளும் அங்கே யிருந்தனர்; அவர்களுக்கெல்லாம் உரிய மரியாதை செய்யப்படவிருந்தது.

பிரபல பாதிரியாரொருவரின் ஆசிப் பிரார்த்தனையுடன் விருந்து ஆரம்பமாயிற்று அக்கட்டிடத்தை 'வியாபாரக் கோபுரம்' என்று குறிப்பிட்டார் அந்தப் பாதிரியார். அதை ஆமோதிக்கும் வகையில் தலையாட்டினார், கட்டிடக் கலைஞரான கில்பெர்ட். ஏனெனில், அதையேதான் நோக்கமாகக் கொண்டு அக்கட்டிடத்தை அமைத்தார் அவர். ஐரோப்பிய ஆலயங்களின் காதிக் மறுமலர்ச்சிக்கால பாணியைத் தேர்ந்

தெடுத்த அவர், அவற்றின் அத்தனை அழகையும் கம்பீரத்தையும் அப்படியே அக்கட்டிடத்தில் பிரதிபலிக்கச் செய்திருந்தார்.

அக்கட்டிடத்தைப் பொறுத்தவரையில் கில்பெர்ட்டின் சாதனையை மேதாவிலாசம் மிக்க பேரதிருஷ்டம் என்றே கூறவேண்டும்; பிற்பாடு அவரோ வேறெவருமோ அத்தகைய எழிலார்ந்த கட்டிடத்தை எழுப்ப முடிந்ததேயில்லை. அதைவிட உயர்ந்த கட்டிடங்கள் இப்போது நியூயார்க்கில்' உள்ளன என்பது உண்மையே, ஆனால் அவற்றில் சில அவலட்சணமாகக் காட்சியளிக்கின்றன; மற்றும் சில, தற்காலஉபயோக கரமோஸ்தரில் அமையப்பெற்று அழகாகத்தான் இருக்கின்றன. ஆயினும் அவற்றில் எதுவும் ஆலயத்தைப்போல் இல்லை. கல்லிலே பூவேலைபோல் காட்சியளித்து கண்ணுக்கும் கருத்துக்கும் களிப்பூட்டும் அற்புதமான வுல்வொர்த் கட்டிடம் போன்றவை அவற்றிடையே அரிதாகவே உள்ளனவெனலாம்.

அரிய பல பலகாரங்களை அருந்தி முடித்தனர் விருந்தினர். நாற்காலிகளில் நன்கு சாய்ந்துகொண்டு உயர்ந்த ரக ஹவானா சுருட்டுகளைப் புகைத்தவாறு அடுத்த நிகழ்ச்சியை அவர்கள் ஆவலோடு எதிர்பார்க்கலாயினர். பிரசங்கங்கள் தொடங்கவேண்டிய தருணமும் வந்தது. பிரசித்த நூலாசிரியரான எப். ஹாப்கின்ஸன் ஸ்மித்தான் அந்த வாழ்த்துரைப் பிரதானி பொறுப்பை ஏற்றிருந்தவர். ஃபிராங்க் வுல்வொர்த்தை வாயார வாழ்த்திவிட்டு அவரையே முதல் பிரசங்கியாக அறிவித்தார் ஸ்மித்.

ஃபிராங்க் எழுந்தார். அறுபத்தோரு வயதாகியிருந்த அவரிடம் உண்மையார்வமும் உறுதியும் உறைந்திருந்தது தெளிவாகத் தெரிந்தது. தம்மை நோக்கிய பிரமுகர்களின் முகங்களையெல்லாம் வட்ட

மிட்ட அவரது நீலக் கண்கள் இறுதியில் ஒரு முகத்தின்மீது பதிந்தன.

அந்தப் பிரசங்கத்தைக் கேட்பதற்காக அப்போது வயதேறி வற்றலாகிவிட்ட வில்லியம் மூர் தம் காதில் பொருத்தியிருந்த ஒலிபெருக்கியைச் சரிப்படுத்திக் கொண்டார். வாட்டர்டவுன் வாசியான அவருடைய காதில் விழுந்த முதல் வார்த்தை அவருடைய பெயர்தான்! அமைதியும் நேசபாவமும் இழையோடிய தம் குரலில் பழைய நாட்களைப்பற்றிப் பேசத் தொடங்கி விட்டார், ஃபிராங்க் வுல்வொர்த்; இன்று பிரமாண்டமாகப் பெருகிப் படர்ந்துவிட்ட அந்தக் கட்டிடத்தின் தோற்றுவாயான சின்னஞ்சிறு கடையில் தம்மை நம்பிச் சரக்குகளை மூர் குவித்ததை அவர் குறிப்பிட்டார். அவர் வற்புறுத்தியதன்பேரில் அந்தக் கிழவனார் தட்டித் தடுமாறி எழுந்து நின்று, கூடியிருந்தோரின் கரகோஷத்தைக் கூச்சமுடன் ஏற்றார்.

மூர் அமர்ந்ததும், வுல்வொர்த் கட்டிடம் நிறுவப்படுவதைச் சாத்தியமாக்க உதவிய மற்றவர்களை ஃபிராங்க் அறிமுகம் செய்யலானார். முதலில் தம் தம்பி சார்லியைக் குறிப்பிட்டு, அவரை நெஞ்சாரப் புகழ்ந்தார். அடுத்து, மேஜையை வட்டமிட்டவராய் ஆரம்ப காலச் சகாக்களை ஒவ்வொருவராக அறிமுகப்படுத்தினார்; அவர்கள் எழுந்திருந்து விருந்தாளிகளும் கை தட்டி ஓயுமளவு காத்திருந்தபின் அடுத்தவரை நாடிச் சென்றார். தமது நினைவுச் சின்னமென அக்கட்டிடத்தை ஸ்மித் வர்ணித்தார் என்றும், ஆனால் உண்மையில் அவ்வாறல்ல என்றும் உரைத்தார். தன்னால் கொடுக்கக்கூடிய அளவு விலைகளுக்குப் பண்டங்களை வாங்க வாடிக்கையாளருக்கு உரிமை உண்டென்னும் கருத்தின் உருவகமே அக்கட்டிடம் என்றார். அந்தக் கருத்தைச் செயல்படுத்த முற்பட்டதே தாம் செய்ததெல்லாம் என்றும் அந்தப் பழைய நண்பர்களின் விசு

வாசம் மிக்க உதவியின்றி அதை ஒருநாளும் தாம் சாதித்திருக்கவியலாது என்றும் கூறினார்.

அதன்பின் கட்டிடக் கலைஞரையும் அவரது சிப் பந்திகளையும், பிறகு கட்டிட நிர்மாணகரையும் அவ ரது ஊழியர்களையும் பாராட்டினார். பேசி முடித்து அவர் உட்காரும்போதே இரவு வெகுநேரமாகி விட் டது. எனினும் அப்போதுதான் ஆரம்பமாகியது பிர சங்கமாரி. வியாபாரத் துறைப் பிரமுகர்களும் அரசி யல்வாதிகளும் ஒவ்வொருவராக எழுந்து ஃபிராங்கைப் போற்றினர். இரவு முழுவதும் அவர்களது குரல்கள் அங்கு ஓங்கியொலித்தன; இரவு பூராவும் விளக்குகள் ஒளிவெள்ளம் பாய்ச்சின; வெளியிலே மக்கள் வெள் ளமும் ஓயாது அலைமோதியது.

வாசலில் காத்திருந்த தங்கள் வண்டிகளுக்கும் கார்களுக்கும் விருந்தாளிகள் வந்தபோது விடிந்து விட்டது. சகோதரர் சார்லியுடன் ஃபிராங்க் வுல் வொர்த் வெளிவந்தபோது களைத்த குரல்கள் கோஷ மிட்டன. அவருக்கும் பேசமுடியாதபடி தொண்டை கட்டிவிட்டதால் கைகளை ஆட்டிக் குறுநகை புரிந்து அந்தப் பாராட்டுதலை ஏற்றார்.

"என் வாழ்க்கையிலேயே இன்றுபோல் என்றும் நான் களைத்துக் குன்றியது கிடையாது" என்று சார் லியிடம் அவர் கூறினார். "இன்று போல் என்றும் ஆனந்தத்தை எய்தியதும் இல்லை. என் வாழ்விலோர் திருநாள், மகிழ்ச்சியின் சிகரமான நாள் இதுதான்!"

# 12

அந்த ஏப்ரல் மாத மாலையே தம் வாழ்வில் மகிழ்ச்சி மிகுந்ததென பிராங்க் வுல்வொர்த் குறிப்பிட்டபோது தாம் அறிந்திருந்ததையும்விட யதார்த்தமான உண்மையையே கூறினார். ஏனெனில் அதன் பின் அவருக்கு எஞ்சிய ஆனந்தமய நாட்கள் அதி சொற்பமே. எப்போதுமே திடமற்றதான அவரது உடல்நிலை வேகமாகக் குன்றிவந்தது. வைத்தியர் வற்புறுத்தியதன் பேரில் வியாபாரத்தை ஒதுக்கி வைத்துவிட்டு நெடுநாள் ஓய்வெடுத்துக் குணம் பெறுவதற்காக ஐரோப்பாவுக்குக் கப்பலேறினார். ஜினிவா போய்ச் சேர்ந்ததுமே கடும் நோய்க்கு அவர் இலக்காகி விட்டார். தன் சகோதரியுடன் அவ்விடத்துக்கு ஸ்ரீமதி வுல்வொர்த் விரைந்தார். அங்கு அவர்கள் போய்ச் சேர்வதற்குள் அவரது தேகநிலை சற்றே திருந்திவிட்டது.

போதிய வலுப்பெற்றதும் அவ்விருவரையும் அழைத்துக்கொண்டு ஸ்விட்ஜர்லாந்திலும் ஃபிரான்ஸிலும் நிதானமாக மோட்டார்ப் பிரயாணம் செய்யலானார். நெப்போலியன் சம்பந்தப்பட்ட நினைவுச் சின்னங்களில் அவருடைய ஆர்வம் மிக்க அக்கறையை அந்தப் பயணம் திரும்பத் தூண்டிவிட்டது. வுல்வொர்த் கட்டிடத்தில் அவருடைய சொந்த அறைக்கான வடிவம் இன்னமும் திட்டமிடும் கட்டத்திலேயே இருந்தது. நெப்போலியனின் சபாமண்டபத்தைப்போன்றே அப்படியே அச்சாக அதை அமைக்கலாமென அவருக்கு யோசனை உதித்தது.

பாரிஸிலும்; பின்னர் நியூயார்க்கிலும் அது சம்பந்தமாக ஜோடனைக் காரர்களைக் கலந்து பேசியபோது அவரது பலவீனம் மறைந்து விட்டதாகவே தோன்றியது. சலவைக் கல் பதித்த சுவர்கள், மேஜை, நாற்

காலிகள், கணைப்புப்பிறை அலங்காரங்கள்—ஆம், அவ்வளவையும் அப்படியே வடித்துவிட இயலுமெனப் பட்டது. செலவு ஏகமாக ஆகுமெனினும், அதை அவர் பொருட்படுத்தவேயில்லை. அத்தனையும்,ஆணியிலிருந்து தரை விரிப்பு வரை அவ்வளவும்,அவ்வாறே அமைக்கப்பட்டன. நெப்போலியனுக்குச் சொந்தமாக இருந்த சில அசல் பொருள்களையும்கூட அவரது பிரதிநிதிகளால் திரட்ட முடிந்தது; ரஷ்ய ஜார் மன்னரின் பரிசெனக் கூறப்பட்ட கடிகாரம் அப்பண்டங்களில் பிரதானமானது.

அதுபோன்ற சாம்ராஜ்யச் சூழ்நிலை கண்டு இளம் வயதானல் குழந்தையைப்போல் மகிழ்ந்திருப்பார், ஃபிராங்க் வுல்வொர்த். ஆனல் அப்போதோ அது அவருக்கு அவ்வளவாக ஆனந்தம் அளிக்கவில்லை.

புதிய காரியாலய அறை முற்றுப்பெறுமுன்பே அவருடைய குடும்ப வைத்தியர் பல மாத காலமாக சூசகமாகக் கூறிவந்த பயங்கர விஷயமொன்றை அவர் எதிர்ப்பட நேர்ந்தது, அன்றட வாழ்க்கையிலிருந்து ஜென்னி ஒதுங்கியதில் இயல்புக்கு மீறிய அம்சமொன்றும் இருந்தது. எப்போதும் போன்றே மென்மையான இனிய சுபாவமுடன் அவள் நடந்தபோதிலும் வரவர அதிக அளவில் குழப்பம் அடையலானுள். தன் பெண்கள் வளர்ந்துவிட்டதைக் கண்டு கொள்ள அடிக்கடி தவறினுள்; அவர்களை இன்னமும் குழந்தைகளாகவே பாவித்துப் பரிதாபகரமான முறையில் அழைத்தாள். பல வருட காலமாக அறிந்திருந்த சிப்பந்திகளே சிசுருஷை செய்தபோதிலும் தன்னைச் சுற்றி முற்றிலும் முகமறியாதவர்களே இருப்பதாக முறையிட்டாள்.

இல்லை, அது வயோதிகத்தின் சேஷ்டைகள் அல்ல என்று கவலைக் குறியுடன் கூறினுர் வைத்தியர். அறு

பது வயதை அவள் கடந்து ஒரு சில வருடங்களே ஆகியிருந்தன. ஆம், மேன்மேலும் அந்நிலை முற்றி மோசமாகும் என்றும் குறிப்பிட்டார். பச்சையாகச் சொல்வதானால் அது மனோவியாதியே என்றார். அவளது உடல் நிலை ஆரோக்கியமாகவே இருப்பதாகவும், பல வருட காலம் அவளால் வாழ இயலுமென்றும், ஆனால் புத்தி தான் பேதலித்து விட்டது என்றும் அவர் தெரிவித்தார். அந்த சித்தப் பிரமையைப் போக்குவதற்கான வழி எதையும் அக்கால மனவியல் நிபுணர்கள் அறிந்திருக்கவில்லை.

அதனால் ஃபிராங்க் வுல்வொர்த்துக்கு ஏற்பட்ட துயரம் இவ்வளவு அவ்வளவு அல்ல. தைரியமும் திறனும் மிக்க ஜென்னிதான் நாற்பது வருட காலமாக அவருக்கு உறுதியான பக்கபலமாக இருந்து வந்தவள்; அவருடைய முழு முதல் காதலியும் அவளே. ஆகவே, தம் செல்வம் முழுவதும் செலவழிந்தாலும் சரி, வைத்தியர்கள் அவளைக் காப்பாற்றியேயாக வேண்டுமெனத் தீர்மானித்தார். நிபுணர்களைத் தருவித்துக் காட்டுவதென்றும், அமெரிக்க வல்லுனரால் முடியாவிடில் வைத்தியத் துறைக் கேந்திரங்களான ஹீடல்பர்க், வியன்னா ஆகியவற்றிலிருந்து வரவழைப்பது என்றும் முடிவு செய்தார். ஜென்னியை முன் போல மாற்றித் தமக்கு மீட்டுத்தர எங்காவது, யாராவது இருந்தேயாக வேண்டுமெனத் திடமாக நம்பினார்.

ஆனால் அவ்வாறு யாராவது இருந்தாரோ இல்லையோ, அவரைத் தேடிக் கண்டு பிடிப்பதற்கான மும்முர முயற்சியனைத்தும் வியர்த்தமாகி விட்டன. சகல வித சௌகரியங்களும் சுற்றிலும் இருக்க, விசுவாசம் மிக்க தாதிகள் சிசுருஷை செய்ய, அரிதிலும் அரிதாகவே வாய் திறந்து பேசுபவளாய், நாற்காலியில் உட்கார்ந்து ஆடிய வண்ணமே நாட்களைக் கழித்து வந்

தாள், ஜென்னி. அமைதியாகவே அவள் இருந்தாள்; சொன்ன சொல்லுக்குக் கட்டுப்பட்டு நடந்தாள்; துக்க மேதும் அவளுக்கு இருந்ததாகவும் தோன்றவில்லை. கணவருக்குப் பின் ஐந்தாண்டு கழித்தே, 1924-ல் க்ளென் கோவில் அவள் உயிர் நீத்தாள்.

நடைப் பிணமாக ஜென்னி வாழ்வதால் விளைந்த மனப் போராட்டத்தில் சிக்கி ஃபிராங்க் தவிக்கையி லேயே மேலும் மேலும் அடிகள் விழுந்தன. அவரு டைய அன்புக்குரியவர்களை ஒவ்வொருவராகக் காலன் பறிப்பதாகத் தோன்றியது. கார்ஸன் பெக்கும், ஸிமூ ரும் ஒரே வாரத்துக்குள் இறந்தனர். இரு சாவுகளும் திடீரென்று நேர்ந்தன, திறப்பு விழா விருந்தின் போது திடமாகக் காணப்பட்ட மூரும் திடு மென மரித்தார். பழைய பாசபந்தங்களில் பற்றுடை யவர் ஃபிராங்க் வுல்வொர்த். ஆகவே, அந்தப் பிணைப் புகள் சட்டென அறுபட்டது அவருக்கு அதிர்ச்சியும், துயரமும் தந்தன. அவற்றையடுத்து விழுந்தது அனைத்திலும் பெரிய பேரிடி.

அவருடைய இரண்டாவது மகளான எட்னு வுல் வொர்த் ஹட்டன் தன் கணவருடனும், சிறு புதல்வி யுடனும் ஓட்டல் பிளாஸாவில் வாழ்ந்து வந்தாள். அவ ளுடைய காதில் ஏற்பட்ட கோளாறென்று சரியாகி விட்டதாகக் கருதப்பட்டது. ஆனால் ஒரு நாள் அவ ளுடைய அறையில் நுழைந்த ஓட்டல் பணிப்பெண் ணொருத்தியோ, படுக்கையில் அவள் இறந்து கிடக்கக் கண்டாள்.

மனமிடியச் செய்தவாறு இருந்த மனைவியின் நிலை, பழைய நண்பர்களின் மறைவு, அன்பு மகளின் மரணம்—இவை யாவும் நெடுங்காலமாக ஃபிராங்க் வுல் வொர்த்துக்கு அடித்துவந்த சுக்ர தசை ஓய்ந்து விட் டதையே குறிப்பதாகத் தோன்றின. அவருடைய

வியாபாரம் தொடர்ந்து ஓங்கித்தான் வந்தது. வுல்வொர்த் கட்டிடமும் அவர் எதிர்பார்த்த பெரும் புகழைத் திரட்டத்தான் செய்தது. ஆயினும் அவை அனைத்தும் அப்போது அவருக்கு அற்பமாகவே பட்டன. மேஜையடியில் மணிக்கணக்கில் உட்கார்ந்து வேலை செய்யத்தான் செய்தார் ; எனினும் தம் வாழ்க்கையையே அர்ப்பணித்த அந்த வேலையில் அவருடைய மனம் முன்போல் ஊன்ற மறுத்து விட்டது.

1919, ஏப்ரலில் ஒரு நாளிரவு தம் மேஜையை மூடி விட்டு, வார இறுதியைக் கழிப்பதற்காகக் கிளென் கோவுக்கு அவர் சென்றார். அன்று அவருக்கு உடல் நிலை சரியாக இல்லை ; மோசமாக ஒன்றுமில்லை, வெறும் சளிச் சுரமும் தொண்டைப் புண்ணும்தான் என்றார். ஆனால் மறு நாள் அவர் நிலை மோசமாகி விட்டது. அவருடைய வழக்கமான வைத்தியர் உடனே அவசரமவசரமாக நிபுணர்களைத் தருவித்தார். அவரிடம் பல கடுநோய்கள் குடிகொண்டிருப்பதாயும், தொண்டை ரணத்தினால் அவை முற்றியிருப்பதாயும் அவர்கள் கண்டு கூறினர்.

அவரைக் குணப்படுத்த இயன்றதனைத்தும் செய்யப்பட்டது. அவருக்கு அப்போது அறுபத்தேழு வயதுதான் ஆகியிருந்தது. அவருடைய குடும்பமோ நெடுங்காலம் வாழும் மரபு வழி வந்தது. ஆனால் அவரைப் பொறுத்தவரையில் அலுத்துச் சலித்துவிட்டார்; போதாக் குறைக்கு துயரச்சுமை வேறு அவர் மனத்தில் ஏறியிருந்தது, வாழ்வதற்கு இருந்த பற்றுக் கோடுகள் அனைத்தும் அநேகமாக மறைந்து விட்டன. ஆகவே 1919 ஏப்ரல் 8-ம் தேதியன்று அமைதியான முறையில் அவர் உயிர் துறந்தார்.

வுட்லான் புதை பூமியில் உள்ள அவரது மகத்தான கோரியில் அவருடைய பெயரும், தேதி விவரங்க

ளும் மட்டுமே பொறிக்கப்பட்டுள்ளன. தம்முடைய நினைவுக்குறிப்பைத் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பு மாத்திரம் அவருக்குக் கிடைத்திருக்குமானால் 'நியூயார்க் ஸன்' எழுதிய இவ்வரிகளே அவருக்கு மெத்தப் பிடித்திருக்கும் எனலாம் :—

"பெருஞ்செல்வம் திரட்டினார் அவர்—குறைந்த அளவுப் பண்டங்களை மிகுந்த விலைக்கு விற்றதன் மூலமல்ல ; குறைந்த பணத்துக்கு நிறைந்த அளவுப் பண்டங்களை விற்கலாம் என்பதைக் காட்டியதன் மூலமே அவ்வளவையும் அவர் ஈட்டினார்."

முற்றும்.

# இந்தநூல்.....

"சிறு துளி பெருவெள்ளம்" என்ற இந்தநூல் முயற்சியால் முன்னுக்கு வந்த ஏழை விவசாயச் சிறுவனின் வாழ்க்கையாகும்.

தந்தை மகனைப் பயிர்த் தொழிலில் ஈடுபடுத்த விரும்புகிறார். மகனோ வியாபாரத் துறையில் இறங்கவே விரும்புகிறான். முதலில் ஒரு கடையில் எடுபிடி பையனாக வேலை கிடைப்பதே பெரு முயற்சியாகிவிட்டது. அந்த நிலையிலிருந்து சொந்த வியாபாரம் தொடங்கிப் பல தோல்விகளைக் கண்டு முடிவில் தன் லட்சியத்தில் வெற்றி பெற்றுக் கோடிக் கணக்காகப் பொருளீட்டி "வர்த்தக கோபுரம்" என்ற வானளாவிய மாளிகையையும் கட்டி உலகப் புகழ் பெற்ற வுல்வொர்த் என்ற ஏழைச் சிறுவனின் வாழ்க்கை இது.

தமிழ் நாட்டு இளைஞர்களுக்கு இந்தநூல் ஒரு வழிகாட்டியாக இருக்கும் என்று நம்புகிறோம்.


## ஜோதி நிலையம்

சிறந்த உலக இலக்கியங்களை தமிழில்
வெளியிடும் முதன்மையான ஸ்தாபனம்.

Wrapper Printed at
Commercial Printing & Publishing House Madras-1